பொருட்படுத்தாது மீண்டும் மீண்டுங் குலைக்கலாயிற்று. இதற்குள் அத் திருடரிற் சிலர் அச் செட்டியாரது பணப் பெட்டியைத் திறந்து, அப் பொற்கழுத்துப் பட்டிகையை யும் பிற நகைகளையும் எடுத்துக்கொண்டு ஓடமுயன்றனர். ஆனால், அந் நாயோ அவர்களை ஓடவிடாமல் மறித்துக் குலைத்துப் பேரிரைச்சல் இட்டமையால், அவ் வீட்டவர் களும் அண்டை அயலாரும் விழித்து ஓடி வந்து அத் திருடர்களைப் பிடித்துக்கொண்டனர். அச் செட்டியாருந் தம்முடைய நகைகளை மீண்டும் பெற்றனர். இதனால் மிகவுங் களிப்படைந்த அச் செட்டியார் அந் நாய் செய்த உதவியைப் பெரிதும் வியந்து, அந் நாயின் தலைவன் பட்ட கடனை விடுவித்து, அங்ஙனந் தாம் விடுவித்ததனை ஒரு துண்டுக் கடிதத்தில் வரைந்து, பின்னர் அக் கடிதத்தினை ஒரு சுருளாக்கி அதன் கழுத்திற்கட்டி, அந் நாயினையும் விடுதலை செய்தனர்.

விடுபட்ட நாய் இரவெல்லாம் மகிழ்ந்தோடிவந்து விடியற்காலையில் தன் தலைவன் இருக்கும் இடத்தண்டை அடைந்தது. அதனைக் கண்ட அதன்றலைவன் "கடை கெட்டநாயே! நான் கொடுக்கவேண்டிய கடனை வந்து தீர்க்கும்முன் நீ ஏன் இங்கு ஓடிவந்தாய்?" எனச் சினந்து ஒரு தேங்காய்ப்பருமன் உள்ள ஒரு கருங்கற் றுண்டை யெடுத்து அதன்மேல் உரமாய் வீசினன். அக்கல் லெறி பட்டதும் அந் நாய் சுருண்டு வீழ்ந்து அலறி இறந்தது.

அதன்பின் அத் தலைவன் அந் நாயின் கழுத்தில் ஒரு கடிதச் சுருள் கட்டியிருக்கக் கண்டு, அதனைப் பதைபதைப் புடன் அவிழ்த்துப் பார்க்க, அது தமக்குச்செய்த பேருதவி யையும், அதனாற் கடனைவிடுவித்து அந் நாயையும் விடுதலை செய்வித்த தமது மகிழ்ச்சியையும் அச் செட்டியார் எழுதி

யிருத்தல் நோக்கி, அவன் தன் நன்றியறிவுமிக்க நாயை ஆராயாமல் விரைந்து கொன்ற பிழையை நினைந்துநினைந்து ஆற்றாது நெஞ்சம் நெக்குருக லானான். பின்னர் அதன் நன்றியை நினைவுகூர்தற்கு அறிகுறியாகவே அதற்கொரு சிறு கோயிலுங் கட்டிவைத்தான்.

## 3. ஒரு தாயின் நல்லெண்ணம்

ஊமையுஞ் செவிடுமாயுள்ள ஒரு பெண்மகள் ஒருவனுக்கு மணஞ்செய்விக்கப்பட்டுச் சில்லாண்டுகளில் ஒரு பெண்மகவினை ஈன்றாள். தான் பிறர் பேசுவதைச் செவியினாற் கேட்டுத் தெரிந்துகொள்ளுதல் கூடாவிட்டாலும், பிறர் தம் வாயின் இதழ்களை அசைத்துப் பேசுவதுபோல் தான் பேசுதல் இயலாவிட்டாலுங், காதினாற் கேட்பதும் வாயினாற் பேசுவதும் நலஞ் சிறந்தனவாக இருக்கவேண்டுமென்றுந், தனக்கு அவ் விரண்டும் இல்லாதது ஒரு பெருங் குறைபாடே யென்றுந் தனக்குள் எண்ணிவந்தாள். ஒரு நாள் அவள் தான் ஈன்ற மகவினைத் தொட்டிலிற் கிடத்தி அதன் பக்கத்தே அமர்ந்திருக்கையில், தன்னைப்போலவே தன் பிள்ளையும் ஊமையுஞ் செவிடுமாயிருக்குமோ, அல்லது மற்றவர்களைப்போற் பேசவுங் கேட்கவும் வல்லதாயிருக்குமோ என்று ஐயுறவுகொண்டு கவலைப்படுவாளானாள். தன் மகவு வளர்ந்து நடமாடும்போதன்றோ அது பேசவுங் கேட்கவும் வல்லதென்பதை அவள் குறிப்பாக அறியக் கூடும். ஆனால், அதுவரையில் தன் மகவின் நிலையை அறியாமலிருத்தல் அவளால் இயலுமோ! மனந்துடிக்கின்றது! என் செய்வாள்! பாவம்! முடிவாக அவள் உள்ளத்தில் ஒன்று தென்பட்டது. உடனே தன் அருகாமையிற் கிடந்த ஒரு குழவிக்கல்லை யெடுத்துக் கொணர்ந்து, தன் மகவு உறங்குந் தொட்டிலின் பக்கத்தே நிலத்தின்கண்,

திடுமென எறிந்தாள். எறிந்த அக் குழவிக்கல் நிலத்திற்
றாக்கி யெழுப்பிய பேரோசைகேட்டு உறங்கியமகவு திடுக்
கிட்டு விழித்து வாய்திறந்து அழுதது. அக் குறிப்பினைக்
கண்ட அத் தாய் தான் ஈன்ற மகவுக்கு ஓசையைக் கேட்குஞ்
செவியுணர்வுங், கேட்டு வாய்திறந்து அழுதமையால்
வாயாற் பேசுந்தன்மையும் உண்டென்பதறிந்து மகிழ்ச்சி
யாற் கண்ணீர் சிந்தினாள்.

## 4. ஒரு கௌதாரியுங் குறவனும்

ஒருகால் ஒரு குறவன் ஒரு சிறு காட்டின்கண்
வைத்த கண்ணியில் ஒரு கௌதாரிப் பறவை அகப்பட்டுக்
கொண்டது. அதனை அவன் அந்தக் கண்ணியினின்றும்
எடுத்துத் தன் உணவுக்காகக் கொல்லப்போகையில், அஃது
அவனை நோக்கி, "ஐய! என்னைக்கொல்லாமல் விட்டுவிடு!
யான் உனக்கு வேலைக்காரனாயிருந்து மற்றைக் கௌதாரிப்
பறவைகள் கூட்டங்கூட்டமாய் வந்து உனது வலையில்
அகப்பட்டுக் கொள்ளும்படி செய்வேன்," என்றது. அது
கேட்ட அக் குறவன், "நின் நண்பர்களை எல்லாங் கொன்று,
நீ மட்டும் உயிரோடிருக்க எண்ணுகின்றாய்; ஆதலால், நீ
விரைந்தொழியக் கடவாய்," என்று விடை பகர்ந்தனன்.

## 5. ஒரு பெண்பிள்ளையும் பெட்டைக்கோழியும்

நாட்டுப்புறம் ஒன்றில் ஒரு மாது பெட்டைக்கோழி
யொன்றனை வளர்த்துவந்தாள். அக் கோழி நாடோறும்
ஒரு முட்டையிட்டு வந்தது. இதுகண்ட அப் பெண்மகள்,
"எனது கோழி நாடோறும் ஒரு முட்டைதான் இடு
கின்றது; இனி அது நாள் ஒன்றுக்கு இரண்டு முட்டை
யிடும்படி செய்வேன்" என்று தனக்குட் சொல்லிக்கொண்டு

பிறகு ஒவ்வொருநாளும் முன் கொடுத்ததற்குமேல் இரண்டத்தனை மடங்கு வாற் கோதுமை அதற்கு இரையாகக் கொடுக்கத் தலைப்பட்டாள். இங்ஙனம் அவள் மிகக் கொழுமையான தீனி கொடுத்துவரவே, அப் பெட்டைக் கோழி தன் உடம்பினுள்ளே கொழுப்பு மிகுதியாக வளரப் பெற்று, ஒரு முட்டைதானும் ஈனுமல் மலடாய்ப்போயிற்று.

## 6. சுருக்கமான நல்லறிவு

விலையுயர்ந்த கொழுமையான உணவுகளையே மிகுதியாய்த் தின்றுவந்தமையாற், கை கால் பிடிப்புநோய் கொண்டு வருந்திவந்த ஒருவர் தமது நோய்க்கு மருந்து கேட்கும் பொருட்டுப், புகழ்பெற்ற மருத்துவர் ஒருவர்பாற் சென்றார். சென்று அவர்க்குத் தமது நோயின் தன்மையை எடுத்துரைக்க, அதுகேட்ட அம் மருத்துவர், "நீர் நாடோறும் ஆறு அணவுக்கு மேற்படாத உணவு கொண்டால் அந் நோய் தீரும்," என்று மொழிந்தார்.

## 7. நரியுஞ் சேவலும்

ஒருகால் ஒரு நரி சேவல் ஒன்றிருக்கும் இடத்தண்டை வந்து, அதனைப் பிடித்துக்கொண்டு போவதற்குச் சூழ்ச்சி செய்தது. உடனே தன் அறிவிற்பட்டபடி அது சேவலை நோக்கி, "உன் தந்தை பாட்டுப் பாடத் தெரிந்ததுபோல, உனக்குப் பாடத்தெரியுமா வென்று அறிய விரும்புகின்றேன்," என்றது. அவ்வாறு அது சொல்லியதைக் கேட்ட சேவல் உடனே தன் கண்களை மூடிக்கொண்டு கூவிப்பாடத் தொடங்கிற்று. அது கண்மூடிய நேரத்தில் நரி அதன்மேற் பாய்ந்து அதனைக் கௌவி எடுத்துக் கொண்டு ஓடலாயிற்று. அவ்வூரில் உள்ளவர்கள் அதனைக் கண்டு, "ஐயோ! நரி சேவலைத் தூக்கிப் போகின்றதே!"

எனக் கூவினர். அப்போது சேவல் நரியை விளித்து, "ஐய! ஊரார் சொல்வதை நீங்கள் அறியவில்லையா? தமக்கு உரிய சேவலை நீங்கள் எடுத்துச் செல்கின்றீர்கள் என்கின்றார்களே. யான் உங்களுக்கு உரியேனன்றி அவர்களுக்கு உரியேன் அல்லன் என்பதை அவர்கட்குச் சொல்லுங்கள்," எனப் புகன்றது. அங்ஙனம் அது புகன்றபடியே நரி தன் வாயைத் திறந்து, "இஃது எனக்குரியது, உங்களுக்கு உரியதன்று," எனக் கூறவே, சேவல் நரியின் வாயினின்றுந் தப்பிப் பறந்துபோய் ஒரு மரத்தின்மேல் அமர்ந்தது. அமர்ந்து, "யான் அவர்களுக்கு உரியேனன்றி, நினக்கு உரியேன் அல்லன்," எனக் கரைந்தது. ஆகவே, நிலை யறியாமற் பேசுவது பிசகென்பது இதனால் அறியப்படும்.

## ரு. கடல்

பழைய தமிழ்நூல்களிற் கடலையுங் கடல சார்ந்த நிலத்தையும் 'நெய்தல்' என்று அறிவுடையோர் வழங்கியிருக்கின்றனர். கடல் என்னுஞ் சொற் கட்பார்வையினைக் கடந்துநிற்பது என்னும் பொருளைத்தரும். கடலினது எல்லை அதனை நோக்குவாரது கண்ணுக்குப் புலனாகாமையின், அஃது அங்ஙனம் பெயர்பெறலாயிற்று

இனிக், கடலானது எந்நேரமும் பேர் இரைச்சல் இடுவதுபற்றி 'ஆர்கலி,' 'நரலை,' 'குரவை,' 'அழுவம்' என்றும்; பரந்திருப்பதுபற்றிப் 'பரவை' என்றும்; ஆழ்ந்திருப்பதுபற்றி 'ஆழி' என்றும்; உப்புநீர் உடைமைபற்றி 'அளக்கர்,' 'பௌவம்,' 'உவரி' என்றும்; மழை முகிலை உண்டாக்குதல்பற்றிக் 'கார்கோள்' என்றும்; மழைநீர் ஆற்றுநீர் ஊற்றுநீர் மூன்றுக்குங் காரணமாதல்பற்றி 'முந்நீர்' என்றும் பல சொற்களால் வழங்கப்படுகின்றது.

கடற்காட்சியினைக் காணல்வேண்டினுற் சென்னை, நாகை, திருச்செந்தூர், தென்குமரி முதலான பட்டினங் களின் கடற்கரையோரங்களிற் சென்றிருந்து காணல் வேண்டும். விடியற்காலையிலே ஞாயிறு கிழக்கே தளதள வென்று எழும்போது உண்டாகும் கடலின் தோற்றம் பெரிதும் உள்ளத்தைக் கவருந்தன்மையதாய்ப் பொலிகின் றது. பகலவன் எழுதற்குமுன் நீலநிறமாயிருந்த ஆர்கலி யின் நீர்ப்பரப்பு அவனது ஒளிபாய்ந்த அளவிற் பச்சென்ற நிறமுடையதாக மாறி மினிர்கின்றது; ஞாயிற்றின் கதிர்கள் அதன்மேற் றுள்ளுவதுபோற் காணப்படுகின்றன. கடலின் பரப்புங் கீழ்பால் வானும் ஒரு பெருவிளக்கமுடையதாய்த் திகழ, அவை இரண்டன் ஓரங்களும் பொருந்தும் இடத்தே கதிரவன் நெருப்புத் திரளைபோற் றோன்றுங் காட்சி, இவ் வுலகமே தன் வாயைத் திறந்து தன் அகத்திருந்த ஒரு பெருந் தீக்கட்டியினைக் கக்குதல்போ லிருக்கின்றது.

அப்போது கடல்நீர் குன்றின் குவடென உயர்ந்து, பிறகு சுருண்டு கீழ்விழுங்கால் வெள்ளை வெளேல் என்ற அலைகளை யுண்டாக்க, அவ்வலைகள் ஓவென இரைந்து வருதலைப் பார்க்கும்போது, அவை, போர்முனையில் வரிசை வரிசையாக நிறுத்தப்பட்ட வெள்ளைக் குதிரைகள் தம் முடைய கழுத்திலிருந்து தொங்கும் வெள்ளிய கூந்தல் அலையஅலையக் கனைப்பொலியுடன் பாய்ந்து வருவதுபோல் தோன்றுகின்றன.

அந்நேரத்தே பாய்கட்டிக் கப்பல்களும் நீராவிக்கப்பல் களுங் கரைகாணப்படாத அப் பரவையினூடு தன்னந் தனியே செல்லுதலைக் காண்கையில், நமதுள்ளத்தே ஒரு வியப்பும் அச்சமும் உண்டாகின்றன. எல்லையும் ஆழமுந் தெரியாத இப் பெருநீரிலே இம் மரக்கலங்கள் எங்ஙனம்

எல்லை கண்டு செல்கின்றன! இவைதம்மை எல்லை கண்டு செலுத்தி அப்பாலுள்ள நாடு நகரங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும் மீகாமனுடைய கருத்துங் கூர்த்த அறிவும் உணர்ந்து பார்க்குங்காற் பெருவியப்பினை விளைக்கின்றன அல்லவோ! ஆழமும் அறியாமற், காற்றுக்கும் மழைக்கும் உள்ளாகிக், கடவுளையன்றி வேறொரு துணையும் இல்லாமற் செல்லும் அக் கப்பல்களைக் காணும் போது அச்சமும் உண்டாகின்றது. கரையிலிருந்து நோக்கு வார்க்கே இத்தகைய வியப்பும் அச்சமுந் தோன்றுமானால், நடுக்கடலிற் கப்பலிலிருந்து சுற்றி ஒரே வெள்ளக்காடா யிருத்தலை நோக்குவார்க்கு இன்னும் எத்தனை வியப்புந் திகிலும் உண்டாகா நிற்கும். ஒருகால் யாம் தூத்துக் குடியிலிருந்து கப்பலேறிக் கொழும்பு மாநகர்க்குச் செல்லா நிற்கையில் இத்தகைய நிகழ்ச்சியால் எமது நெஞ்சம் அசைவுண்டது. யாம் கப்பலேறிய நேரம் மாலை. கப்பல் துறைமுகத்தைவிட்டுப் புறப்பட்டுப் போய்க்கொண்டிருக் கையில் நள்ளிரவிலெழுந்து கடலையும் வானத்தையும் நோக்கினேம். வானில் வெண்டிங்கள் நிலவொளி விரித்து வயங்கியது. அவ்வொளி பட்டுக் கட்புலனுக்கு விளங்கா நின்ற கடலிடமெல்லாந் தூய வெண்பட்டாடை விரிக்கப் பட்டாற்போல் வெளேலென ஒளிர்ந்தது. ஆ! அக் காட்சி யின் வனப்பை என்னென்பேம்! அதனைக் கண்டு வியந்த வண்ணமாய்ச் சுற்றிலும் பார்வையைச் செலுத்தி எட்டி நோக்கத், தொலைவிலுள்ள பௌவத்தின் பரப்பு வரவர மங்கலாய் இருளோவெனத் தோன்றியது! அருகிற் காணப் படும் நிலவொளிப் பரப்பிலிருந்து, தொலைவிற்றோன்றும் இருள்மிகு பரப்பினுட் கப்பல் தனியே விரைந்துசெல்லுஞ் செலவினைக் கண்டு எமதுள்ளத்தே முன்னறியாத ஒரு நடுக்கந் தோன்றியது! யாம் ஏறியிருந்த அக் கப்பலின்

தனிமையையும், அதனுள்ளிருக்கும் எமது தனிமையையும் நினைந்து, அந்நேரத்தில் எல்லாம்வல்ல ஆண்டவன் துணையையன்றி வேறேதும் இல்லாமை கண்டு எமது நெஞ்சம் நெக்குருகியது! கடவுள்நம்பிக்கை யில்லாத அறிஞர் எவரேனுங் கப்பலேறிச் செல்வராயின், அவர்க்குக் கடவுள்நம்பிக்கை தானே உண்டாகுமென அப்போது நன் குணர்ந்தேம். ஆராய்ச்சியும் அறிவும் இல்லாமல் விலங் கினங்களைப்போற் கப்பலேறிக் கடல் கடப்பாரைப்பற்றி இங்கே நினைக்கவேண்டுவதில்லை. ஆராய்ச்சியும் அறிவும் உணர்வெழுச்சியும் உடையாரே மரக்கலச் செலவால் அறிவும் இன்பமுங் கடவுள் நம்பிக்கையும் எய்துவர் என் றுணர்தல் வேண்டும்.

இன்னுங், கடலுக்கு அருகாமையிலுள்ள ஓர் உயர்ந்த மலைமேலேறிக் கடற்பரப்பினையும், அதனையடுத்த துறை முகப் பட்டினத்தையும் நோக்குவார்க்கு, இறைவன் வகுத்த இயற்கைக் கடலமைப்பும், மக்கள் வகுத்த ஒரு பட்டினத் துறைமுகச் செயற்கை அமைப்பும் ஒருங்கு இணைந்து, ஒரு பெரும் புதிய காட்சியினைப் பயந்து, அவரது உள்ளத்தினை இன்னும் ஆழ்ந்த நினைவிலே புகுத்தாநிற்கும். இறைவன் வகுத்த இயற்கையமைப்புகள் எங்ஙனம் அழகும் பயனும் வாய்ந்து திகழ்கின்றனவோ, அங்ஙனமே மக்கள் எழுப்பிய உயர்ந்த மாடமாளிகைகளுந் தொழில்நிலையங்களும் அவை தம்முட் பலவற்றின் கொடுமுடிகளுங் காட்சிக்கினியவாய்ப் பயன்சிறந்து திகழாநிற்கின்றன. இதனை யெண்ணிப் பார்க்கையில் மக்களின் அறிவும் முயற்சியுங் கடவுளின் அறிவுமுயற்சிக்கு ஒருபுடையொத்த தெய்வத்தன்மை வாய்ந்தனவாகவே தோன்றுகின்றன. இயற்கைப்பொரு ளியக்கங்கள் ஒரோவொருகால் மக்களின் அறிவு முயற்சி யைச் சீர்குலைத்துச் சிதைப்பனவாய் இருப்பினும், அவற்றிற்

கஞ்சித் தமது முயற்சியைக் கைசோரவிட்டு அறிவு குன்றிப்போகாமல், அவர்கள் மேன்மேல் அறிவு மிகப் பெற்று, அதனால் அரிய பெரிய முயற்சிகள் செய்து அவற்றொடு போராடி வெற்றிகொண்டு நிற்கும் பேராண்மை, மலைமேலிருந்து இவ்விரு வேறு அமைப்புக்களையும் நோக்குதலால் நங்கட்புலனெதிரே நன்கு விளங்கா நிற்கின்றது. அங்கும் இங்குமாய் அலையுங் கடலின் எதிரே உயர் நிலை மாடங்களுந் தொழில்நிலையங்களும் அலைவின்றி வீறிநிற்குங் காட்சி அறிவுடை மக்களின் அசையாவுள்ளப் பான்மையினை அறிவிக்கின்றதன்றோ?

இனிக், கடலின் பரப்பு, இந்நிலத்தின் பரப்பைவிட மும்மடங்கு பெரியதாயிருக்கின்றது. ஆனதனாற்றான் தமிழ்மக்கள் அதனைப் 'பரவை' என்று வழங்கிவருகின்றனர். நிலத்தைவிட நீரின் அளவு இத்துணை மிகுதியாய் இருக்கவேண்டுவது ஏன் என்று ஆராய்ந்து பார்த்தால், நிலம் வன்பொருளாயும் நீர் மென்பொருளாயும் இருத்தலினாலும், நிலத்தின்கட் பயிராகும் பயிர் பச்சைகள் முதற் சிற்றுயிர்கள் பறவைகள் விலங்குகள் மக்கள் ஈறான எண்ணிறந்த கோடி யுயிர்களின் உயிர்வாழ்க்கைக்குங் கடலின் கண் உயிர்வாழும் அளவிறந்த கோடி உயிர்களின் உயிர் வாழ்க்கைக்குமெல்லாம் நீரின் உதவியே இன்றியமையாததாய் இருத்தலினாலும், நிலமானது தன்னளவில் மாறாமல் நிற்க நீரானது நிலத்தினுட் சுவறுவதொடு மீண்டும் மழையாய் இறங்குதற்கு ஆவியாக மாறி வானின்கண் முகிலாய் உலவவேண்டியிருத்தலினாலும், நிலத்தை வளமுடையதாக்கி உயிர்களைப் பல்கச் செய்யும் நீர், நிலத்தினும் மிகுந்த அளவினதாக இறைவனால் அமைத்துவைக்கப்பட்டதென்று உணர்தல் வேண்டும்.

இனிக், கடலைவிட ஆழத்தின் மிக்கதொரு நீர்நிலை எங்கும் இல்லாமையால், 'ஆழி' என்னும் பெயர் கடலுக் குரியதொன்றாகப் பண்டுதொட்டுத் தமிழில் வழங்கி வருகின்றது. நமது இவ் விந்திய நாட்டை யடுத்திருக்கும் "இந்திய மாக்கடல்" பெரும்பான்மையான இடங்களிற் பன்னீராயிர அடி அல்லது சிறிதேறக்குறைய இரண்டே கால் மைல் ஆழமுடையதாக இருக்கின்றது; மற்றுச் சிற்சில இடங்களிலோ அஃது இரண்டேகால் மைலுக்குமேல் நாலே கால்மைல் வரையில் ஆழமுடையதாக ஆராய்ந்தறியப்பட் டிருக்கின்றது. சாவகத் தீவுக்குத் (Java) தென்னண்டையி லுள்ள கடற்பகுதியோ நாலேகால் மைல் ஆழமுடைய தொன்றாக ஆராய்ச்சிவல்ல ஆசிரியரால் அளந்து காணப் பட்டிருக்கின்றது. இனி, இவ் விந்திய மாக்கடலினும் ஆழ முடையது "அட்டுலாந்திகு" மாக்கடலேயாம்; தென் அமெரிக்காவுக்கும் வட அமெரிக்காவுக்கும் இடையிலே யுள்ள மேல் இந்தியத் தீவுகளின் வடக்கே நிற்கும் இம் மாக்கடற் பகுதியின் ஆழம் சிறிதேறக்குறைய நாலேகால் மைல் ஆகும். இனி, இப் பெருங்கடலினும் ஆழம் வாய்ந்தது "அமைவுப் பெருங்கடலே" யாகும். இஃது அமெரிக்காப் பெருந்தேயத்திற்கும், ஆசியா ஆத்திரேலியாப் பெருந்தேயங்கட்கும் இடையிலே நிற்கின்றது. இது சிற்சில இடங்களில் ஐந்து மைல் ஆறு மைல் ஆழமும் வாய்ந்ததொன்றாக அளந்தறியப்பட்டுள்ளது. இன்னும் இஃது எவ்வளவு மிகுதியான ஆழமுடைய தென்பதனை முற்றும் அளந்து காண்டல் இயலாததாய் இருக்கின்றதென ஆராய்ச்சி வல்ல ஆசிரியர் நுவல்கின்றனர். எனவே, இந் நிலவுலகத்தைச் சூழ்ந்த பேராழியின் ஆழம் ஆறுமைல் வரையிற் செல்வதென்பது நன்கறியப்பட் டிருத்தலால், அக் காரணம்பற்றி அதனை 'ஆழி' யென வழங்குவது பெரிதும் பொருத்த முடைத்தாதல் காண்க.

இனிக், கடலின்கண் உள்ள நீர் உப்பாயிருத்தல் ஏன் என்றறிய அறிஞர் சிலர்க்கு அவா எழும். கடலுக்கு மிக அருகிலே உள்ள சில கிணறுகளில் தீஞ்சுவைத் தண்ணீர் கிடைப்பதாயிருக்க, அவற்றை யடுத்திருக்கும் கடலில்மட்டும் உப்பு மிகுந்திருத்தல் வியக்கத்தக்கதன்றோ? இவ் வேறுபாட்டிற்குக் காரணம் என்னையென்று ஆராய்ந்து பார்த்தாற், கடலின்நீர் மேல்நீராயிருப்பதும், அதனை யடுத்துள்ள நல்ல கிணற்றுநீர் கீழ்நீரா யிருப்பதுமேயா மென்பது புலனாகும். நிலத்தின் பல பகுதிகளிலும் மலைகண் மேலும் பெய்த மழை நீர் ஆங்காங்குள்ள பலவகை உப்பு களையுங் கரைத்தெடுத்து ஆறுகளின் வழியே கொணர்ந்து கடலின்கட் சேர்த்துவிடுகின்றது; விடவே, கடன்மேல் நிற்கும் நீர் உப்புடையதாகின்றது. மற்றுக், கடலடுத்த கிணற்று நீரோ கிணற்றின் அடிப்படையிலிருந்து மேலே சுரப்பது; அவ் வடிப்படையிலுள்ள நிலம் உப்பில்லாத தாயின் அதன்கட் சுவறிய மழைநீருந் தூயதாய் இன்சுவை மிகுந்து பருகுதற்குப் பயன்படுவதாய் நிற்கும். அவ் விருவகை நீரும் வேறுபடுதற்குக் காரணம் இவையே யாதல் கண்டுகொள்க. கடல் நீரில் எழுவகை யுப்புகள் கரைந்து கலந்திருக்கின்றனவென்று அறிஞர்கள் பகுத்துணர்ந்திருக் கின்றார்கள். இங்ஙனமாகக் கடல் உப்புநீர் உடையதாதல் பற்றியே, அஃது 'அளக்கர்,' 'உவரி' முதலிய பெயர்களால் வழங்கப்பட்டு வருகின்றது. இவ்வாறெல்லாந் தமிழ்மக்கள் பண்டுதொட்டுக் கடலுக்கு வழங்கிவரும் பல பெயர்களைக் கொண்டு, அவர்கள் இவ் வையஞ்சூழ்ந்த கடலின் இயற்கைத் தன்மைகள் பலவும் நன்கு ஆராய்ந்துணர்ந்தவர்களாதல் தெளிந்து கொள்ளப்படுமென்க.

## ௬. கல்வியும் ஓய்வும்

"கல்வி கற்பவர்களுக்கு இடையிடையே ஆறியிருத்தலும் ஓய்ந்திருத்தலும் பயன் தருவனவாகும். மக்களின் மனமானது, வளைக்கப்படாதவரையில் வலுவுடையதாயிருக்கும் ஒரு வில்லின் தன்மையை யொத்ததாயிருக்கின்றது. என்றாலும், ஒருவன் தன் உள்ளத்தின் ஓட்டத்தை எப்போது தடுத்தாளல் வேண்டும், அல்லததனை எப்போது விடுத்தாளல் வேண்டும் எனப் பகுத்துணர்ந்து நடக்கின்றானே அதுதான் அவனது உணர்வுக்குச் சிறந்த தன்மையாகும். இருவகையிலும் ஒரு கட்டுப்பட்டு நடவாமல் மிகு மும்முரமாய் நடக்கும் ஓர் ஆண்மகனை யான் அறிவேன்; அவனுக்கு நடுப்பட்ட நிலைமை யென்பதொன்றில்லை; தான் செய்யுங் கல்விப்பயிற்சியை எப்போது விட்டுவைக்க வேண்டும், மறுபடியும் எப்போது தொடங்கவேண்டுமென்னும் அறிவும் அவனுக்கில்லை. அவன் ஏதாவதொன்றை எழுதப் புகுந்தானாயிற், பகற்பொழுதோடு இராப்பொழுதினையும் ஒருங்கு சேர்த்துக்கொண்டு, தானாகவே களைத்துக் கீழ்விழும் வரையில், தன்னை நெருக்கிப் பிழிந்தபடியாய்ச் சிறிதும் ஓய்வெடாது அதனைச் செய்வன். பிறகு அதனைவிட்டு வேறு முகமாய்த் திரும்புவனாயின், எல்லா வகையான விளையாட்டுகளிலும் அவன் ஒரு வரைதுறையின்றிப் புகுந்து ஈடுபட்டிருப்பன்; மீண்டும் அவன் நூல்களைக் கையில் எடுக்கும்படி செய்வது எளிதிற் கூடுவதன்று; என்றாலும், எப்படியோ அவன் திரும்ப நூல் ஓதத் துவங்குவனாயின், அம் முயற்சியில் வரவர அழுந்தி அதனோடு உருகி ஒன்றுபட்டுப் போவன்; அப்போது அவனுடைய அறிவாற்றல்கள் முற்றும் புதுக்கப்பட்டுத் தோன்றும்; தன்னளவுக்கு மிஞ்சியே தான்

விழைந்ததனைச் செய்திடுவன். அங்ஙனம் மட்டுப்படாது செல்லுதலால், அவனது கல்விப் பயிற்சியையும் அளவு படுத்துதல் ஏலாது. தனக்குள்ள அறிவாற்றல்களை எவ்வாறு ஒழுங்குபடுத்தல் வேண்டும், அவற்றை எவ்வாறு அளவு படுத்தி நடப்பித்தல் வேண்டும் என்பதனை அவன் எட்டுணையும் அறியான்; அவனது மட்டுப்படா ஆற்றல் அவனுக்கே மாறாய் நின்றது. அவன் அறிவில் வல்லவனாயிருந்த தொன்றுமட்டும் அன்று; பேசுதலிலும் எழுதுதலிலும் அவனை ஒப்பாரும் மிக்காரும் எவருமே யில்லை. எனினும் அவனது கூர்த்த அறிவு வெளியே புலப்படுவதில்லை; அது புலப்படுவது ஒரு குற்றமாக அவனது பகுத்தறிவுக்குத் தோன்றியது; ஏனென்றால், ஒளிக்கப்பட்டதைவிட ஒளிந் திருப்பதே தீங்கு பயப்பது. அவன் தான் பேசும் மொழி களை -ழைப்பெடுத்துப் பேசுவதில்லை; கட்டாயமாக இருந்தால் அல்லாமல், அல்லது ஏதேனும் ஊதியம் வருவதாய்க் காணப்பட்டால் அல்லாமல், அவன் தான் வழக்கமாய்ப் பேசும் பெரும்பாட்டையை விட்டுப் பிசகிப்போவதில்லை. எதனாலெனின், தான் பேசும் பொருளை விளக்குதற்குத் துணையாயினல்லது, வெறும் வனப்புக்காக உவமை உருவகங்களைக் கட்டிச்சொல்லுதல் ஆகாதென்பது அவன் கருத்து. ஒழுங்காக இருக்கவேண்டுவதொன்றனைத் திரிபு செய்தலும் பிணித்தலும் அளவுக்கு மிஞ்சி வெறிபிடித்தவர் தஞ் செய்கையே யாமென்று அவன் எண்ணினான்.

## வறுமை

“ வறுமையானது தகாத செயல்களைச் செய்யும்படி மக்களை ஏவுகின்றது; ஆயினும், நேர்மையுள்ளவர்கள் அத் தகைய செயல்களைச்செய்தல் ஆகாது. வறுமைவந்த காலத் திலேதான் அவர்கள் தமது மனநிலையை உரப்படுத்துதல்

வேண்டும். ஒருவன் பசித்து வருந்தினும் பிறரைச் சார்ந்து பிழைத்தல் தக்கதன்று.

### வாழ்க்கையே நாடகம்

"நமது உயிர்வாழ்க்கை முழுதும் ஒரு நாடகமே எனக் கருதுகின்றேன். அதில் ஒவ்வொருவனுந் தன்னை மறந்து பிறனொருவனைப்போல் நடக்கப் பாடுபடுகின்றான். நாம் நம்முடைய உண்மை நிலைக்குத் திரும்பமாட்டாதவர்களாய்ப் பிறரைப் பார்த்து அவர்களைப்போல் நடப்பதிலேயே உறைத்து நிற்கின்றோம். இஃது எதனை ஒத்திருக்கின்றதென்றால், இளஞ்சிறார் தெற்றுவாய் உடைய சிலரைப் பார்த்து, அவரைப்போல் தாமுந் தெற்றித்தெற்றிப் பேசுதலையே ஒத்திருக்கின்றது. அங்ஙனம் அச் சிறுவர் தெற்றித் தெற்றி நெடுகப் பேசிவரவே, சிறிது காலத்தில் அவர்களுந் தெற்றுவாய் உடையராகின்றனர். முதலிற் பழகிய அத் தீயபழக்கம் பின்னர் எக்காலும் மறக்கப்படாத வேறோர் இயற்கையாய் விடுகின்றது." என்று நாடக நூலாசிரிய ரொருவர் (Ben Jonson) அறிவுரை புகல்கின்றார்.

---

## எ. ஒரு கிண்ணந் தண்ணீர்

முதலில் ஆடுமேய்க்கும் இடையனுயிருந்து பின்னர்க் கடவுளின் றிருவருளால் அரசியல் நிலைக்கு உயர்த்தப் பட்டுச் செங்கோல் செலுத்திய பண்டைக்காலத்து மன்னன் ஒருவன் (David), தன்மேற் பகைகொண்ட வேறொரு கொடுங்கோன் மன்னனாலும் நாகரிகமில்லாக் கொடிய ஒரு கூட்டத்தாராலும் இருபக்கமுந் துன்புறுத்தப்பட்டு, அதனால் தனது அரச வாழ்க்கையைத் துறந்து, அருமைப் பெற்றோர்களைப் பாதுகாவலான ஓரிட

கொண்டுபோய் வைத்துத், தான் மேய்ப்பனாயிருந்தபோது அறிந்திருந்த ஒரு சுக்கான் கல்மலைப்பாங்கு சென்று அங்குள்ள குகைகளையே தனக்கு உறைவிடமாய்க் கொண்டிருந்தான். கடவுளின் அருளுக்கு உரியனான இம் மன்னன் இங்ஙனம் ஏழைமை நிலையை அடைந்தானாயினும், அவனது தெய்வத்தன்மையானது அவன்றன் படைவீரர் பலரை அவன்பால் வருவித்தது; மனத்துயர் கொண்டோருங், கடன்பட்டு நொந்தோரும், மனக்குறையுடையோரும் அவன்பால் இருத்தலை விரும்பி அவனிடம் வந்து குழுமினர்; இவர்களுட் சிலர் படைஞரா யிருந்தகாலத்து வென்றியிற் சிறந்து முதன்மைபெற்று விளங்கினோராவர். இவர்கள் எல்லாருந் தம் இளைய மேய்ப்ப மன்னன் சொல்வழி நடப்பவராய், எவர்க்கும் எந்தவகையிலுந் தீங்கு செய்யாது ஒழுகினோராவர். அவ்விளைய மன்னனோ மிடிப்பட்ட இந் நிலைமையிலும் இறைவனை மறவாதவனாய்த் தனது யாழை இயக்கிப் பல அருட்செம்பாடல்களை உளங்கரைந்து பாடும் வழக்கம் மேற்கொண்டான். அன்பும் அருளுந் ததும்பும் அவ் விசைப்பாட்டுகளைக் கேட்ட அப் படைவீரர்களெல்லாருந் தம்முடைய வறுமையையுந் துன்பத்தையும் மறந்து, கடவுள்பாற் கசிந்த உள்ளத்தினராகித், தம் மன்னன்பால் நிலைபெற்ற பேரன்புடையரானார்.

இம் மன்னனும் இவன்றன் படைஞரும் அடைக்கலம் புகுந்த அவ் வெறுமலைப்பாங்கு கதிரவன் வெப்பத்தால் அழற்சி மிக்கதாயிருந்தது. அம் மலைமுகட்டினடியிருந்த ஒரு பெரும் பிளவின் அடியிடமெல்லாம் உடைந்த கற்பாறைத் துண்டுகள் இறைந்துகிடந்தன. அதன் இருபுறத்துஞ் செங்குத்தாய் நின்ற கற்சுவர்களின் கரை ஓரத்தில் மலையாடுகள் அடிவைப்பதற்கும் போதுமான இடங் கிடையாது. இத்தன்மைத்தாகிய மலைப்பிளவின்கண் உள்ள

ஒரு செங்குத்தான குன்றின் உச்சியிலேதான் அவ் இடைய மன்னன் புகலிடமாய்க் கொண்ட ஒரு கொடுமுடி இன்னுங் காணப்படுகின்றது. அதன் குறுகிய வாயிலினுள்ளே நுழைந்து சென்றாற், படியடுக்குகள் உடைய குகை யொன்று சிறுகிய வழிகளும் பெருகிய மண்டபங்களும் மாறிமாறி வாய்ந்தனவாய் அமைந்திருத்தல் காணப்படும். என்றாலும், அவ்விடம் நெருக்கமாய் வெப்பம் மிக்கிருந்தது. ஒரு செடிதானும் மரந்தானும் இல்லாமல், ஆள்வழக்கம் அற்றுப், பாழாய், வெய்தென நிற்கும் அவ்விடத்தைத் தனக்குப் புகலிடமாய்க்கொண்ட அவ் இடைய மன்னன், தான் முன்னே அரசாண்ட இனிய செழுமையான நாட்டை யும், அதன்கண் ஆங்காங்குப் பச்சைப் பசேலென வளர்ந் திருக்குங் கோதுமைப் பயிர்களையுஞ், சன்னல் பின்னலாய்ப் படர்ந்திருக்குங் கொடிமுந்திரிக் கொடிகளையுங், குளிர்ந்த தீஞ்சுவைத் தண்ணீர் சுரந்து ஒழுகப்பெறும் வாவிகளையும், அவ் வாவிகளின் நீர்பாய்மடைகளின் பாங்கரிருந்து தான் முன்னர் இறைவன்மேல் இசைப்பாட்டுகள் மிழற்றின வகை களையும் எல்லாம் நினைந்து நினைந்து பெருமூச்செறிந்தான்! எறிந்து, "ஐயோ! யான் இருந்து இசைமிழற்றின அந் நீர்நிலையிலிருந்து ஒரு கிண்ணந் தண்ணீர் எவரேனும் எனக்குக் கொணர்ந்து கொடார்களா!" என்று ஆற்றாது கூறினான்.

அச்சொற் கேட்ட அவன்றன் படைஞரில் மூவர் தம் மன்னனது வேட்கையை நிறைவேற்றத் தீர்மானித்தனர். அவர்கள் புகலிடமாய்க்கொண்ட அம் மலையரணுக்கும், அரசன் அத்துணை ஆவலொடு வேண்டிய நீரினையுடைய வாவிக்கும் இடையே தமக்குப் பெரிதுந் தீங்கிழைத்த கொடிய காடவர் கூட்டம் படைகொண்டிருந்தது. என்றா லுந், தம் தலைவன்மேல் அவர்கள் வைத்த பேரன்பானது

அப் பகைவர் கூட்டத்திற்கு அஞ்சுமா! உடனே அம் மூவருந் தாமிருந்த உச்சிமலைப் பிளவினை விட்டுக் கீழ் இறங்கினர். எப்படியோ அவர்கள் அப் பகைவர் தம் படையி னூடே சென்று, தம்மரசற்கு விருப்பமான நீரூற்றிலிருந்து நீரை முகந்தெடுத்து, அதனைச் சுமந்தவண்ணமாய் அப் பகைவர் படையினூடுதானே திரும்பிப் போந்து, தமது மலையுச்சியின் கொடுமுடியில் அதனைக் கொணர்ந்து சேர்ப் பித்தனர். தம் தலைவனது வேட்கையை ஆற்றும்பொருட் டுத் தம்முயிரையும் ஒரு பொருட்படுத்தாது பகைவரூடு சென்று அவர்கள் அந் நீரினைக்கொணர்ந்த செயற்கருஞ் செயலை நோக்கவே, அம் மேய்ப்ப அரசனது நெஞ்சம் நெக்குருகலாயிற்று. அத்துணை அரிதிற்போந்த அந்நீர் மிகவும் புனிதமானதென்றும், அதனைத் தான் பயன்படுத் திக்கொள்ளுதல் தகாதென்றும் அவன் எண்ணினன். எண்ணி அந் நீரினை எடுத்து இறைவனது அருட்குறிமேற் சொரிந்து, தன் பேரன்பிற்கு அறிகுறியான கண்ணீரும் வார்ந்தொழுகிப் பேரின்ப வெள்ளத்திற் படிந்திருந்தான் என்பது.

## அ. ஒரு பொன் மீன்

மேலெடுத்துக் காட்டிய பேரன்பினனான இடைய மன்னன் நம் தமிழ் நாட்டுக்கு அயலதான மேல்நாட்டில் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்குமுன் இருந்தவன் ஆவன். அவனையொப்ப இறைவன்பாற் பேரன்பு பூண்டு ஒழுகினோர் இத் தமிழ்நாட்டகத்தும் பலர் பழங்காலத் திருந்தனர். அவருள் ஒருவர் செய்த செயற்கருஞ் செயலை ஈண்டு எடுத்துக்காட்டுவாம். சோழ வேந்தர்களின் தலை நகரங்களில் ஒன்றான நாகபட்டினம் என்பது கடற்கரையை

யடுத்துள்ளது. அந் நகரத்தின் கடற்கரையோரத்தின்கண் உளதாகிய செம்படவர் குப்பத்தில், இற்றைக்கு ஓராயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குமுற் செம்படவர் தலைவனான ஒருவர் எல்லாம்வல்ல இறைவன்பால் அளவிறந்த அன்புடையராய் உயிர்வாழ்ந்து வந்தனர். அவர்தம் ஏவல்வழி நிற்குஞ் செம்படவர்களை யெல்லாங் கடன்மேற் கட்டுமரங்களிற் செலுத்திக்கொண்டு சென்று, வலைவீசுவித்துப் பிடிப்பிக்கும் மீன்குவைகளை விற்றுப், பெற்ற பொருளைத் தம்மவருந் தாமுமாகப் பங்கிட்டுச் செல்வம் உடையரா யிருந்தனர்.

இவர் மீன் பிடிக்கும் வாழ்க்கையில் இருந்தனராயினும், எல்லாம்வல்ல இறைவன் நிலையினை யுணர்ந்து, அவன் திருவடிக்கண் அழுந்தின அன்பு வாய்ந்தவர். ஆகவே, தம்மவர் பிடித்துக்கொணரும் மீன் தொகுதியுள் ஒரு தலைமீனை யெடுத்து அஃது இறைவனுக்குரியதென நினைந்து, அதனைக் கடல்நீரில் மீண்டுஞ் செல்கவென விட்டுவருதலை நாடோறும் மாறாமற் செய்துவந்தார்.

இங்ஙனஞ் செய்து வருகையில், ஏது காரணத்தாலோ மீன்கள் மிகுதியாய் அகப்படாமற் செம்படவர் தமது வலைவளஞ் சுருங்கிப், பட்டினியும் பசியுமாய்க் கிடந்து துன்புறலானார். அங்ஙனந் தம்மவர் துன்புறுங்காலத்தும், அவர்தந் தலைவரான அன்பர் முதல் வலையில் ஒரு மீனே அகப்பட்டாலும், அஃது இறைவற்கே யுரியதென அன்பொடு நினைந்து, அதனைக் கடலின்கண் உயிரோடு விடுத்துவந்தார். நாளேற நாளேற இவரது செல்வமுஞ் சுருங்கிவிட, இவர் உடல் தளர்ந்து வருந்தினாலும், மனஞ் சிறிதுந் தளராராய் மகிழ்ந்து, முதலில் அகப்படும் ஒரு மீனையும் ஒவ்வொரு நாளுங் கடலின்கண் உய்த்தலிற் சிறிதும் வழுவாது ஒழுகலாயினர். கடைமுறையாக வீசுவித்த பல வலைகளுள் ஒரு

வலையிற்பட்ட ஒரு மீனைத்தவிர, வேறொரு சிறுமீன்றானும் வேறு வலைகளுள் அகப்பட்டிலது எனினும், ஒரு வலையில் அகப்பட்ட அவ்வொரு மீனையும் அவர் மிக்கதொரு களிப் புடன் எடுத்துப்பார்க்க, அஃது ஒரு பெரிய தேயத்தையே விலைகொள்ளத்தக்க சுடர்விரி பசும்பொன் வடிவினதாய்த் திகழ்ந்தது.

அப் பொன்மீன் அகப்பட்ட நேரம் எத்தகைய மன வுறுதியுடையார் மன நிலையினையுங் கலக்கும் வலிமை வாய்ந்தது. செம்படவர் தலைவனை அவ் அன்பரோ மிகவும் மிடிப்பட்டுத் தங் குடும்பத்தவரொடு பல நாட்கள் பட்டினி யும் பசியுமாய்க் கிடந்து இடருழந்து வருகின்றார். தம் முடைய துன்பத்தை ஒருபொருட்டாகக் கருதாது, தமது ஆளுகைக்கீழுள்ள ஏனைச் செம்படவர் படுந்துயரத்தைக் கருதும் அருண்மாட்சியுடையராகலான் அவர் பொருட் டாகவாவது அப் பொன்மீனை விலைசெய்து, அவர் அச் செம்படவரது மிடிவாழ்க்கையை மாற்றற்பாலார். மற்று, அச் செம்படவர்களோ தாங்குதற்கரிய தமது வறிய நிலை யினைக் கருதித், தம் தலைவன் இப்போதாயினும் இவ்வொரு மீனை விற்றுத் தம்மைப் பாதுகாப்பரோ, அன்றி என்றும் போல இதனையுங் கடற்கண் விடுத்திடுவரோ என்னும் ஐயத்தால் ஏங்கிய நிலையினராய், அவர் இனிச் செயப் போவதனை எதிர்பார்த்துக் கண் இமையாது நிற்கின்றனர். அப் பொன்மீனைக் கையிலெடுத்த சில்லிமைப்போழ்தில் எத்தனையோ பல எண்ணங்கள் மின்னொளியினுங் கடுகி அவர்தந் தலைவன் உள்ளத்தை ஊடுருவிச் சென்றன. "என் கீழ்க் குடிகளான இச் செம்படவர் எத்தனையோ பல நாட்க ளாக வலைவளந் தப்பிப் பட்டினியும் பசியுமாய்க் கிடந்து வருகின்றார்கள்! என் கொள்கை தவறாமல், நாடோறும் அகப்படும் ஒரு மீனையும் இறைவற்கென்று கடலின்கண்

யான் விடுத்து வருதலைக் கண்டும் என்னை வெறுத்திலர்! இவ்வொருமீன் விலையால் இவர்கள் எல்லாரின் மிடியும் அற்றுப்போவது திண்ணமே. ஆனாலும், இஃது இறைவற்கு உரியதன்றோ? இதனை விற்றற்கும், இவர்களைப் பாதுகாத்தற்கும் யான் யார்? யான் பிறக்கும் முன்னும், யான் இறந்த பிறகும் இவர்களைப் பாதுகாத்தவர் பாதுகாப்பவர் கடவுளா? யானா? என் மனைவி மக்கள் பெற்றார் உற்றாரெல்லாம் என் கீழ்க் குடிகளைப்போல் அல்லர்; முற்றும் என்னைச் சார்ந்து பிழைப்பவர். இவர்கள் பொருட்டு இதனை விற்றல் இறைவன் றிருவுளத்திற்கு இசையுமா? கண்ணெதிரே என் உதவியைப் பெரிது வேண்டி நிற்கும் இவர்கட்கென்று இதனைப் பயன்படுத்தாமற், கட்புலனாகாக் கடவுட்கென்று இதனைக் கடலின்கண் விடுத்தல் பயன்றருமா? இத்தனை நாளாக மிடிப்பட்டு வருந்தும் இவர்கள் அனைவரின் நிலையையும் ஓராமலே இறைவற்கென்று அரிது அகப்பட்ட ஒரு மீனையும் விடுத்துவந்த யான் இன்றைக்கு மட்டும் இப் பொன்மீனைக் கண்டு பேரவாக்கொண்டு இறைவனை மறந்து இவர்களை நினைதல் பிழையன்றோ? இவர்களது துயர் ஒருபுறம் இருக்க. எனக்கு அரிதிற் கிடைத்த இம் மக்கள்யாக்கை இறைவன் தந்ததன்றோ? இதனைப் பாதுகாவாது, யான் ஏதோ விடாப்பிடியாக் கொ ஒரு கொள்கைக்காக மிடியால் இதனை அழித்து விடுதல் ஐயன் அருளுள்ளத்திற்கு அடுக்குமா? எனக்கும் என்னைச் சேர்ந்தார்க்கும் என்கீழ்க் குடிகட்கும் பிறர்க்குமெல்லாம் வந்த இத் தீரா வறுமையினை இவ்வொரு பொன்மீன் தீர்த்து எல்லாரையும் இன்பவாழ்வில் வைக்குமென்றால், இதனைக் கடலின்கட் போக்குதல் தக்கதாமா? நல்லது; இவ்வெல்லார் வறுமையையுந் தீர்த்து, இவர்கள் எல்லாரையும் பாதுகாத்தல்வேண்டி, என் கொள்கைக்கு

மாறாக இப் பொன்மீனை விற்கத் துணிவேனாயின், இதனை விற்கப் போம்போதோ, விற்றுப் பொருளொடு திரும்பும் போதோ, திரும்பி எல்லார் வறுமையுந் தீர்க்கும்போதோ, அது தீர்ந்து எல்லாருங் களித்திருக்கும்போதோ ஒரு கடும் புயற்காற்றும் விடாப்பெருமழையுங் கதுமெனத் தோன்றி, எமது மணற்குப்பத்தை வாரிக் கரைத்துக்கொண்டுபோய்க் கடலின்கண் எம்மை அடங்க அமிழ்த்தி யழித்தால், அவரும் யானும் என்செய்யக்கூடும்! அல்லது இக் கடல் நீரே காற்றாலும் மழையாலும் வரைகடந்து பொங்கி யெழுந்து போந்து எம்மை யெல்லாம் ஒருங்கே யழித்துச் சென்றால், யான் என்னைக் காப்பதும் எம் உறவினர் சுற்றத் தாரைக் காப்பதும் எங்ஙனங் கைகூடும்! எல்லா மக்களையும், மக்களினுந் தாழ்ந்த எல்லா உயிர்களையும் எவன் படைத் தானோ, அவனே அவர்களையும் அவைகளையுங் காத்தற்கும் அழித்தற்கும் உரியவன். எல்லா உயிர்களையுங் காத்தற்கு ஏற்ற பேராற்றல் எம் ஆண்டவன் ஒருவனுக்கே யிருக்கப், பிற உயிர்களின் உதவியுந் துணையும் இன்றிப், பிறபொருள் களின் சேர்க்கையும் பயனுமின்றி என்னையே காத்துக் கொள்ளமாட்டாத யான், என்னவரைக் காக்குங் கடமை யுடையேன் எனப் பிழைபட எண்ணி, எல்லாம் வல்ல எம்பெருமானுக்கு இத்தனை காலமாகச் செய்துவந்த செயலினின்று இப்போது மாறப்பெறுவேனோ!" எனத் தொடர்பாக நினைந்தொரு முடிவுக்கு வந்தவுடனே, "என்றும்போல இன்றும் இப் பொன்மீன் எல்லாம் வல்ல எம்பெருமான் திருவடிக்கே உரித்தாகற்பாலது!" என நெஞ்சங்குழைய மொழிந்து, அதனைக் கடலின்கண் விடுத்திட்டாரென்பது.

---

## ௪. காடு

மரங்கள் அடர்ந்த நிலப்பகுதியே பெரும்பாலுங் 'காடு' என வழங்கப்பட்டு வருகின்றது. காடுங் காடுசார்ந்த இடமும் 'முல்லை' யெனப் பெயர்பெறுமென்று தமிழ் நூல்கள் கூறுநிற்கும். பருத்துயர்ந்த மரங்கள் நெருங்கிய காட்டை 'வல்லை' என்றும்; சிறு மரங்கள் மிடைந்த காட்டை 'இறும்பு', 'குறுங்காடு' என்றும்; சிறு தூறுகள் பம்பிய காட்டை 'அரில்', 'அறல்', 'பதுக்கை' என்றும்; மிக முதிர்ந்து முற்றிப்போன மரங்களையுடைய காட்டை 'முதை' என்றும்; மரங்கள் கரிந்துபோன காட்டைப் 'பொச்சை', 'சுரம்', 'பொதி' என்றும்; அரசனது காவலிலுள்ள காட்டைக் 'கணையம்', 'மிளை', 'அரண்' என்றும் பண்டுதொட்டுத் தமிழ்மக்கள் வழங்கி வந்திருக்கின்றனர்.

இங்ஙனம் பலவகையால் வழங்கப்படுங் காடுகளிற் பெரும்பாலன, மலைகளின் மேலும் மலைகளின் கீழும் மலை சார்ந்த இடங்களிலுமே காணப்படுகின்றன. சிறுபான்மைய கடல்சார்ந்த இடங்களில் இருக்கின்றன. திருமறைக்காடு (வேதாரணியம்) என்னுஞ் சிவபிரான் திருக்கோயில் உள்ள ஊரையடுத்த காடு கடலடுத்த நிலத்தின்கண் உள்ளது. பனங்காடு, உடை வேலங்காடு முதலியன பாண்டி நாட்டின் இராமேசுவரம் திருச்செந்தூர் முதலியவைகட்கு அண்மையவான கடல்சார்ந்த இடங்களில் மிகுதியாய் உள்ளன.

வான் அளாவிய மரங்கள் அடர்ந்து, தொலைவிலிருந்து நோக்குவார்க்குப் பசுந்தழைப் போர்வையுடன் தோன்றி, அவர்தங் கண்ணையுங் கருத்தையுங் கவர்வனவாய், அருகே சென்று தம்முள் நுழைந்து நோக்குவார்க்குப் பலவேறு

வகையான பருத்துயர்ந்த மரங்களுஞ் செடி கொடிகளும் வாய்ந்தனவாய், உள்ளே செல்லச்செல்ல இருண்ட இடங் களும் இடையிடையே பகலவன்வெளிச்சம் படுஞ் சந்து வெளிகளுந் தம்மகத்து உடையனவாய், நீர் ஊற்றுகளுஞ் சிற்றருவிகளும் ஆங்காங்கு அமையப் பெற்று அவற்றை யடுத்துள்ள மரஞ் செடி கொடிகளிற் பலவகைப் பறவைக் கூட்டங்களும் அவற்றின் ஒலிகளும் நிரம்பப் பெற்றன வாய்த், தம்முட் செல்வாரின் உள்ளத்தை அச்சுறுத்தும் யானை புலி கரடி பெரும்பாம்புகளின் அடிச் சுவடுகளும் உடற்பதிவுகளும் பொருந்தினவாய்ச், சருகுகள் பூக்கள் கனிகள் வித்துகள் இடங்கடோறும் உதிரப் பெற்றனவாய், இடையிடையே பட்டு வீழ்ந்து உள் இயங்குவாரின் வழி களை மறிக்கும் உலர்ந்த மரங்களுங் கோடுகளும் வளார் களும் முட்களும் வேர்களுங் கொடிகளுந் துதைந்தனவாய் உள்ள பெருங்காடுகளைப் புனலூர், நீலமலை, திருக்குற்றால மலை, அழகர்மலை, பாவநாசமலை, வெள்ளிமலை, மருதமலை, சேர்வராயன்மலை, இமயமலை முதலான மலைப்பாங்குகளுக்கு யாம் சென்ற காலங்களிற் கண்டு, முன்னறியாத ஒரு பெரு மகிழ்ச்சியும் இறும்பூதும் எய்தினேம். இத்தகைய பெருங் காடுகளைப் பாராதவர்களுக்கு, ஓரறிவு உயிர்களின் அமைப் பில் இறைவன் தோற்றுவித்திருக்கும் வனப்பும் உயர்ந்த காட்சியும் வியப்பும் பயனும் ஒரு சிறிதுமே விளங்கா.

கானகத்தின் கவினைக் கானகத்திலன்றி வேறெங்குங் காணல் இயலாது. எத்தனை வடிவான இலைகள்! எத்தனை நிற மான மலர்கள்! எத்தனை சுவையான காய்கள்! எத்தனை இனிப்பான பழங்கள்! எத்தனை வகையான மரங்கள் செடி கள் கொடிகள்! அம்மம்ம! இறைவன் படைப்பின் பலவேறு வகையான வியத்தகு அமைப்பும் அழகும் ஒருங்கு பொது ளிய அடவிகளின் விழுமிய தன்மையை எங்ஙனம் கூறு

வேம்! எவ்வாறு காட்டுவேம்! கானகங்களின் அடர்ந் துயர்ந்த தோற்றத்தைக் காண்கையில் உள்ளமும் உணர் வும் மேலுயர்ந்து செல்கின்றன! வியப்பும் புதுமையுங் கருத்தைக் கவர்ந்தெழுகின்றன!

அவைமட்டுமோ! நின்ற நிலையில் நிற்கும் மரஞ் செடி கொடிகளாகிய ஓரறிவுயிர்கள், இடம்விட்டுப் பெயரும் ஏனை உயிர்களுக்கு எத்தனை வகையிற் பயன்படுகின்றன! நீரும் நிழலும் உணவுந் தூய காற்றும் அவைகள் அனைத்துயிர் கட்கும் அளித்து வருகின்றன காண்மின்கள்! காடுகள் இல்லையாயின், வெய்யவன் சுடுகதிர்களால் வெதுப்பப்படும் இந் நிலம் நீர்ப்பசையற வறண்டுவிடும்; ஆவியாக மாறி வானின்கட் சென்ற நீர் குளிர்காற்று வீசுதற்கு வழியின்மை யால் திரும்ப மழையாகக் கீழ் இறங்கா. இறங்காவாகவே, உணவுப் பண்டங்களைத் தரும் மரஞ் செடி கொடிகளும் ஏனைப் பயிர்களும் உண்டாகா. இவ் வுண்மை, காடுகளை அழித்துவிடும் இடங்களில் மழை அருகிப்போதலால் நன்கு தெளியப்படும்.

உணவேயன்றி, நமதுயிர் வாழ்க்கைக்கு இன்றியமை யாத தூய காற்றுங், காடுகளில் துவன்றிய மரஞ் செடி கொடிகளினாலேயே நாம் வரப்பெறுகின்றோம் இவ் ஓரறி வுயிர்த் தொகுதிகள் மிகுந்தில்லாமல், ஏனை உயிர்த்தொகு திகளே எங்கும் மிகுந்திருக்குமாயின் இவை வெளிவிடும் நச்சுக் காற்றை இவ் வுயிர்களே மீண்டும் மீண்டும் உட் கொண்டு, அதனால் நோய்ப்பட்டுச் சில நாட்களில் இறந் தொழியும். மற்றுக் கானகங்களிலும் பிற இடங்களிலும் உள்ள மரஞ் செடி கொடிகள் பயிர்களோ ஈரறிவு முதல் ஆறறிவு ஈறாக உடைய ஊர்வன, நீர் வாழ்வன, பறப்பன, நடப்பனவாகிய சிற்றுயிர்கள், பறவைகள், விலங்குகள், மக்

கள் முதலான இயங்குயிர்கள் வெளிவிடும் நச்சுக்காற்றை உள்ளிழுத்து, அதன் நச்சுத் தன்மையை நீக்கித் தூய காற்றை வெளிவிட்டு அதனை எங்கும் பரவச்செய்கின்றன. இவ் வுண்மை, பயிர் பச்சைகள் இல்லாத நகரங்களில் இருப்பவர்கள் அடுத்தடுத்து நோய்களாற் பற்றப்பட்டு விரைவில் மாய்ந்துபோதலாலும், மரஞ் செடி கொடிகள் நிறைந்த நாட்டுப்புறங்களில் இருப்பவர்கள் நோயில்லா யாக்கையினராய் நீண்ட காலம் நன்கு உயிர் வாழ்தலாலும் இனிதறியப்படும்.

இனி, உலகத்திலே மிகப் பெரிய காடுகள், வட அமெரிக்காப் பெருந்தேயத்தின் ஒரு பகுதியாகிய 'கனடா' நாட்டின் கண்ணேதான் இருக்கின்றன. இங்குள்ள காடுகளின் அளவு முந்நூற்று எழுபத்தைந்துகோடி காணிகளாகு மென்று கணக்கெடுத் திருக்கின்றார்கள். தென்னமெரிக்கா தேயத்திலும் இத் துணைப்பெரிய காடுகள் இருந்தாலும், அவைகளில் மரங்கள் மிக அடர்ந்திருத்தலாலும், கொடிய காட்டு விலங்குகளும் நச்சுப் பெரும் பாம்புகளும் மிகுந்திருத்தலாலும் அவற்றினுள்ளே மக்கள் நுழைந்து சென்று பார்த்தலும் அவற்றை அளவெடுத்தலும் இயலவில்லையென்று ஆராய்ந்துபோய்க் காணும் ஆசிரியர்கள் அறிவிக்கின்றார்கள். ஐரோப்பாப் பெருந்தேயத்தின் வடபகுதியில் உளதாகிய உருசியா தேயத்திலும் மிகப்பெரிய காடுகள் இருக்கின்றன வென்றும், அவற்றின் அளவுஞ் சிறிதேறக்குறைய முந்நூற்றெழுபத்தைந்து கோடி காணிகளாகு மென்றும் இத் துறையில் வல்ல அறிஞர் கணக்கெடுத்

இனி, உயரத்திலும் பருமனிலுங் குறைந்த அளவினவான மரங்கள் நிறைந்த குறுங்காடுகள் பெரும்பாலும்

எல்லா நாடுகளிலும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. திரு மறைக் காட்டிற்குங் கோடியக்கரைக்கும் இடையிலுள்ள காட்டைக் குறுங்காடு என்றே கூறுதல்வேண்டும். இராமேசுவரத்திற்கும் பாம்பனுக்கும் இடையிலுள்ள காடுங் குறுங்காடேயாகும். திருச்செந்தூரை யடுத்த நெய்தல் நிலப் பகுதிகளிலுள்ள பனங்காடு உடைவேலங் காடுகளுங் குறுங்காட்டிற் சேர்ந்தனவேயாகும்.

இனிச், சிறு தூறுகளுங் குறுஞ்செடிகளும் பம்பிய காடுகளும் எங்கும் உண்டு. யாமிருக்கும் இப் பல்லவபுரத்திற்கு அருகாமையில் தூறுகளுஞ் சிறு செடிகளும் நிறைந்த ஒரு நீண்டகன்ற காடு உளது. இன்னோரன்ன சிறு காடுகள், மேற் கூறிய பெருங் குறுங்காடுகளைப்போற், காட்சிக்கு இனியனவாய் இல்லாவிடினும், நிலத்தின் வறட்சியைத் தணித்து, ஏழை யெளியவர்கள் விறகுவெட்டி விற்றுப் பிழைப்பதற்குப் பெரிதும் உதவியாகின்றன.

இனி, மிக முதிர்ந்து முற்றிப்போனமையால் அடர்ந்தில்லாமல் அலைசலாயிருக்கும் இலைகளையும், அவ்விலைகள் தாமும் இல்லாமல் வெறுங்கோடுகள் கொம்புகளையும் உடைய பரிய மரங்கள் நிறைந்த காட்டின் பகுதிகளைக், கோயம்புத்தூர்க்கடுத்த வெள்ளிமலைப் பெருங்காட்டில் இடையிடையே கண்டுவந்தேம். தழைந்த பசிய மரத்தொகுதிகளைக் கண்டுகளித்த கண்களுக்கு, வற்றலாய் நிற்கும் இம் மரங்களின் றோற்றம் வருத்தத்தை விளைவித்தது. செல்வத்தின் செழுமையாற் கிளைஞரும் நண்பருஞ் சூழவாழ்ந்து வந்தவர் ஒரு சிலர் சிறிது காலத்தில் அச் செல்வத்தை யிழந்து, சுற்றத்தார் எவருமின்றி, உடம்பின் ஒளியும் உள்ளக்கிளர்ச்சியும் அற்றுத் தனிநிற்றல்போலவும், இளமையும் அழகுந் துலங்கத் தலைமையில் வீற்றிருந்தார் பிறர்

சிலர், அவ்வளமையும் அழகுந் தலைமையும் மாறி வறிய யாக்கையினராய் வருந்திநிற்றல்போலவும், பச்சென்று பொதுளிய இளந்தழைகள் உதிர்ந்து புட்களும் விலங்கினங் களும் அணுகப் பெறுமல் நீர்ப்பசையற்று வளார்களாகிய பழுத்த தலைமயிர்கள் காற்றில் அலையக் கோடுகளாகிய கைகளை நீட்டி விரித்துத் தமது வாட்டத்தைக் குறிப்பன வாய்க் காணப்பட்ட அம் மரங்களின் தோற்றம், உயர்நிலை விரைவில் மாறப்பெறும் மக்களின் இவ் வுலகவாழ்வின் நிலைமையைக் குறிப்பதொன்றுகவே எமக்குத் தோன்றியது.

இனிக், கரிந்த மரங்களையுடைய பொச்சைக் காடுகள் கதிரவன் வெப்பத்தாற் கனன்றுகொண்டிருக்கும் மணல் வெளிகளாகிய பாலை நிலங்களிலேதாம் அருமையாய்க் காணப்படும்.

இனி, முதலிற்கூறிய பெருங்காடுகளெல்லாம், பெரும் பாலும் ஆங்காங்கு அரசுசெலுத்தும் அரசர்களின் காவலில் வைக்கப்பட்டு, அவர்கட்குப் பலவகையில் ஏராளமான வருவாயைத் தந்து வருகின்றன. காடுகளில் மிகுதியாக வளருந் தேக்கு, பாலை, முதிரை, ஆச்சா முதலான மரங்கள் வீடுகள், தொழிற்சாலைகள், கப்பல்கள், படகுகள் முதலியன அமைப்பதற்கேற்ற வலிவுவாய்ந்து நீண்டகாலங் கெடாதிருப்பனவாதலால், அவற்றுல் அரசர்கட்கு வரும் வருவாய் மிக்க அளவினது மேல்பால் உள்ள சாலடி நாட்டில் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகளுக்குமுன் நாகரிகத் திற் சிறந்து விளங்கிய அரசர்கள் அமைத்த பெரிய கோயில் களும் அரண்மனைகளும், நமது தமிழ்நாட்டின் மேல்கரை மலைகளில் வளராநின்ற தேக்குமரங்களைக்கொண்டே கட்டப்பட்ட பான்மையினைப் பழைய வரலாற்று நூலாசிரி யர்கள் கண்டறிந்திருக்கின்றார்கள். இம் மரங்களேயன்றி

அகில் சந்தனம் முதலான மணங்கமழ் மரங்களும், விலையுயர்ந்த யானைகளும் யானைக்கொம்புகள் எலும்புகளும், மான்றோல் புலித்தோல்களும், மயிற்றோகைகளும், தேன், தேன்கூண்டுகளும், அரக்கும், நாவியும், பலவகைக் காய் கனி கிழங்குகள் வித்துக்களுங் காட்டின்கணிருந்து நிரம்பப் பெறுதலின், இவைகளாலும் அரசர்கள் மிகுந்த வருவாயை அடைகின்றனர் என்பது.

## கo. சிறுவர்க்கான கதைகள்—II

### 1. நீண்டகாலக் கடன்

கதை நூலாசிரியர் ஒருவரை ஒருநாள் ஓர் இரவலன் எதிர்ப்பட்டனன். உடனே அவன் தனக்குக் கால்ரூபா உதவி செய்யும்படி அவரை விடாப்பிடியாய்க் கெஞ்சிக் கேட்டு நெருக்கினன். அவர் தமது சட்டைப்பையினுட் கையை நுழைத்துத் தடவ, அதன்கட் சில்லறையில்லாமல் ஒரு முழு அரை ரூபா மட்டும் இருக்கக்கண்டார். அவர் அதனையெடுத்து அவ் விரவலனுக்குக் கொடுத்து, "நீ எனக்கு மிச்சங் கால் ரூபா கடன் கொடுக்கவேண்டியிருப்பதை மறவாதே," என்று கூறிப் புன்னகைபுரிந்தார். அதற்கு அவன் "அப்படியே, பெருமானே! யான் அக் கடனைத் தங்கட்குத் திருப்பிக்கொடுக்கும் வரையில் தாங்கள் உயிரோடிருப்பீர்களாக!" என்று மறுமொழி நுவன்று சென்றான்.

### 2. ஞாயிறுந் திங்களும்

ஒருகால நண்பர் இருவர் ஞாயிறு (சூரியன்), திங்கள் (சந்திரன்) என்னும் இரண்டில் எது

என வழக்கிடலாயினர். முடிவாக அவ் விருவரில் ஒருவர், "ஓ! எனக்கு அது தெரியும். திங்களானது ஞாயிற்றினும் இருமடங்கு பயன் உடையது; ஏனென்றால், அது தனது விளக்கத்தை எல்லாரும் வேண்டும் இராக்காலத்தே ஒளிவீசுகின்றது; மற்று, ஞாயிறோ தன்னை எவரும் வேண்டாத பகற்காலத்தில் ஒளிர்கின்றதன்றோ!" என்றான்.

## 3. உதவிச்சம்பளங் கேட்டல்

தன் அரசனுக்காக உற்ற நேரத்திற் போர்புரிந்து வெற்றிபெற்ற அஞ்சா ஆண்மையனான படைஞன் ஒருவன், தனக்கு உதவிச்சம்பளம் அளிக்கும்படி கேட்கத் தன் அரசன்பாற் போந்தனன். போந்து அரசர்க்குத் தன் வேண்டுகோளைத் தெரிவிக்க, அரசன் "நல்லது பார்ப்போம்," என்றான். உடனே அம் மறவன், "அதற்காகத் தேவரீர் காக்கவேண்டுவதில்லை, தாங்கள் இப்போதே பார்க்கலாம்," என்று சொல்லி, உடனே தன் உடம்பின்மேல் அணிந்திருந்த சட்டையைக் கழற்றிவிட்டுப், போர்த்தழும்புகள் நிறைந்த தன் மார்பினைக் காட்டினான். அதனை அரசன் கண்டதும் "இனிப் பார்க்கலாம்," என்று சொல்லல்மாட்டானாய், உடனே அவற்கு உதவிச்சம்பளங் கொடுக்குமாறு கட்டளையிட்டனன்.

## 4. ஒரு மீகாமனது கனவு

"கனவுகாண் காலத்தும் பிறர்க்குதவி செய்வதே அழகிது, நல்லது," என்றார் மேனாட்டு நாடக நூலாசிரியர் ஒருவர் (Calderon). ஒருகால் ஒரு சிறந்த மீகாமன் தனது கப்பலில் தன் அறையினுள்ளே படுத்து உறங்கிக்கொண்டிருந்தான். அவனது மரக்கலம் அப்போது சென்று கொண்டிருந்த "நடுநிலக்கடல்" அமைதியாகவே யிருந்தது;

வானத்திலும் மப்பு இல்லை. ஆனால்,
அக் கப்பற்றலைவனோ, தனது கப்பல் கடலுள் அமிழ்வதாகக் கனவுகண்டு, அக் கனவுநிலையிலேயே அறையைவிட்டு வெளியே நடந்துவந்து, சுக்கான் திருப்புவோன் வேலையைத் தான் கைக்கொண்டு, தன் கப்பலாட்களை யெல்லாம் விழிப்பாயிருக்கும்படி கூவினான்; தூக்கத்திலிருந்தவாறே தம் தலைவன் செய்யுஞ் செயல்களைக் கண்டு இறும்பூதுற்ற அவ் ஆட்களெல்லாரும் நகையாடினர்; அவர்தம் நகை யொலியைக் கேட்டு விழித்துக்கொண்ட அம் மீகாமன் மீண்டுந் தன் அறைக்குட் சென்று மனக்கலக்கத்துடனேயே தூங்கலாயினன். அங்ஙனந்தூங்கிய சிறிது நேரத்தின் பின் திரும்பவும் அவன் விழித்தெழுந்துபார்க்கப், புயற்காற்று அறிவிக்குங்கருவி, வரப்போகுஞ் சூறுவளியினை அறிவித்
உடனே அவன் மேற்றட்டின் மேலோடித் தன்
ரனன். சுக்கான் திருப்பிக்கொண்
டிருந்த ஆடவன் "ஐய! மறுபடியுங் கனவோ?" என வினவினன். என்றாலும், அவன்றன் ஆட்கள் அவன் சொற் படியே சென்று அக் கப்பலின் பாய்களை உடனே சுருக்கிக் கட்டினர். சிறிதுநேரத்திலெல்லாம் ஒரு பெருஞ்சூறைக் காற்று வந்து வீசியது. ஆயினும், பாய்கள் மடக்கிக் கட்டப்பெற்றமையால் இக் கப்பல் ஏதோர் இடருமின்றிச் சென்றது; முன்னதாகவே பாய் மடக்கிக் கட்டப்பெறாத மற்றைக் கப்பல்களோ அப் பெருங்காற்றினால் அலைக்கப் பட்டுக் கடலுள் அமிழ்ந்திப்போயின. கனவிலுந் தன் கடமையைச் செலுத்திய தம் தலைவனுக்கு அக் கப்பலாட்கள் எல்லாரும் நன்றி செலுத்தினர்.

## 5. ஒரு கடல் மனிதன்

௧௭௨௫-ஆம் ஆண்டு ஒரு கப்பல் மேல்கடலில் நூற் றெண்பதடி ஆழமுள்ள ஒரு பகுதியில் ஓடிக்கொண்டிருக்

கையிற், காலை பத்துமணிக்கு மக்கள் வடிவம் வாய்ந்த ஒருவன் அக் கடல்நீரினின்றும் மேலெழுந்து அக் கப்பலின் இடதுபக்கத்தே காணப்பட்டனன். அவனைக்கண்ட அக் கப்பற்றலைவன் உடனே அவனை மேலே தூக்கிக் கப்பலிற் சேர்த்தற்பொருட்டு ஒரு கொளுக்கியை யெடுத்தான் அது கண்ட அக் கப்பல் மீகாமன், அத் தலைவனைத்தடுத்து "அவன் உண்மையான மனிதன் அல்லன்; அவன் கடல் நீரில் உயிர்வாழும் மனிதனுவன்; அவனை நீங்கள் மேலிழுக்க முயன்றால், அவன் உங்களைக் கீழ் இழுத்து விடுவன்," என்றான். அதுகேட்ட தலைவன், அக் கடல் மனிதனின் வடிவம் முழுமையும் பார்க்கவேண்டி ஒரு சிறு கோலை யெடுத்து அவனது முதுகின்மேல் எறிந்தான். எறிந்தகோல் தன்மேற் படவே அவன் சினங்கொண்டான் போல் தன் இரு கைகளையும் மடித்துக்கொண்டு தன் முகத்தைக் காட்டினன். அதன்பிறகு அவன் அக் கப்பலைச் சுற்றிச் சென்று அதன் பின்னணியத்திலுள்ள சுக்கானைத் தன் இருகைகளாலும் இறுகப் பற்றிக்கொண்டான். அது கண்ட அக் கப்பல் ஆட்கள், அவன் அச் சுக்கானைப் பழுது படுத்தி விடுவன் என அஞ்சி அதனை இறுக்கிவைக்க வேண்டியவர்களானார்கள். பின்னர் அக் கடல் மகன் அங்கிருந்து, மக்கள் நீந்துதல்போலவே நீந்திக்கொண்டு கப்பலின் முன்பக்கத்திற் போய், அதன் முன்னணியத்தில் நிறுத்தப்பட்டிருந்த ஓர் அழகிய பெண்ணுருவைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தான். அப்பால் அவன் அப் பெண்ணுருவைப் பற்றிக்கொள்ள விழைந்தான்போற் கடல் நீரினின்றும் மேற்கிளம்பினன். இவ்வளவும் அக் கப்பலில் இருந்தார் எல்லார் கண்ணுக்கும் எதிரே நிகழ்ந்தன.

திரும்பவும் அந் நீர்மகன் அக் கப்பலின் இடதுபக்கமாய்ப் போந்தனன். கப்பன்மேலிருந்தவர் ஒரு கயிற்றில்

ஒரு கடன்மீனைக் கட்டி அதனை அவன் முன்னே தொங்க விட்டனர். அவன் அதனைப் பிடித்துப் பார்த்தனனே யன்றி வேறொன்றுஞ் செய்திலன். பின்னர் அவன் அதனை விட்டு நீந்திப்போய் அம் மரக்கலத்தின் பின்னணியத்திற்கு வந்தனன்; வந்து மறுபடியுஞ் சுக்கானைப் பற்றிக்கொண்டனன். அதுகண்ட மீகாமன் ஓர் இருப்புவல்லயத்தை யெடுத்து அதனை அவன்மீதெறிந்து அவனைக் கொல்லுதற்கு முனைந்தான். ஆனால், அவ்வல்லயமோ அக் கப்பற் கயிறுகளினிடையே சிக்கிக்கொண்டமையால், அக் கடல் மகனது முதுகிற் பட்டதேயன்றி அஃது அவனை ஊறு படுத்தவில்லை; தன் முதுகிற்பட்டதும் அவன் திரும்பி முன்போலவே தனது முகத்தைக் காட்டினன். அதன் பிறகு, அவன் மறித்தும் முன்னணியத்திற்குப் போந்து அங்கு நிறுத்தப்பட்டிருந்த பெண்பாவையை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான். அதன்மேல் மீகாமனின் துணைவன் அவன்மே லெறிதற்கு அவ்வல்லயத்தை யெடுத்து வருகவென்று கூவினான். ஆனால், முன்னொருகால் அதே கடல்வழியில் அதே மரக்கலத்தில் மேலேறிப்போந்து தன்னைத் தானாகவே மடித்துக்கொண்டு கடலில் எறியப்பட்ட புதுமையான ஓர் உயிராய் அவன் இருக்கலாமோ என ஐயுற்று அஞ்சி, அத் துணைவன் அவ்வல்லயத்தால் அவனைக் கொல்லாமல், அதனால் மெல்ல அவனை முதுகிற் குத்தித்தள்ளினான். அங்ஙனங் குத்தவே, அக் கடல்மகன் முன்போலவே தன் முகத்தைச் சினந்து காட்டி, அக் கப்பலின் மேற்றட்டுவரையில் ஏறிவந்தான். வந்தவன், கப்பலாட்களில் இருவர் பிடித்திருந்த கயிறு ஒன்றைத் தானுங் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டான். அவ்விருவரும் அக் கயிற்றை அவன் கையினின்றும் வலிந்து இழுக்கவே, அந் நீர்மகனும் அக் கயிற்றொடு கூடவே கப்பலின் மேற்றட்டிற்கு

இழுக்கப்பட்டனன். ஆனால், மேற்றட்டிற்கு வந்தவுடனே அவன் உடனே கடலிற் குதித்துத் தொலைவில் நீந்திப்போயி னன். மீண்டுஞ் சிறிது நேரத்தில் அக் கடல்மகன் நீந்திக் கொண்டு எங்கள் கப்பலண்டையில் வந்தான். இப்போது அவன் தண்ணீர்க்குமேற் கொப்பூழ்வரையில் உயர எழுந்த மையால், அம் மரக்கலத்திலிருந்தவர்கள் அவனது உடம் பின் மேற்பகுதியை நன்கு பார்க்கக்கூடியவர்களானார்கள். அவனது மார்பு சிறந்த ஒரு பெண்மகளின் மார்புபோற் பெரிதாய் அழகிதாய் இருந்தது. ஆனால், அவன் முதுகைத் திருப்பியபோது ஆண்மகனாகவே காணப்பட்டான். அதன் பின்னர் அவன் அக் கப்பலைச் சுற்றி நீந்தி மறைந்துபோய் விட்டான். அதற்குப் பிறகு அக் கப்பலிலுள்ளவர் அவ னைப் பார்க்கவில்லை.

காலை பத்துமணியிலிருந்து பன்னிரண்டுமணி வரை யில் அக் கடன்மகன் அம் மரக்கலத்துடனேயே வந்தனன். அம் மரக்கலத்திருந்தவர்கள் அவனைக் கண்டு அச்சமுறா திருந்தால், அவனைக் கப்பலின் மேற்றட்டுமேற் பலகாலும் ஏற்றியிருக்கலாம். அவனதுடம்பின் நீளம் ஏறக்குறைய எட்டடி; தோலின் நிறம் பழுப்பு; அத் தோலின்மேற் செதிள் ஏதும் இல்லை; அவனுடைய நடையெல்லாம் மக்கள் நடைகளையே யொத்திருந்தன; கண்கள் இருக்கவேண்டிய அளவுப்படியே அமைந்திருந்தன; வாய் சிறிய அளவினது; மூக்குப் பெரிதாயுந் தட்டையாயும் இருந்தது; பற்கள் மிக வும் வெண்மையாய்த் தோன்றின; மயிர் கறுப்பு; மோவாயிற் பாசிபடர்ந்தாற்போல் மயிர்கள் இருந்தன; மூக்கின்கீழ் ஒருவகையான மீசை; காதுகள் மக்களின் காதுகளைப் போலவே காணப்பட்டன; ஆனால், அவனுடைய கைவிரல் கால்விரல்களுக்கு இடையில் மட்டுந் தாராப் பறவைகளுக் குள்ளதுபோற் செலுவிருந்தது. சுருங்கச் சொல்லுங்கால்

அவன் திருத்தமான அமைப்புவாய்ந்த ஓர் ஆண்மகனுகவே காணப்பட்டனன். இங்ஙனம் காணப்பட்ட அக் கடன்மகனைப் பற்றிய செய்தி முற்றும் உண்மையென்று அக் கப்பற் றலைவனும் மீகாமனும் அதில் வேலைசெய்த முப்பத்திரண்டு ஆட்களும் உறுதிமொழி புகன்றுர்கள்.

## கக. உற்றுநோக்கி யாராய்தல்

உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சிறியவாயிருப்பினும் பெரியவாய் இருப்பினும், அவை தம்மை உற்று நோக்கி யாராய்ந்தவர்களே அறிவிற் பெரியராகிப், பல அரும் பெரும் புதுமைகளைக் கண்டறிந்து, நம்மனோர்க்கெல்லாம் அளப்பிலா நன்மைகளைச் செய்திருக்கின்றுர்கள். எதனையும் உற்றுநோக்கி ஆராய்தலின்றி, ஆடு மாடுகளைப்போற் பொதுநோக்காய்ச் சென்றவர்கள் தாமும் அறிவு விளங்கப் பெற்றதில்லை, பிறர்க்கும் நன்மையாவன செய்ததில்லை. சோற்றுக்குக் கேடும் மண்ணுக்குப் பொறையுமாய் இருந்து அவர்கள் தம் வாழ்நாளை உண்டு உடுத்து உறங்கிக் கழித்தவர்களேயாவர். இலந்தை மரத்திலிருந்து நன்குய்ப் பழுத்த பழங்கள் உதிர்ந்து கீழ் விழுதலை எத்தனைகோடி மக்கள் முற்காலத்தும் பிற்காலத்தும் பார்த்திருக்கின்றுர்கள்! அவர்களுள் எத்தனைபேர் அவைகள் ஏன் அங்ஙனங் கீழ்விழுகின்றன என்று ஆராய்ந்து பார்த்தவர்கள்? நியூட்டன் என்னும் ஒருவரைத்தவிர ஏனைக் கோடி கோடியான மக்கள் எவரும் அதன் உண்மையை அறியவில்லையே! ஏன்? உற்று நோக்கி யாராய்ந்து பார்க்கும் அறிவும் முயற்சியும் அவரைத் தவிர மற்றையோர்க்கு இல்லாது போனமையாலன்றே? மற்று, நியூட்டன் என்னும் பேராசிரியரோ இவ்வுலகியற் பொருட்டன்மைகளை எந்நேரமும் உற்றுநோக்கிய படியாக

வும், உற்றுநோக்கி யாராய்ந்தபடியாகவுமே தமது அரிய வாழ்நாளை எந்நேரமும் பயன்படுத்திவந்தார். ஒருகால் அவர் ஓர் இலந்தைமரத்தினடியில் அமர்ந்திருக்கையில், அதில் நன்றாய்ப் பழுத்திருந்த ஒருபழங் காம்பு கழன்று அவரது காலண்டையிற் கீழ் விழுந்தது. அதனைக்கண்ட அவர், உடனே, அஃதேன் அங்ஙனங் கீழ்விழலாயிற்று என ஆராயப் புகுந்தார். அந் நிகழ்ச்சியினைப் புல்லியதென்று விலக்கிவிடாமல், அல்லும் பகலும் அவர் அதனைப் பல வாற்றான் ஆராய்ந்து பார்க்க, மேலுள்ள பருப்பொருள் களைக் கீழே தன்கண் இழுத்துக்கொள்ளும் ஓர் ஆற்றல் இந் நிலவுலகத்திற்கு உண்டென்னும் அரும்பேருண்மை யினை அவர் கண்டுகொண்டார். இந் நிலவுலகமாகிய பருப் பொருளுக்கு உள்ள இவ் இழுக்குமாற்றலை அவர் கண் டறிந்த பிறகுதான், வான்வெளியிற் பந்துகள்போற் சுழலா நின்ற ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலான ஏழு உலகங்களும், அவற்றோ டொத்த அளவிடப்படாத எண்ணிறந்த வான்மீன் மண்டிலங்களுந் தத்தம் பருமனுக்குத்தக்க தொலைவில் நின்று ஒன்றையொன்று இழுத்தபடியாய் ஒன்றையொன்று சுற்றிச்செல்லும் வியப்பான உண்மை நிகழ்ச்சியினையும் இன்னும் இதுபோன்ற வேறு பல புதுமைகளையுங் கண்டு வெளியிட்டார்.

இப் பேராசிரியரது அறிவுவரலாற்றை யெண்ணிப் பார்க்குங்கால், பகுத்தறிவொடு கூடாத கட்பார்வை பயன் இலதாதலை உணர்கின்றனம் அல்லமோ? மக்களெல்லாருங் கண்ணிஞற் பொருள்களையும் பொருள் நிகழ்ச்சிகளையும் பார்த்துண்டாகிய ஓரளவான பகுத்தறிவுகொண்டே வாழ்க்கை செலுத்தி வருகின்றனரென்பது உண்மையே. என்றாலும், ஒரு பொருட்டன்மை மற்றொன்றின் வேறாத

லும், அன்றி ஒன்று மற்றொன்றை ஒத்திருத்தலும், அவ்வாறெல்லாம் அமைந்த அமைப்புகளின்கீழ் அவை தம்மை யமைத்த முதற்பேரறிவு ஒன்று மிளிரும்பான்மை யும் எல்லாங் கருத்து ஒருங்கி ஆராய்ந்து பார்ப்பவர் அம் மக்களுள் எத்தனைபேர் உளர்? ஒரோவொரு காலங்களில் ஒரோவொருவரே மிக அரியராய் ஆங்காங்குக் காணப்படு கின்றனர். ஒரு கயிற்றிற்கட்டித் தொங்கவிடப்பட்டிருக் கும் ஓர் எடைகல் அங்கும் இங்குமாய் ஊசலாடுவதை எத்தனை யாயிரக்கணக்கான மக்கள் முன்னும் பின்னும் பார்த்திருக்கவேண்டும்! அதிலிருந்து நாழிகை யறிவிக்குங் கடிகாரக் கருவியினை அமைக்கும் நுண்ணறிவு கலிலீயோ என்னும் வான்நூலாசிரியர்க்கன்றி வேறெவர்க்கேனுங் ண்டா?

பின்னும் ஒருகால் அவ் வான்நூலாசிரியர் தொலைவு நோக்கி என்னும் ஒரு வியத்தகு கண்ணாடியினை அமைக்கும் முறை கண்டறிந்ததும் மிகவும் வியக்கற்பாலதாயிருக் கின்றது. மூக்குக்கண்ணாடி செய்யும் ஒருவர், தொலைவி லுள்ள பொருள்களைக் கட்புலனுக்கு அருகே காட்டும் ஓர் அரிய கருவியினை அமைத்து அதனை ஒரு செல்வர்க்கு வழங்கிய செய்தியைக், கலிலீயோ என்னும் அப் பேரறிஞர் ஒருநாள் தற்செயலாய்க் கேள்வியுற்றார். கேட்ட அந்நாள் முதல் அவர், அங்ஙனந் தொலைவிலுள்ளவைகளை அருகிற் காட்டுங் கருவியின் அமைப்பைத் தொடர்பாக ஆராய்ந்து செய்துசெய்து பார்த்துக், கடைசியாகத் 'தொலைவுநோக்கி' (Telescope) என்னும் புதுமையான கருவியை அமைத்து முடித்தார். அக் கருவியானது அமைக்கப்பட்ட பிறகு தான், எத்தனையோ கோடி மைல்களுக்கு அப்பால் உள்ள ஞாயிறு திங்கள் முதலான உலகங்களின் இயல்புகளையும், அவை தமக்கும் எட்டாத் தொலைவிலுள்ள ஏனை வான்மீன்

மண்டிலங்களின் இயல்புகளையும் எல்லாம் அவரும் அவர் வழிவந்த மற்றை வான்நூலாசிரியர்களும் நன்கறிந்து கண்டு நம்போல்வார்க்கெல்லாம் அவ்வுண்மைகளை நன்கு விளக்கி வருகின்றனர். கலிலீயோ என்னும் அவ் அறிஞர் பெரு மானுக்கு அத்துணை விழிப்பான கருத்தும் ஓயாத ஆராய்ச்சியறிவும் ஆராய்ந்தவைகளைச் செய்துமுடிக்கும் விடாமுயற்சியும் இல்லாதிருந்தால், நாம் அம் மேலுலகங் களின் உண்மைகளை உணர்ந்துகொள்ளல் இயலுமோ? அவ்வுண்மைகளையறியாமல் அவ்வுலகங்களைப் பற்றிய வெறுங் குருட்டு நம்பிக்கைகளிலும் பொய்க்கதைகளிலு மன்றோ நம் வாழ்நாளை நாம் விலங்கினங்களைப்போற் கழிக்க வேண்டும்?

இன்னும் பாருங்கள்! "கூவல் ஆமை குரை கடல் ஆமையைப்" பார்த்துப் பழித்ததுபோலத், தாம் இருக்கும் நாட்டையும் அந் நாட்டிலுள்ள மக்களையுந் தவிர வேறு நாடுகளையும் அந் நாடுகளில் உள்ள மக்களையும்பற்றிச் சிறிதுமே உண்மை தெரியாமல் அந் நாடுகளையும் அம் மக் களையும் இழித்துப் பேசுவோர் நம்மில் நூறாயிரக்கணக்காய் இருக்கின்றனர்! ஓர் ஊரைவிட்டு வேறு ஓர் ஊர்சென்று அதன் இயல்புகளையும் அங்குள்ள உயிர்களின் இயல்பு களையும் நன்குணர்ந்து அதன்கண் வாழ்க்கை செலுத்த விரும்புவார் நம்மில் மிகச் சிலராகவே காணப்படுகின்றனர். தாமிருக்கும் ஊரில் தாம் உயிர்வாழ்தற்கு வேண்டுங் கருவிகள் கிடைக்கப்பெறாமல் வறுமைப்பட்டுத் துன்புறு வோரே அயல்நாடுகள் சென்று குடியேறக் காண்கின்றோம். இவ்வாறாக நம்மனோர் பெரும்பாலுந் தாமிருக்கும் இடத்தை விட்டுப் பெயராத சோம்பர்களாயும், உலகத்தின் பல பகுதிகளையுங் கண்டு அறிவை அகலமாக்கும் விரிந்த நோக்கம் இல்லாதவர்களாயும் இருத்தலறிந்தே நம் பண்டை

கேட்டாள். அதற்கவன், "இதோ சிறிதுநேரத்தில் வரு வாள்!" என்று சொல்லியபடியாய்த், தான்கொணர்ந்த ஒரு பெட்டகத்தைத் திறந்து, அப் பேய்க்குப் படைத்தற் காகக் கொண்டுவந்த கள்ளுங் கருவாடும் புகையிலையுந் தென்னம்பாளைப்பூவும் எல்லாம் எடுத்துவைத்துக், கடைசி யாகப் பளபளவென மின்னுங் கருக்கான ஒரு வெட்டரி வாளையும் எடுத்து வைத்தான். அவன் மனையாளாகிய அவ் வேழைப் பேதை பின்னதைக் கண்டதும் மூக்கால்வாசி உயிர் நீங்கிய உடலத்தினளாய் நிலத்திலே அயர்ந்து விழுந்தாள்.

இந் நேரத்தில் எவரோ ஒருவர் வரும் அரவந் தென்பட் டது. அஃதுணர்ந்த அவ் வணிகன் தன் நோக்கத்திற்கு இடையூறாக வருவார் எவரென அச்சத்துடன் சுற்றிப் பார்த்தான். அருளொளி ததும்புந் திருமுகமும் நீண்ட சடைமுடியும் நீறுதுலங்கு நெற்றியு முடையராய்க் காவி யாடை பூண்ட ஒரு துறவி தன்பால் விரைந்துவரக்கண் டான். கண்ட ஒரு நொடிப்பொழுதிலெல்லாம் அவர் அவனை அணுகி, "அடா பேதாய்! கருக்கொண்ட அழகிய நின் அருமை மனையாளைப் பாழும் பொருளுக்காக வெட்டிப் பலிகொடுக்கத் துணிந்தனையே! உன்னைப்போல் அறிவில் லாத் தீய கொடிய பொருட்பேய் வேறுண்டோ! நீ நின்மனை யாளைப் பலிகொடுத்தவுடனே உன்னை இரண்டு துண்டாய் வெட்டி வீழ்த்தி, நீயெடுத்த புதையலைக் கொண்டு போகக் கொடிய கள்வர் சிலர் இதோ வந்துகொண்டிருக்கின்றனர்! இதோ தோன்றும் இருப்பைமரத்திற்போய் ஏறிக்கொள்! தாழாதே! நின்மனையாளை யான் வேறு ஓரிடத்திற் கொண்டு போய் மறைத்துவைத்து, அக் கள்வர் திரும்பிச்சென்றதும் அவளை மீண்டும் நின்பாற் சேர்ப்பிக்கின்றேன்" என விரைந்து அருளொடு மொழிந்தார். அப்பெரியாரின்

அமுதவுரை செவியிற் பட்டதும் போனவுயிர் மீளப்பெற்ற அவ் வணிகன்றன் மனைவி திடுமென எழ அவர் அவளை அழைத்துக்கொண்டு சடுதியில் மறைந்துபோயினர். அவ் வணிகனுந் திகில்கொண்டவனாய் அவ்விடிந்த இல்லத்திற்குச் சிறிது எட்டியிருந்த இலையடர்ந்த ஓர் இருப்பை மரத்தண்டை விரைந்தோடி அதன்மேல் ஏறிக்கொண்டான்.

அவன் அங்ஙனம் ஏறிக்கொண்ட சில நொடிப்பொழுதிலெல்லாம் நாலைந்து கொடிய கள்வர்கள் கண்டவர் கலங்கத்தக்க கரிய திண்ணிய வடிவினராயுங், கூரிய கொடுவாள் பிடித்த கையினராயும் விரைந்துபோந்து, அவ்விடிந்த பாழ் வீட்டிலே அவ் வணிகன் விளக்கும் மற்றைப் பொருள்களும் வைத்துப் போன இடத்திற் புகுந்து நின்றனர். அவ்விடத்திற்குச் சிறிது தொலைவிலே இருப்பை மரத்தின்மேல் ஏறியிருந்த அவ் வணிகன், தான் அங்குவைத்த விளக்கு வெளிச்சத்தின் உதவியால் அக் கள்வர்களையும் அவர்களது இயக்கத்தையும் அதன் அண்மையிற் கண்டு வெருக்கொண்டு, "ஐயோ! அருளுடைய அத்துறவியார் சில நொடிப்பொழுதுமுன் வராதிருந்தால் என் அருமை மனைவியையுந் தீவினையேன் கொன்றிருப்பேன்! அவளைக் கொன்ற சிறிது நேரத்திலெல்லாம் யானும் இக்கொடிய கள்வர்களாற் கொல்லப்பட்டிருப்பேன்! என் மனைவியும் யானும் மடிந்தபின் பொருளோ பொருளென்றலைந்த எனது தீய அவா எப்படியாம்! பொருளவாத் தொலைந்த அத் தூய பெரியவராலன்றோ என் மனைவியும் யானும் உயிர்பிழைத்தேம்! யான் தீவினைக்குத் தப்பினேன்! அப்பெரியாரை இந்நேரத்தில் விடுத்த சிவமே நீதான் எமக்குப் பெருஞ் செல்வம்!" என்று நெஞ்சம் நீராய் உருகிக் கண்ணீர் உகுத்தான். அவ்விடத்திற் போந்து நின்ற கள்வர்கள் அன்றிரவு விடியுமட்டும் அங்கிருந்து, அவ் வணிகனையும் அவன்

மனைவியையுங் காணுமல் அவன் அங்கே கொணர்ந்து வைத்த பொருள்களைமட்டுங் கண்டு வியப்புற்றுக், காக்கை கரையக் கேட்டு, அங்கிருந்த விளக்கு, அரிவாள், பெட்டகம் முதலியவைகளை யெடுத்துக்கொண்டு போய் ஒழிந்தனர்.

கதிரவன் புறத்தே பரவிய இருளைப் பருகி எங்கும் பேரொளி விரியக் கீழ்பால் தளதளவெனத் தோன்றினன். அத் துறவியாரும் அவ் வணிகனின் அருமை மனைவியை அழைத்துக்கொண்டு அவனது அகத்தே பரவிய அறியா அவா இருளை யொழித்து அறவொளி பரப்புவாராய் அவன் ஏறிஇருந்த இருப்பைமரத்தண்டை வந்தார். அவரது அருமைத் திருவுருவைக் காண்டலும் அவன் அம் மரத்திலிருந்து கீழிறங்கிப்போந்து அவர் திருவடிகளில் வீழ்ந்து தேம்பித் தேம்பி யழுது, "தீவினையேனைக் காக்கப்போந்த தெய்வப் பெருமானே! தேவரீர் செய்யாமற் செய்த அருளுதவிக்குப் பாவியேன் எங்ஙனம் நன்றி செலுத்த வல்லேன்! எவ்வாறு தேவரீரை வாழ்த்துவேன் வணங்குவேன்! யானும் என் மனைவியும் என் மக்களும் என் வழியுமெல்லாந் தேவரீர் திருவடிக்கே அடிமை!" என்று கண்ணீர் ஆறுய்ப்பெருக அழுதழுது உரைத்தான்.

அதுகண்ட அப் பெரியார் "மகனே! நீ யுள்ளந் திருந்தியதற்கு மகிழ்ந்தேன்! உயிர்மீண்ட நின் அருமை மனைவியைத் தழுவிக்கொள்! இந் நல்லாளினும் இவள் வயிற்றிற் பிறக்கும் மக்களினுஞ் சிறந்த செல்வம் உனக்கு வேறுளதோ? இவளையும் இவள் மக்களையும் நின்னையும் ஏழை யெளியவர்களையுங் கற்றுரையுந் துறந்தாரையும் ஓம்புதற்கே செல்வம் வேண்டுமல்லாமல், இவர்களை இழத்தற்கா அதுவேண்டும்? நல்லெண்ணமும் நன்முயற்சியுமிருந்தால்

உனது வாழ்க்கைக்கு வேண்டுமளவு செல்வஞ் சிவத்தி னருளால் உனக்குத் தானே திண்ணமாய் வரும்! இனிப் பொருளில் அவா வையாதே! நீ இப்போதிருக்கும் இல்லத் தில் மீண்டும் அக் கள்வர்கள் புகுந்து நின்னைத் துன் புறுத்தக் கூடுமாதலால், நீ அதனைவிட்டு, வேறோர் ஊரில் வேறோர் இல்லிற் குடிபுகுந்து, நின்வாழ்க்கையை அன்புக் கும் அறத்திற்கும் இடமாக நன்கு நடத்து!" எனச்சொல் லிச், சடுதியில் அவனைவிட்டு மறைந்தேகினர். அவ் வணி கனுந் தன் மனையாளுடன் அவர் கற்பித்த வண்ணமே வேறோர் ஊரிற்சென்று வைகி நனகு வாழ்ந்தனன்.

## கக. இம் மாநில இயக்கம்

நாம் உறையும் இம் மாநிலமானது வான் வெளியிற் பந்துபோற் சுழலும் ஓர் உருண்டை வடிவினதாகும். நாம் இருக்கும் இதன் மேற்பரப்பின் மையத்திலிருந்து இதனை ஊடுருவித் துளைத்துக்கொண்டு அளந்தபடியாய் நாம் இதன் கீழுள்ள மேற்பரப்பின் மையத்திற் சென்று சேரக் கூடுமாயின், இஃது எகூ00-மைல் குறுக்களவுள்ளதாய் இருத்தலை யறிந்து கொள்ளலாம். இதன் சுற்றளவோ உரு000-மைலாகும்.

இஃது உருண்டை வடிவினதென்பது எங்ஙனம் அறியக் கூடுமெனின், நாம் ஒரு கடற்கரையிற் சென்று நின்று, அக் கரையை நோக்கி வரும் ஒரு கப்பலைக் காண் குவமாயின், நெடுந் தொலைவிலிருந்து வரும் அக் கப்பலின் மேலுள்ள பாய்மரங்களே முதன்முதற் கட்புலனாகும். பின்னரது இந் நிலச்சரிவிற் பரவிநிற்குங் கடன்மேல் ஏறிக் கிட்ட வரவரப் பாய்மரத்தின் கீழுள்ள அதன் முழுவுடம்

பும் பையப்பைய நன்கு புலனாய்த் தோன்றும். அங்ஙனமே, நாம் நிற்குங் கரையின் துறைமுகத்திலிருந்து புறப்பட்டுத் தொலைவிற் செல்லும் ஒரு மரக்கலமானது கடல்நீர்ச்சரிவிற் கீழ் இறங்க இறங்க அதன் முழுவுடம்புஞ் சிறிது சிறிதாய் மறைந்துபோக, அதன் மேலுள்ள பாய்மரங்களே பின்னுஞ் சிறிது நேரம்வரையிற் கட்புலனாகின்றன. பின்னும் பின்னும் அது கீழ் இறங்க அதன் பாய்மரங்களும் மறைந்து போகின்றன. இதனால் இம் மாநிலமானது உருண்டை வடிவினதாதல் பெறப்படுகின்றதன்றோ? இன்னும் நமது இலங்கைத் தீவின் தென்முனைக் கண்ணதான மாத்தரையி லிருந்து புறப்பட்டுக் கிழக்கு நோக்கியே செல்லும் ஒரு நாவாயானது, மீண்டும் அம் மாத்தரைத் துறைமுகத்தி லேயே வந்து சேரக்காண்டலாலும் இந் நிலவுலகம் உருண்டை வடிவினதென்பது விளங்காநிற்கின்றது. இதற்கு ஒரு பந்தின் நடுவில் உள்ள ஒரு புள்ளியிலிருந்து புறப்பட்டு நேரே செல்லும் ஓர் எறும்பு திரும்பவும் அப் புள்ளியிலேயே வந்து சேர்தலை எடுத்துக் காட்டலாம். அதுவேயுமன்றித், திங்கள்மறைவு (சந்திரகிரகண) காலத்தில், அதன்கட் காணப்படும் இந் நிலவுலகத்தின் நிழலானது வட்டவடிவினதாய்க் காணப்படுதலாலும் இஃது உருண்டை வடிவினதாதல் தெளியப்படும்.

அவ்வாறாயிற், பந்துபோல் உருண்டிருக்கும் இந் நில மண்டிலம் வான்வெளியில் ஏதொரு பற்றுக்கோடு மின்றிச் சுழன்று செல்வது ஒரு பெரும் புதுமையாகத் தோன்று கின்றதன்றோ? எனின்; ஆராய்ந்து பாராதவர்க்கு அது புதுமைதான். ஆராய்ந்து பார்ப்பவர்க்கோ, அதன் உண்மை நன்குவிளங்கும். சிறுமியர் இருவர் எதிர்எதிரே நின்று தம் கைகளைக் கோத்துப் பிடித்துக்கொண்டு பின்னே சாய்ந்த வண்ணமாய்த் தம்பி சுற்றுதலைப் பாருங்கள்

அங்ஙனஞ் சுற்றுங்காற் பின்னே சாய்ந்திருக்கும் அவ்விரு வருங் கீழ்விழாதது ஏன்? அவர்கள் தம் கைகளை நீட்டி இறுகப் பிடித்திருத்தலா லன்றோ? அதுபோலவே, பகலவன் மண்டிலமானது இந் நிலவுலகத்தை இழுக்க, இஃது அதனை இழுக்க, இவ்வாற்றால் ஒன்று மற்றையதை விட்டுப் பிரியாதாய் வான்வெளியிற் சுழன்று செல்கின்றதென்க. அங்ஙனமாயின், அறிவில்லாத இவ்விருவேறு உலகும் அறிவுடைய சிறு மகாரைப்போல் ஒன்றையொன்று இழுத்துக்கொண்டு செல்லுதல் யாங்ஙனமெனின்; அறிவுடைய உயிர்கள் மட்டுமே ஒன்றையொன்று இழுப்பன, மற்றைய இழா என்று கொள்ளுதல் பொருந்தாது. அறிவில்லாத பொருள்களும் ஒன்றையொன்று இழுக்க வல்லனவாய் இருக்கின்றன. ஒரு காந்தக்கல் தன் பருமனுக்கு ஏற்பச் சிறிய பெரிய இருப்புத் துண்டுகளை இழுத்தல் காண்மின்கள்! அக் காந்தக்கல்லை ஒரு கடிதத்தின்கீழ்ப் பிடித்து, அக் கடிதத்தின்மேற் சில இருப்பு ஊசிகளை வைத்துக், கீழுள்ள காந்தக்கல்லை நெடுக இழுத்தால் மேலுள்ள இருப்பூசிகளும் அதனால் இழுக்கப்பட்டு, அக் கடிதத்தின்மேல் நகருதலைப் பார்க்கலாம். அறிவில்லாத காந்தம் இங்ஙனம் இழுக்கும் ஆற்றல் வாய்ந்ததாய் இருத்தல்போலவே, அறிவில்லாத ஞாயிற்று மண்டிலமும் வான்வெளியினூடு இந் நிலவுலகத்தை இழுக்க, இதுவும் அதனையிழுக்க இரண்டும் இடைவெளியிற் சுழன்று செல்கின்றனவென்று ஓர்ந்து கொள்க.

இராக்காலத்தில் நமக்கு நிலவொளியினைத் தருந் திங்கள் மண்டிலமும் இந் நிலவுலகத்தால் இழுக்கப்பட்டு, இதனைச் சுற்றியபடியாகவே ஞாயிற்றினையுஞ் சுற்றிச்செல்கின்றது. இங்ஙனமே, செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி முதலான உலகங்களும் ஞாயிற்றினை இழுக்க, அது மற்று

இவ் வுலகங்கள் எல்லாவற்றையும் ஒருங்கே யிழுக்க, இவை தாமுந் தம்முள் ஒன்றையொன்று சன்னல் பின்னலா யிழுக்க, எல்லாம் வான்வெளியிற் பற்பல பந்துகள்போல் ஞாயிற்றினைச் சூழ்ந்து செல்லா நிற்கின்றன.

அற்றேல், மற்றை ஆறு மண்டிலங்களும் ஞாயிற்றினைச் சூழ்ந்து செல்கின்றனவென்று கொள்ளுதல் என்னை யெனின்; இவ்வேழு உலகங்களிலும், ஞாயிறு ஒன்றுமே மிகப் பெரியது. நாமிருக்கும் இந் நிலவுலகத்தைவிட ஞாயிற்று மண்டிலம் பன்னிரண்டு நூறாயிரம் மடங்கு பெரியதாய் இருக்கின்றது. அதற்கு அடுத்தபடியாகப் பெரியதாய் உள்ளது வியாழமண்டிலமே யாகும்; இவ் வியாழன் நமது மண்ணுலகத்தினும் ஓராயிரத்து நானூறு மடங்கு பெரியது. இதற்கு அடுத்தபடி பெரியது சனி மண்டிலம். இதற்குச் சிறியது நமது மண்ணுலகு. நமது மண்ணுலகுக்குஞ் சிறியது வெள்ளியுலகு அதற்குஞ் சிறியது செவ்வாய் உலகு. அதற்குஞ் சிறியது புதனுலகாகும் இங்ஙனம் மறறை ஆறும், பகல் மண்டிலத்திற்குச் சிறியனவாய் இருத்தலாற், சிறியவாகிய அவை பெரியதாகிய பகலுலகி னால் ஈர்க்கப்பட்டு அதனைச் சூழ்ந்து ஓடியபடியாய் உலவு கின்றனவென் றுணர்ந்துகொள்க.

இனி, முருகப்பிரானுக்கு நேர்த்திக்கடன் செலுத்துந் தொண்டர் சிலர், அவன் எழுந்தருளி யிருக்குந் திருக்கோயி லைச் சுற்றி நிலத்திற்கிடந்து புரண்டுகொண்டே வலம் வருதலை நீங்கள் பார்த்திருக்கலாம். அங்ஙனம் புரண்டு வலம் வருபவர் முதலில் தம்மைத்தாம் சுற்றிப் பின்னர் அக் கோயிலைச் சுற்றி வலம் வருதல் போலவே, இந் நிலவுலக மும் முதலில் தன்னைத் தான் சுற்றிப், பிறகு ஞாயிற்று மண்டிலத்தினைச் சுற்றி வருகின்றது.

இஃது ஒருமுறை ; சு ப;
நான்கு மணி நேரம் பிடிக்கின்றது. மேற்கிலிருந்து கிழக்கு முகமாய் இஃது இங்ஙனந் தன்னைத்தான் சுற்றுங்கால் ஞாயிற்றினை நோக்கி இயங்கும் இதன் ஒருபாதி பகல் வெளிச்சம் உடையதாயும், ஞாயிற்றின் முகமாய்த் திரும்பாத அதன் மறுபாதி இருண்ட அல்லது நிலவொளிகெழுமிய இராப்பொழுது உடையதாயுங் காணப்படுகின்றன. நாம் உறையும் இத் தென்றமிழ்நாட்டிற் பகலவன் உச்சியில் விளங்கும்வேளை நண்பகற் பொழுதாயிருக்கையில், நமக்கு நேரே கீழ் உள்ள அமெரிக்கா தேயம் நள்ளிராப் பொழுது வாய்ந்ததா யிருக்கின்றது; நமது தமிழ்நாட்டிற்கும் அமெரிக்கா தேயத்திற்கும் நடுவில் உள்ளதாகிய இங்கிலாந்து தேயமோ அப்போது விடியற்காலம் உடையதாய்த் திகழ்கின்றது.

இவ்வாறாக இந் நிலவுலகம் இருபத்து நான்குமணி நேரத்தில் தன்னைத்தான் சுற்றியபடியாய்த், தன்னினும் பன்னூறாயிர மடங்கு பெரிதான பகலவன் மண்டிலத்தை முற்றுஞ் சுற்றிவருதற்கு முந்நூற்று அறுபத்தைந்தேகால் நாட்கள் ஆகின்றன இங்ஙனம் ஈது ஒரு முறை கதிரவனைச் சுற்றிவருங் காலமே ஓர் யாண்டு (வடமொழியில் வருடம்) என்று சொல்லப்படுகின்றது. அங்ஙனம் இது வெய்யவன் உலகினைச் சுற்றிச் சுழன்று வருதல் உண்மையாயின், இதன் இயக்கம் நமக்குப் புலனாகாமையும், பகலவனே இதனைச் சுற்றி வருபவனாகப் புலப்படுதலும் என்னையெனின்; இஃது ஒரு மணிநேரத்தில் ஆயிரம் மைல் விழுக்காடு கதிரவன்மண்டிலத்தை மிகு விரைவாகச் சூழ்ந்து சுழலுதலால், அத்துணை விரைவாகச் செல்லும் இதன்கண் உயிர்வாழும் நமக்கு இதன் இயக்கம் புலனாகாதுபோக, இதனாற் சுற்றப்படும் பகலவனே இதனைச் சுற்றிவருபவன்

போற் புலப்படுகின்றான். ஒரு மணிக்கு முப்பது மைல் விழுக்காடு ஓடும் புகைவண்டியிற் செல்லும் நம்மனோர்க்கே அப் புகைவண்டியின் ஓட்டம் புலப்படாமல் அதன் இரு பக்கத்தும் நிற்கும் நிலனும் மரஞ்செடி கொடிகளுமே ஓடுவதுபோற் புலப்படுமாயின், நினைத்தற்கும் அரிய கடுவிரைவுடன் ஒருமணி நேரத்திற்கு ஆயிரம் மைல் விழுக்காடு சுழன்றோடும் இந் நிலவுலகின் இயக்கம் நமக்குத் தென்படுமோ சொல்லுங்கள்! ஆகவே, நிலையில் உள்ளதுபோற் காணப்படுதல்பற்றி இம் மண்ணுலகு 'நிலம்' என்னும் பெயரால் வழங்கப்படினும், ஆராய்ந்து பார்க்குங்கால் வானக்கடலில் இது மிகுதியும் விரைந்து ஓடும் ஓர் ஓடமாகவே காணப்படுகின்றது என்க.

இனி, இந் நிலவுலகத்தின் இயக்கத்தில் வேறொரு முதன்மையான தன்மையும் உளது. இது தெற்கு வடக்கிற் செங்குத்தாய் நின்றபடி சுழலாமல், தன் பருமன் ௩௬0-பங்கிற் சிறிதேறக்குறையப் பதினைந்து பங்கு சாய்ந்தபடியாய் ஞாயிற்றினைச் சுற்றிச் சுழன்று செல்கின்றது. இங்ஙனஞ் சாய்ந்து சுழல்வதனால் இதன் வடமுனை தென்முனைகள் ஆறு திங்கள் பகலவன் முகமாய்த் திரும்பியும் பின் ஆறு திங்கள பகலவனை விட்டுத் திரும்பியுஞ் சுழல்கின்றன. அதனால் அவ் இரு முனைகளில் உள்ள நாடுகள் ஆறு திங்கள் ஒளியும் பின் ஆறு திங்கள் இருளும் வாய்ந்தனவாய் இருககின்றன வடமுனையைச் சார்நத நாட்டின் கண்ணதான மேருமலையைச் சூழ்ந்த பகுதிகளில் ஆறு திங்கள் கதிரவன் ஒளியும், மற்றை ஆறு திங்கள் அவன் அங்குக் காணப்படாமையின் இருளுந் தொடர்பாய் இருக்கின்றனவென்று மாபாரத வனபர்வம் (௧௬௩, ௩௭, ௩௮) பகர்வதும் நமது நிலவுலகின் சாய்ந்த இயக்கத்தால் அவ்விரு முனைகளிற் காணப்படும் அவ் விருவகை நிகழ்ச்சிகளையே

குறிப்பிக்கின்றது. ஆதலினாற்றான், வடமுனையில் உறையும் மக்களுக்கு ஆறு திங்கள் ஒரு பகற்பொழுதாயும், மற்றை ஆறு திங்கள் ஓர் இராப்பொழுதாயும் இங்குள்ளவராற் கொள்ளப்பட்டு வருகின்றன. வடதேயங்களில் உறையும் மக்களைத் தேவர்களாகக் கொள்ளுதல் இத் தென்னாட்டவர்க்கு வழக்கமாதலாற், பகலொளி வீசும் ஆறு திங்களையும், அத் தேவர்கட்கு ஒரு பகற்பொழுதாகவும், அவ்வொளியின்றி யிருள் சூழ்ந்த ஏனை யாறு திங்களையும் அவர் கட்கு ஓர் இராப்பொழுதாகவும் இந் நாட்டவர் பண்டு தொட்டு வழங்கி வருகின்றனர். இந் நுட்பங்கள் எல்லாம், பண்டை ஆரிய மக்களின் பழைய உறையுளை நன்காராய்ந்த பாலகங்காதர திலகரால் விரிவாக எடுத்து விளக்கப்பட்டிருக்கின்றன. வடமுனையில் உள்ளார்க்கு ஒவ்வோராண்டிலும் பகலவனொளி முதன்முதற் கட்புலனாய்த் தோன்றும் விடியற்காலம் பங்குனித் திங்கள் ஒன்பதாம் நாள் துவங்குகின்றது. அதிலிருந்து ஆறு திங்கள் வரையிற் சுடரவன் ஒளி வானின்கட் டுலங்கியபடியாய் இருந்து புரட்டாசித் திங்கள் எட்டாம் நாள் மறைந்துபோக, அதிலிருந்து மறு பங்குனி வரையில் அவ் வடநாடுகள் இருள் சூழப்பட்டனவாய் இருக்கின்றன. அங்ஙனம் இருள் சூழ்ந்திருந்தாலும், பகலவன் றோன்றுதற்கு முன் அறிகுறியாகக் காணப்படும் வைகறைப்பொழுது பங்குனிக்கு மூன்று திங்கள் முன்னரே மார்கழித் துவக்கத்தில் அந் நாட்டவர் கண்கட்குப் புலனாகுதலாற்றான், இத் தென்னாட்டவர்கள் தேவர்கட்குப் பொழுது விடியுங்காலமாக மார்கழித் திங்களைக் கொண்டாடி வருகின்றார்கள். ஆறு திங்கள் இருளிற்கிடந்து மாழ்கும் மக்கட்கு ஒருவகையில் ஆறுதலும் மகிழ்ச்சியுந் தரும்பொருட்டு இறைவன் அவ் வடமுனை நாடுகளுக்கு ஒரு பெரு மின்னல் ஒளியினைச் சிறிது காலம் வரையில் வானின்

கப் போற்றுவித்து வருதலையுஞ் சிறார்கள் கருத்திற் பதித்து இறைவனது பேரருட்டிறத்தை வியந்து வாழ்த்து வாராக!

---

## உ0. சிறுவர்க்கான கதைகள்—IV

### 1. ஓர் அரசிளஞ்செல்வியின் வைரமணிகள்

சுவீடன் தேயத்து அரசரின் தங்கையான ஊசினி என்னும் நங்கையார் ஏழையெளியவர்கட்கு ஒரு மருத்துவ விடுதி அமைக்கும் பொருட்டுத், தாம் பூண்டிருந்த வைர மணிகளை விலைசெய்வித்துத், தாம் விரும்பியவாறே அதனை மிகவுஞ் சீரிதாக அமைப்பித்து வைத்தனர். அங்ஙனம் அதனை அமைப்பித்து, அதன்கண் வந்துசேரும் நோயாளி களுக்கு வேண்டுவனவெல்லாஞ் செவ்வனே செய்யும்படி ஒழுங்குபடுத்திய பின், ஒருநாள் அவ்வரசிளஞ்செல்வியார் அங்குள்ள நோயாளிகளைப் பார்க்கச் சென்றார். சென்று ஒரு நோயாளியின் படுக்கையண்டை அவர் நின்றுகொண் டிருக்கையில், அதன்கணிருந்த அவன் அந் நங்கையார் செய்த செயற்கரிய அருட்செயலை யெடுத்து மொழிந்து அவரை வணங்கி வாழ்த்தி நெஞ்சங்கரைந்து தன் கண்களி லிருந்து கண்ணீர்த்துளிகள் சிந்தினன். அந் நீர்த்துளி களைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்த அச் செல்வியார் "ஆ! இப் போது மறுபடியும் என்னுடைய வைரமணிகளை நான் காண் கின்றேன்" என்று வியந்துரைத்தார்.

### 2. ஏழைக் குடிகளும் அரசனும்

இவ்விந்திய நாட்டின் வடக்கே இமயமலைக் கண்ண தான காசுமீர தேயத்திற் 'காரகோரம்' என்னும் பனிமலைப்

பகுதிகளில் உறையும் ஏழைமக்கள் அங்குள்ள கடுங் குளிரி ஞலும் பனிக்கட்டிகளின் வீழ்ச்சியினாலும் பெரிதுந் துன்புற்று வந்தனர். அந் நாட்டுக்கு அரசனான இராம சிங்கு என்பவன் அவர்களது துன்பத்தை நீக்குதற்கு ஏதோர் ஏற்பாடுஞ் செய்தான் அல்லன். அவர்கள் குளிருக்குத் தப்பிக் கதகதப்பாய் இருக்கத்தக்க விடுதிக ளாவது, உடுத்துக்கொள்ளத்தக்க உடைகளாவது, உண்ணு தற்குச் சிறிது இசைந்த வெய்ய உணவாவது கிடைக்கப் பெருமையாற், பாழடைந்த இடங்களில் இருந்து தொடா பாகத் துன்ப வாழ்க்கையே செலுத்தி வந்தார்கள். அதனால், அவர்கள் தங்கிய இடங்கள் பார்ப்பதற்கு அச்ச மும் அருவருப்புந் தருவனவாய்த் தோன்றின. எப்படியோ ஒருகால் அவ்விராமசிங்கு மன்னன் அவ் வேழைக்குடிகள் இருக்கும் அவ் விடத்திற்குப் போகலானான். அவன் போன நேரம் பட்டப்பகலாயிருந்தும், அங்குள்ள அவ் வெளியமக்கள் கையிற் கண்ணாடிவிளக்குகள் பிடித்துக் கொண்டு, கிழிந்த கந்தைத்துணி யுடுத்துக் குளிரால் நடுங் கும் உடம்பினராய் அவன் முன்னே வந்தனர் அந்நிலையில் அவர்களைக் கண்ட அம் மன்னன் அவர்களை நோக்கி, "நீங்கள் ஏன் இந் நண்பகல் வேளையில் விளக்கு வெளிச்சத் துடன் வந்தீர்கள்?" என வினவினான். அதற்கு அவர்களில் ஒருவன், "மன்னர் பெருமானே! எங்களுடைய பெருந் துன்பமாகிய இருள்நிறைந்த இவ்விடத்திற்குத் தாங்கள் வந்திருத்தலால், எங்களுடைய அத் துயர நிலையைத் தாங்கள் கண்ணாற் கண்டு அதனைப் போக்குதற் காகவே இவ் விளக்கு வெளிச்சங் கொணர்ந்தோம்" என்றனன்.

கண்ணிருந்தும் பிறர்துயர் காணாதவர்க்கு அதனைக் காண விளக்குவெளிச்சமும் வேண்டுமன்றோ?

## 3. சேவலுங் கழுகும்

சினங் கொண்டு போர் புரியும் இரண்டு ஆடவரைப் போல், இரண்டு சேவல்கள் பெருஞ்சீற்றத்துடன் நெடு நேரஞ் சண்டையிட்டன. கடைசியாகத் தோல்வியடைந்த சேவல் ஒரு கோழிக் கூட்டின் மூலையிற் போய் ஒளிந்து கொண்டது. வெற்றியடைந்த சேவலோ, ஒருவீட்டின் கூரைமேற் பறந்து சென்று வைகித், தான் பெற்ற வெற்றிக்கு அறிகுறியாகத் தன் செப்பட்டைகளை அடித்துக் கொண்டு, பெருங்கிளர்ச்சியுடன் கொக்கரித்தது. அந் நேரத்தில் அப் பக்கமாய்ப் பறந்துவந்த ஒரு கழுகு தன் காலின் நகங்களால் அச் சேவலை அறைந்து இறுகுஞ்சிக் கொண்டு போயிற்று. ஒளிந்திருந்த மற்றைச் சேவலானது அதன்பின் அச்சமின்றி வெளியே போந்து, தான் போராடிய [illegible]ரையை ம[illegible] டன.

## 4. நாட்டு எலியும் நகரத்து எலியும்

நாட்டிலே உயிர்வாழ்ந்த ஓர் எலியானது தனக்கு நேயமாய் உள்ள ஒரு நகரத்து எலியைத் தான் இருக்கும் ஒரு குடிசைக்கு வரவழைத்தது. நாட்டெலியானது கள்ளம் அற்றதாயும் நாகரிகங் குறைந்ததாயுஞ் செட்டாகவே வாழ்க்கை செலுத்துவதாயும் இருந்தாலும், விருந்துவந்த தன் பழைய நண்பனிடத்தில் எவ்வளவு சிறப்பாக நடந்து கொள்ள வேண்டுமோ அவ்வளவும் நடந்து, தன்னிடம் உள்ள உணவுப் பண்டங்களை யெல்லாம் ஒளியாமல் அதன் முன்னே கொணர்ந்து வைத்தது. தன் நண்பனுன நகரத்தெலி நகரத்திலுள்ள உயர்ந்த இனிய உணவுப் பொருள் களைத் தின்று சுவைகண்டதாதலால், அதன் நாவுக்குத் தான் படைக்கும் நாட்டுப்புறத்துப் பொருள்கள் இனிமை

தராவென அஞ்சிச், சுவையிற் குறைந்த அவைகளை அள வில் மிகுத்துப் படைத்தால் அது மனம்மகிழும் எனக் கருதி, அப் பண்டங்களை மிகுதி மிகுதியாகக் கொணர்ந்து அதன்முன் வைத்தது. நகரத்து எலியோ தனக்கு அவை பிடியாவாயினுந் தன் நண்பன்பொருட்டு வேண்டாவிருப் பாய் அதிற்சிறிதும் இதிற்சிறிதுமாக அப் பண்டங்கள் ஒவ் வொன்றையுங் கடித்துக் கொறித்தது; நாட்டெலியோ தன் நண்பன் எதிரே யிருந்து வாற்கோதுமை வைக்கோலை மட்டுங் கறித்தது.

அதனைக் கண்ட நகரத்தெலி, "நண்பனே! நாகரிகமும் கிளர்ச்சியும் இல்லா இவ்வாழ்க்கையை நீ எங்ஙனம் பொறுத் துக்கொண் டிருக்கின்றாய்? இண்டு இடுக்குகளில் உறையுந் தேரையைப்போல் தனித்த இம் மலைப்பாறைகளிலுங் காடு களிலும் நீ இருக்கின்றனையே! வண்டிகளும் மக்களுங் குழுமிய நகரத்தின் தெருக்களுக்கு இம் மலைகளுங் காடு களும் ஒப்பாகுமா? நீ வீணே இங்கிருந்து நின் வாழ்நாளைத் துன்பத்திற் கழிக்கின்றாய். உயிரோ டிருக்கையிலேயே நாம் எவ்வளவு இன்பத்தை நுகரவேண்டுமோ அவ்வளவும் நுகர்ந்துவிடல் வேண்டும். நம் எலியினமானது நீண்ட நாள் உயிர்வாழ்வ தில்லையே! ஆதலால், நீ என்னுடன் வந் தால் வாழ்க்கையின் நலத்தையும் நகர வாழ்க்கையின் சிறப் பையும் நினக்குக் காட்டுவேன்," என நுவன்றது.

அவ் வினிய சொற்களினாலும் நயமான அதன் றன்மை யினாலும் உள்ளங் கவரப்பெற்ற அந் நாட்டெலி அதனுடன் செல்லுதற்கு இசையவே, இரண்டும் ஒன்றுசேர்ந்து நகரத்தை நோக்கிச் சென்றன. அவை மறைவாக நகரத்தி னுள் நுழைந்த நேரம் மாலைப்பொழுதாகும். அந் நகரத் தெலி தான் இருக்கும் வீட்டினுள்ளே அதனை அழைத்துப்

போதற்கு நள்ளிரவாயிற்று. அவ் வீடோ செல்வர் ஒரு வர்க்கு உரியதாதலால், அதன் உள்ளகன்ற சிறந்ததோர் உணவுச்சாலையிற், பஞ்சுவைத்துப் பல்நிற மென்பட்டுத் தைத்த நாற்காலிகளுங் கட்டில்களுங் கம்பளி விரித்த மேசைகளும் இடப்பட்டிருந்தன; வெள்ளிய யானைக் கொம்புகளை ஈர்ந்து செய்த கலங்களும், இன்னும் இவை போலச் செல்வத்தின் பெருமையைக் காட்டும் ஏனைப் பண் டங்களும் ஆங்காங்கு அழகுற வைக்கப்பட்டிருந்தன. அங் கிருந்த மேசைகளின்மேல் மிகச்சிறந்த உணவுப் பொருள்கள் ஓர் உண்டாட்டின்பொருட்டுப் பல கடைகளி லிருந்துந் திரட்டிக் கொணர்ந்து வெள்ளித் தட்டுகளிலும் வெள்ளிப் பாண்டங்களிலும் வரிசை வரிசையாக வைக்கப் பட்டுத் துலங்கின.

இப்போது நாகரிகமுள்ள அந் நகரத்தெலி தன் நண்ப னுக்கு விருந்துசெய்யத் துவங்கி, அதனைப் பட்டுமெத்தை மேல் அமரச்செய்து, தான் அங்கும் இங்குமாய் ஓடி, ஒவ் வொரு தட்டிலுங் கலத்திலும் உள்ள கொழுமையான உணவுப்பண்டங்களை யெல்லாம் முதலில் தான் ஒவ்வொன் றாய்ச் சுவை பார்த்து, மணமும் இனிமையும் மிகுந்தவை களை ஒன்றன்பின் ஒன்றாக எடுத்து வந்து அதன் முன்னே வைத்து, அவைகளைத் தின்னும்படி வற்புறுத்தியது. நாட் டெலியோ தான் தன் இல்லத்தினுள் இருப்பதுபோற் காட்டிக்கொண்டு, தனக்குச் சடுதியில் வந்த இந் நல் வாழ்வை யெண்ணித் தன்னுள்ளே மகிழ்வதாயிற்று தான் தனது நாட்டுப்புற வாழ்க்கையில் தின்றுவந்த எளிய உணவுகளை இகழ்வாய் நினைந்து, இப்போது தனக்குக் கிடைத்த கொழுவிய பண்டங்களைத் தின்று இன்புற்றபடி யாய் இருந்தது.

இங்ஙனம் அவ்விரண்டும் இருக்கையில் திடீரென அவ்வுணவுச்சாலையின் கதவுகள் திறந்தன. உடனே உண்டாட்டுக் கூட்டம் ஒன்று உள்ளே புகுந்தது. அங்ஙனம் புகுந்த அக் கூட்டத்தவரைக் கண்டு வெருக்கொண்ட அவ்விரண்டு எலி நண்பர்களும் பெருந் திகிலுடன் கீழே குதித்தோடி அண்டையிற் கிடைத்த ஒருமூலையிற் பதுங்கினர்! பின்னர் அவை அச்சாலையின் வெளியே போய்விடுதற்கு நகர்ந்துசெல்லப், புறத்தேயிருந்த நாய்கள் குலைக்கும் ஓசை கேட்டு, அவை மேலும் பேரச்சங்கொண்டு திரும்பவும் உள்ளே செல்லலாயின. கடைசியாக அங்கு நடைபெற்ற உண்டாட்டு முடிந்து அரவம் அடங்கினபின், அந் நாட்டெலி தான் ஒளிந்திருந்த இடத்தைவிட்டுப் புறத்தேவந்து, "ஓ, என் அன்புள்ள நண்பனே! இந்த நாகரிக வாழ்க்கை அதனை விரும்புவார்க்கே தக்கது. அச்சமும் கவலையுஞ் சூழக் கொழுவிய உணவுகளை உட்கொள்ளுதலினும், அச்சமின்றி அமைதியாய் அரிசிச்சோறு உண்பதே மேலானது" என்று சொல்லிவிட்டுத், தனது நாட்டுப்புற வீட்டிற்குச் சென்றது.

## உ௯. கவித்தலை மலைக்கோட்டை

இவ் விந்திய நாட்டுக்கு மேற்கே நெடுந்தொலைவு கடல் தாண்டிச் சென்றால் இத்தாலி தேயத்தின் தலைநகரா யுள்ள உரோம் பட்டினத்தை அடையலாம். இது தைபர் என்னும் ஆற்றங்கரையில் மிகவும் அழகிதாக அமைந்திருக்கின்றது. இதனைச் சூழவுள்ள மேல்நாடுகளிலும் இதன் கண்ணும் உறையும் மக்கள் பெரும்பாலும் நம் ஆங்கில மக்களைப்போல் வெண்மைநிறம் மிக்கு நீண்டுயர்ந்த திண்ணிய யாக்கை வாய்ந்தவர்களாய் நாகரிகத்திற் சிறந்து விளங்குதலால், இவர்களை நம் பண்டைத் தமிழ்மக்கள்

'தேவர்கள்' என வழங்கிவந்தனர். பண்டிருந்த நம் பாண்டிய மன்னன் ஒருவன், அந்நாளில் உரோம் நகரின்கண் அரசு வீற்றிருந்த அகத்திய (Augustus) வேந்தனுக்குத் தூது விடுத்த செய்தியைக் குறிக்கும் ஒரு கல்வெட்டானது, பாண்டியன் தேவர்கள்பாற் றூது விடுத்தனன் என்றே நுவல்கின்றது. ஆகவே, மேல்நாட்டவர்கள், இங்கிருந்த நம் முன்னோர்களால் தேவர்களாகவே கருதப்பட்டமை தெற்றென விளங்குகின்றதன்றோ? இங்ஙனந் தேவருலகாகக் கருதப்பட்ட அம் மேனாட்டின் தலைநகரான உரோம் பட்டினத்தில் இற்றைக்கு இரண்டாயிரத்து மூந்நூற்றிருபது ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்த அரியபெரிய ஒரு நிகழ்ச்சியை இங்கெடுத்துக் கூறுவாம்.

உரோம் நகரமானது முதன்முதல் உண்டாகியபோது அதிலிருந்த மக்கள் செல்வம் உடையவர்கள் அல்லர். ஒவ்வொருவர்க்கும் இரண்டு மூன்று காணி நிலங்கட்குமேல் வேறில்லை. அந்நிலங்களை அவர்களே தாமுந் தம் குடும்பத்தவருமாகத் திருத்திப் பயிரிட்டு, அவைகளின் விளைவைக் கொண்டு வாழ்க்கை செலுத்திவந்தனர். அந் நகரத்தைச் சூழவுள்ள வயல் நிலங்களும் ஆடுமாடுகள் மேயும் மேய்ச்சல் நிலங்களும் நாற்புறமுஞ் சுற்றியிருக்கும் மலைகளுக்கு இடையே பச்சைப்பசேலெனக் கொழுமையாய் விளங்குங் காட்சியானது பொற்றகட்டின் நடுவே பதிக்கப்பட்ட முழுப்பச்சை மணியைப்போற் சேய்மையிலிருந்து காண்பார்க்குத் தோன்றுநிற்கும். இவ்வாறு வயல் நிலவிளைவைக் கொண்டு வாழ்க்கை செலுத்திவந்த உரோமர்கள் தம் விடாமுயற்சியினாலும் உழைப்பினாலும் நாளடைவிற் பெருஞ் செல்வத்தை அடையலாயினர். அதனால் அந் நகரமானது மிக அழகிய எழுடுக்கு மாளிகைகளால் வரவரப் பெருகலாயிற்று. இங்ஙனம் நாளுக்குநாட் செல்வத்தி

லோங்கிவந்த இந் நகரத்தின் கண்ணே கபித்தலை (Capitol) என்னும் ஒரு பாறைமலை உளது. அம் மலையின் உச்சியிலே மிகவும் வலிவான ஒருகோட்டையும், அக் கோட்டையின் நடுவே சிவத்த (Jupiter)க் கடவுளுக்கும் அவர்தந் தேவியாரான சிவனை (Juno) அம்மைக்கும் எடுப்பித்த சிறந்த திருக்கோயிலும் அமைக்கப்பட்டுத் திகழ்ந்தன! இம் மலைக் கோட்டையே உரோம் நகரத்திற்குப் பெரியதோர் அரணாய் வயங்கிற்று.

அப் பழையநாளில் உரோமர்களுக்குத் தனி யரசன் இல்லை. அவர்கள் தம்மால் ஆண்டுதோறுந் தெரிந்தெடுக்கப்பட்ட சிலரைத் தலைவராக நிறுத்தி, அவர்களைக்கொண்டு செங்கோல் செலுத்திவந்தார்கள். ஆகவே, இவர்களது அரசு குடியரசு என்றே சொல்ல வேண்டும். உரோமர்கள் தம் அரசியற்றலைவர்களைத் தெரிந்தெடுக்கும் இடம், அந் நகரத்து மக்கள் ஒருங்கு திரளும் அங்காடி (சந்தை)ப் பக்கமே யாகும். அங்ஙனந் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கும் நாட்களில்மட்டும், தாம் உழவு தொழில் செய்யுங்கால் மேற்கொண்டிருந்த பருப்படியான உடைகளைக் களைந்தெறிந்து, விளிம்புகளில் ஊதாக்கரையுள்ள வெண்மையான வேறுஆடை பூண்டு தொகுதி தொகுதியாகச் செல்வார்கள்.

இவர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் இருவரும், யானைமருப்பிற் செய்த அரியணை மீது அமர்ந்து அரசு செலுத்துவர். கோடரிகோத்த கோல்களைச் சேர்த்துப் பிணைத்த கட்டுகள் ஏந்திய கையினராய் மெய்காப்பாளர் சிலர் இத் தலைவர்களுடன் அருகுசெல்வர், அருகுநிற்பர். இவ்வுரோம் நகரத்தையடுத்துச் சூழ வேறுசில சிறுசிறு குடியரசு நாடுகளும் இருந்தன. அந் நாடுகளிலிருந்த மக்க

ளும் ஏறக்குறைய் உரோம் நகரத்து மக்களையொத்த பழக்க வழக்கங்கள் வாய்ந்தவர்களே. என்றாலும், வயல்நிலங்கள் நன்கு விளைந்து, அறுப்பு அறுத்து விளைபொருள்களைத் தொகுத்துக் கொள்ளுங் காலங்களில், உரோமர்க்கும் அச் சிறு குடியரசுகளுக்கும் போர் மூள்வதுண்டு. அப்போது அரசியற்றலைவர்கள் தீர்மானஞ் செய்தபடி, மேற்சொல்லிய கலித்தலை மலைக்கோட்டையில் உரோமர்கள் தம்பெண்டிர் பிள்ளைகளையும் ஆடுமாடுகளையும் பாதுகாத்து வைத்துத், தாம் பகைமேற் செல்வர். அங்ஙனம் பகைமேற் செல்லுங் காலங்களிலெல்லாம் உரோமர்கள் வெற்றியடைபவர் அல்லர். ஆனாலுந், தோல்வியடைந்ததனால் மனவெழுச்சி அவிந்துபோகாமல் அவர்கள் மேலும் மேலும் பகைவரை விடாமல் தாக்கிக் கடைப்படியாக வாகைமாலை சூடுவர். இங்ஙனம் பண்டை உரோமர்கள் தமது நகரத்தின்பால் அளவிறந்த பற்றுவைத்துத், தமக்குள் ஒற்றுமையும் அன்பும் மிக்கு, அஞ்சா ஆண்மையினராய் எதிர்நின்று கடும்போர் புரிந்து வந்தமையால், அவர்கள் சிலகாலத்தில் தமக்குப் பகைவராயிருந்தார் அனைவரையும் ஒருங்கே வென்று, தமது அரசாட்சியினை இத்தலிதேயத்தின் நடுப் பகுதியெங்கும் வீறிவிளங்கச் செய்தனர்.

இவ்வாறாக ஒருநானூறு ஆண்டுகள் வரையில் உரோமர்களின் அரசு தனக்கு ஒப்பதும் மிக்கதுமின்றித் தனிச் சிறப்பு வாய்ந்து துலங்கிற்று. இத்துணைப் பேராற்றல் படைத்த இவ்வரசுக்கும் பின்னர் ஒருபெருங் கொடும்பகை தோன்றிற்று. காலவர் (Gauls) என்னும் மலைநாட்டவர் கூட்டம் ஒன்று நாளுக்குநாள் ஐரோப்பாப் பெருநிலப் பிரிவின் நடுப்பகுதியிற் பெருகி வந்தது. இவர்கள் நீளமான கைகால்களுஞ் செம்பட்டை மயிர்களும் உடையவர்கள்; நீண்டுயர்ந்த வலிய யாக்கை வாய்ந்தவர்கள்; அஞ்சா

நெருங்கினார்கள்; ஆலூப்பு மலைகளையே தமக்கு உறைவிடமாய்க் கொண்டவர்கள். இத்தலதேயத்தின் வடக்கிலுள்ள வயல்நிலங்கள் நன்குவிளைந்து பயன்தருங் காலங்களில் இக் காலவர்கள் அங்கே புகுந்து கொழுவிய விளைபொருள்களைக் கொள்ளைகொண்டுபோகத் தொடங்கியதல்லாமலும், தாம் புகுந்த அந் நாடுகளில் உள்ள ஊர்களைக் கொளுத்தியும், அவ்வூர்களிலிருந்த மக்களைப் படுகொலை செய்தும், அங்குள்ள ஆடுமாடுகளைக் கவர்ந்தும் பெருங்கேடு செய்து வந்தார்கள். அங்ஙனந் தாம் பாழ்செய்த ஊர்களில் இருந்த மக்கள் முழுதும் அழிந்துபட்டால் அவ்வூர்களில் தாம் குடியேறியும் வந்தனர். இங்ஙனம் இத்தலிக்கு வடக்கே பெருந்தீது இழைத்துவந்தவர்களாகிய காலவர்களும், அதற்குத் தெற்கே ஆற்றலினும் உழைப்பிலும் நாகரிகத்திலும் மேன்மேல் ஓங்கித் தனியரசு புரிந்த உரோமர்களுங் கடைசியாக ஒருவரையொருவர் எதிர்க்குங் காலம் அண்மிற்று. பழைய உரோமர்களைத் தேவர்களாகக் கொண்ட வடமொழிப்புராணநூலார், இவ் வுரோமர்கள் மேற் படைதிரண்டுவந்து அவர்கட்குப் பெருந்தீது செய்த காலவர்களையே "காலகேயர்" என்னும் அரக்கர் கூட்டமாகக் கருதிக் கதையெழுதி வைத்தனர்; அது நிற்க.

மேற்சொன்ன கொடிய காலவர் கூட்டத்திற்குப் பிரான் எனப் பெயரிய ஒருவன் தலைவனாய் நின்றனன். இவன் பிறர் எவரிடத்துங் காணப்படாத ஒரு தனித்திறமை வாய்ந்தவன். இவன் தன் கூட்டத்தில் ஒரு பெரும்பகுதியினரைப் படைஞராகத் திரட்டிக்கொண்டுவந்து, இத்தலியின் வடக்கின் கண்ணதான 'குளூசியம்' என்னும் பட்டினத்தைத் தாக்கினான். அப் பட்டினத்தில் உள்ளவர்கள் அக் கொடிய பெருங்கூட்டத்தவர்களைத் தனியே எதிர்க்க மாட்டாதவர்களாய், உரோம் நகரிலுள்ள அரசியற் றலைவர்

கள் தமக்குத் துணைப்படை யொன்று விடுத்து உதவி செய்யுமாறு கேட்டு அவர்கட்கு ஒரு வேண்டுகோள் விடுத்தனர். அதற்கிசைந்து அத் தலைவர்களும் அரசகுடும்பத்திற்சேர்ந்த மூவரை முதலில் அவர்கள்பால் தூதாகப் போக்கினர். தூதுபோன மூவரும் அக் காலவர் தலைவனை பிரானிடஞ் சென்று, "தம்மட்டில் அமைதியாக வாழ்க்கை செலுத்திவருங் குளூசிய நகரத்தார்மேல் நீங்கள் ஏன் வலிந்து வந்து போர் தொடுக்கின்றீர்கள்? அவர்கள் நுங்கட்கு யாது தீங்குசெய்தனர்?" என வினவினர். அதற்கு அப் பிரான் தலைவன், "குளூசியர்கள் கொழுமையான நிலங்கள் வைத்திருக்கின்றனர். அந் நிலங்கள் காலவர்களாகிய எங்கட்கு வேண்டும். அவற்றை எங்கட்குக் கொடாமல் அவர்கள் தாம வைத்திருப்பதே எமக்குத் தீங்கு செய்வதாகும். உரோமர்களாகிய நீங்களும் இங்ஙனமே அயலவர் நிலங்களைக் கைப்பற்றினீர்கள் அல்லிரோ? ஆதலால், யாம் அங்ஙனஞ்செய்வது கொடுமையும் அன்று, முறைதவறியதும் அன்று. எவர் வலியரோ அவர் தமக்கு வேண்டுவதைப் பிறர்பா லிருந்து கைக்கொள்வதே பழைய முறையுமாகும். எமக்கு வேண்டுவதைக் கொடாமல் வைத்துக்கொள்ள வல்லவர்கள் அங்ஙனமே அதனை வைத்துக் கொள்ளட்டும், பார்க்கலாம்" என்று விடை கூறினன்.

அவன் கூறிய அம் மறுமொழியைக் கேட்டுச் சினங்கொண்ட அத் தூதுவர் மூவருங் குளூசியரிடஞ் சேர்ந்து கொண்டு காலவர்களுடன் போர்புரியத் தொடங்கினர். அம் மூவரில் ஒருவர் அக் காலவர் தலைவனைச் சேர்ந்த வலிய ஒருவனொடு தனிச்சண்டையிட்டு அவனைக் கொல்லுதலுஞ் செய்தனர். தூதுவர்களாய்ச் செல்பவர்கள் தமக்குரிய கடமையை மீறி அங்ஙனம் ஒரு பக்கத்தவருடன் சேர்ந்து

மறு பக்கத்தவரைத் தாக்குதல் ஆகாது முறைகடந்த இச் செயலைக் கொடிய காலவர்களுஞ் செய்தவர் அல்லர். ஆகவே, அவர் தலைவனான பிரான் தன் தூதுவர்களை உரோம் நகர்த் தலைவரிடம் போக்கித், தூதுநெறிபிழைத்த அம் மூவரையுந் தான் ஒறுத்தற்காகத் தன்னிடம் ஒப்புவிக்கும்படி கேட்டனன். முறைதவறிய அத் தூதுவர் மூவரையும் அவனிடம் ஒப்புவித்து ஒறுத்தல் தக்கதேயெனக் குருமார்களுஞ் சூழ்ச்சித் துணைவர்களும் இசைந்துரைத்தனராயினும், அத் தூதுவரின் தந்தையார் அவர்களை அங்ஙனஞ் செய்தல் ஆகாதெனத் தடுத்து, இனி மூளும் போருக்கு அம் மூவருமே தலைவராய்நின்று படைசெலுத்த வேண்டுமென வற்புறுத்தித், தம் புதல்வர் செய்த குற்றத்திற்கு உரோம் மக்கள் அனைவருமே உடன்படுமாறு செய்துவிட்டனர். இதனால் உரோமர்கள் எல்லார்க்குமே ஓர் அலைப்பு வந்தது.

முறைசெய்யத் தவறிய உரோமர்கள்மேற் காலவர்கள் கடுஞ்சினமுஞ் சீற்றமுங் கொண்டனர்; அதனால், தாம் புகுந்த வடக்கிடங்களிற் கொள்ளையிடுதலை விட்டு, உரோமர்களைத் தவிர வழியிலுள்ள ஏனைக் குடியரசுக்கெல்லாந் தாம் நண்பரே யெனப்புகன்று, நேரே உரோமரைத் தாக்குதற்கு மிகவிரைந்து போந்தனர். உரோமர்கள் தாம் முறைபிசகி நடந்ததை யுன்னி வருந்தினராய்க், கடுகெனத் தம்முடைய படைகளைத் திரட்டலாயினர். தாம் போர்க்குச் செல்லும் முன் கடவுளர்க்கு வழிபாடு செய்யும் வழக்கத்தினராயிருந்தும், தாந் தங் குருமார் சொல்லைக் கேளாமல் நடந்தமையால், உரோமர்கள் இப்போது கடவுள் வழிபாடு செய்யாமலே போருக்கு எழுந்தனர். “குற்றஞ் செய்த நெஞ்சங் குறுகுறு என்னும்” என்னும் பழமொழிப்படி, போர்செய்யும் முன்னம் அவர்கள் நெஞ்சமே அவர்களை

வலியழித்ததாயின், அவர்கள் காலவருடன் செய்த போரில் தோல்வி யடைந்தனரென நுவலுதலும் வேண்டுமோ? உரோம் நகருக்குப் பதினொருகல் எட்டியுள்ள 'அலியா' யாற்றங்கரையிற் காலவர்களால் முறிவுண்ட உரோமர்கள் சின்னபின்னமாய்ச் சிதைந்து பின்முதுகு காட்டித் தம் நகர் நோக்கி ஓடிவருகையிற் பெரும்பாலார் தைபர் யாற்று வெள்ளத்தில் அகப்பட்டு அமிழ்ந்தி யிறந்தனர். எஞ்சிய மிகச் சிலரே தம் நகரில் வந்து சேர்ந்தனர்.

அங்ஙனம் முறிந்தோடிய உரோமர்களைக் காலவர்கள் உடனே பின் றொடர்ந்திருந்தனராயின், உரோமமென்ற பெயரும் உரோமரினமும் அவர்தங் கத்திக்கு இரையாகி அடியோடு அழிந்து போயிருக்கும். ஆனால், அக் காலவர்கள் அவர்களைப் பின் றொடராராய் அவர்களிடமிருந்து கொள்ளை கொண்ட பொருள்களைத் தாம் பங்கிட்டுக் கொள்வதிலும் விருந்தாட்டு அயர்வதிலுமாக மூன்றுநாட் கழித்தனர். அதனால், உயிர் தப்பிய உரோமர்கள் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் முயற்சிகளை அம் மூன்றுநாட் களிற் செய்து கொண்டனர். உரோமரின் படையாட்கள் கலைந்து போய் விட்டமையால் நகரத்தைப் பாதுகாக்குங் கருத்து எவர்க்குமே இல்லையாயிற்று எஞ்சி நின்றவர் களில் மனத்திட்பம் உடையவர்கள் தாம் எடுத்துக் கொள்ளக் கூடிய பண்டங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு கவித்தலை மலைக்கோட்டையிற் போய்ச் சேர்ந் தனர். அங்ஙனம் அதனுட்சேர்ந்த உரோமர்கள், அதனைப் பகைவர்கள் வந்து தாக்குவரேல் அதனை முடிவுவரையிற் றும் காத்து நிற்பதென்றே உறுதிசெய்தனர். கலைந்து போன தம் படைஞர்கள் இதற்கிடையில் மீண்டும் ஒருங்கு கூடிவந்து தமக்கு உதவியாற்றுதல் கூடுமெனவும், அல்லது காலவர்களே, தமது வெஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டபின்

உரோம் நகரைவிட்டு அகலுவர் எனவும் அவர்கள் எண்ணினர்.

சண்டைசெய்ய வலியில்லாதவர்கள் உரோம நகருக்குப் புறம்பே வெளியிலுள்ள ஓர் ஊரிற்போய் அடைந்தனர். அவ்வாறு சென்றவர்களில் வெள்ளாடையுடுத்த கன்னிப் பெண்களும் பலர். இவர்கள் என்றும் அவியாது ஒளிர விடும் நெருப்புள்ள தடவுகள் (தூபக்கால்கள்) ஏந்திய கையினராய் நெடுவழி நடந்து செல்கையில் இவர்களுடைய அடிகள் புண்பட்டதும் அல்லாமல், இவர்கள் தாஞ் சுமந்து சென்ற கோயிற் றட்டு முட்டுகளாலும் மிகவுங் களைத்துப் போனர்கள். இவர்களுக்குச் சிறிது முன்னே தன்குடும்பத் தவரை வண்டியில் ஏற்றிக்கொண்டு சென்ற அலுவினியன் என்பான், இப் புனிதமாதரார் அங்ஙனங் களைத்துத் தள்ளாடி வருதலைக் கண்டு நெஞ்சம் இரங்கித் தன் குடும்பத்தவரைக் கீழ் இறக்கிவிட்டு, இக் கன்னி மகளிரைத் தனது வண்டியில் ஏற்றிக்கொண்டு சென்றனன். ஒவ் வொருவருந் தம் உயிர் பிழைக்க ஓடும் அந் நேரத்தில் தன் நலத்தையுந் தன் குடும்பத்தினர் நலத்தையும் ஒரு சிறிதும் பாராது, இக் கன்னிமாரைத் தனது வண்டியிலேற்றிக் கொண்டு சென்ற அவ் வாண்மகனது அரிய இரக்கச் செயலைக் கேட்டவரெல்லாம் அவனைப் பெரிதும் வியந்து கொண்டாடினர்.

அவ்வாறு உரோம்நகரை விட்டுச் செல்லாதிருந்தவர் கள் பழைய அரசியற் சூழ்ச்சித் துணைவர்கள் எண்பதின் மருங் குருமார் சிலருமேயாவர். ஓட வலியற்ற சிலர் தாம் கவித்தலை மலைக்கோட்டையினுட் சென்று சேர்ந்தால் அங்கே போர்செய்ய வல்லவர்களா யுள்ளார்க்குப் பயன் படும் அரிய உணவுப் பொருள்களில் தாமும் பங்குபெற

நேரும் என உன்னித், தாம் அங்குச் செல்ல மனம் ஒருப் படாமற், பகைவரின் கத்திக்குத் தம்மை இரையாக்கித், தூது நெறி பிழைத்தாரால் தமது நாட்டுக்குவந்த ஏதத்தை அவ்வாற்றால் நீக்கிவிடத் துணிந்தனர்! ஈதன்றோ தனக் கென வாழாத் தாளாளர் செயல்!

மூன்றுநாட் சென்றபின் காலவர்கள் முன்னேறிவந்து உரோம் நகரிற் புகுந்தனர், மதில்வாயிற் பெருங்கதவுகள் திறந்தபடியாய் நின்றன; தெருக்களில் அரவம் ஏதுமே இல்லை; தெருக்களிலுள்ள இல்லங்களின் வாயிற்கதவுகளுந் திறந்திருந்தன; ஆனால், அவ்வில்லங்களினுள் எவருமே காணப்படவில்லை. அதனால், அக் காலவர்கள் வெறுந் தெருவுகளினூடே விரைந்து நடந்து, அரசியல் மண்டபத் திற் போய்ச் சேர்ந்தனர்கள். அம் மண்டபத்தில் உயர எழுப்பிய ஒரு பலகைமேல் ஒரு வரிசையாக இடப்பட் டிருந்த யானைமருப்பிற் செய்த நாற்காலிகள் ஒவ்வொன் றிலும், நரைத்த தலைமயிரும் நரைத்த தாடிமயிரும் உடையவாய்த், திறப்பாக விடப்பட்ட கைகால்களுடன், ஊதாச் சரிகைக்கரை கோத்த விளிம்புகள் வாய்ந்த வெள்ளைக் குப்பாயம் பூண்டு, கையில் வெள்ளிய செங்கோல் பிடித்த உருவங்கள் ஆடாத அசையாத முகத்துடன் பெருந் தன்மையோடு அமர்ந்திருத்தலை அக் காலவர்கள் கண்டார் கள். கண்ட அவ் வுருவங்களின் கண்களைத் தவிர மற்ற உறுப்புக்களினால் அவை உயிருள்ளனவென்று நம்புதற்கு இடம் இல்லாமலேயிருந்தது. அதனால், அக் காலவர்கள் அவை உயிர் உள்ளவைகளா இல்லாதவைகளா எனத் தம் முள் ஐயுற்று, அவ் விழுமிய காட்சியைக் கண்டு திகைப் புற்று அவற்றின் முன்னே வாய்வாளாது நின்றனர். அவ் வுருவங்கள் தெய்வ வடிவங்களா அல்லது அவ் உரோம் நகரத்தில் அரசு செலுத்துந் தலைவர்களின் குழுவாவென்று

இறும்பூதுற்று எண்ணினர். கடைசியாக அவர்களில் முரடனொருவன் அவ் வடிவங்களின் உண்மையைத் தெரிதல் வேண்டி, அவற்றுள் ஒன்றன் தாடிமயிரைப் போய்த் தடவினன். நாகரிகமற்ற ஒருகாடவன் அங்ஙனந் தம்மைத் தொடுதற்கும் பழித்தற்கும் உரோமரது உள்ளம் பொறுக்குமோ! உடனே, தொடப்பட்ட அவ் வுருவந் தன்கையிற் பிடித்திருந்த வெள்ளிக் கோலால் தன்னைத் தொட்டவன் தலையைப் புடைக்கவே, காலவர்கொண்ட ஐயம் ஒழிந்தது. அங்கு அமர்ந்திருந்த அவ் வுருவங்கள் உரோம நகரின் அரசியற் றலைவர்களே யெனத் தெளிந்தனர். தெளிந்ததும், அத் தலைவரின் மாட்சி வடிவங்களைக் கண்டு அக் காலவர் கட்குண்டான வணக்க வொடுக்கமெல்லாம் பறந்துபோயின. உடனே அக் கொடியர்கள் பெருஞ் சீற்றத்துடன் அவர்கள் மேற் பாய்ந்து, ஒவ்வொருவரையும் நாற்காலியி லிருந்தவாறே வைத்துக் கத்தியாற்குத்திக் கொன்றார்கள்! அதன்பின் அவர்கள் அந் நகரமெங்கும் பரவி வீடுகளிற் புகுந்து கொள்ளையிட்டும், அவைகளைத் தீக்கொளுவியும் அழித்தனர்.

ஆனாலும், அவர்கள் கவித்தலை மலைக்கோட்டையைக் கைப்பற்றுவது தம்மாலியலாதென்று கண்டார்கள். கண்டு, அதனுள் இருந்தவர்களைப் பட்டினிகிடத்தி அழிக்க முனைந்தனர். அதற்கிடையில் அந் நகரத்தின் புறமதில்களையும், நெருப்புக்குத் தப்பின வீடுகள் கோயில்களையும் அழிக்குங் கொடுமுயற்சியிற் றலையிட்டனர். கவித்தலை மலைக்கோட்டையின் உயரத்திலிருந்த உரோமர்கள், கீழே தமது நகர்முழுதுங் கரிந்து பாழாதலையுங், கொடிய காலவர்கள் ஆங்காங்கு வெறிகொண்ட வேங்கைப் புலிகள்போல் அலைதலையுங் கண்டு உள்ளம் வெதும்பினர். இப் பொல்லாத நேரத்திலும் அவர்கள் தாம் இறைவன்பால் வைத்த உறுதியான அன்பிற்

சிறிதும் நெகிழ்ந்திலர். இத்தனை தீங்குந், தூதுநெறி பிழைத்தார்க்கு உதவியாயிருந்தமையால் வந்த முறையான திருவருளொறுப்பே என நினைந்து, அதன் ஆணைக்கு அடங்கியொழுகவே தீர்மானித்தனர். தாம் உடன்கொண்டு வந்த உணவுப் பண்டங்களின் தொகை நாளுக்குநாட் சுருங்கித் தாம் பட்டினிகிடக்கவேண்டிய நாள் அருகியுந், தாம் சிவனையம்மைக்கு நேர்ந்துகொண்டு ஆங்குள்ள அவளது திருக்கோயிலில் விட்டுவைத்த தாராப் பறவைகளை உரோமர்கள் சிறிதுந் தொடவேயில்லை. இடுக்கட் பட்ட இவ் வேளையில் அவர்களில் ஒருவனை 'பேவியன் முர்சன்' என்பான் செய்த செயற்கருஞ் செயல் பெரிதும் நினைவு கூரற்பாலதொன்றாய் நிலவுகின்றது. தான் வழிபடுங் குல தெய்வத்திற்கு ஆண்டிற்கு ஒருகால் எடுக்குந் திருவிழா நாள் வந்தது; அஃது அந் நகரத்திலுள்ள ஒரு சிறிய குன்றின்மேற் செய்யப்படுவதாதலால், அவன் வெள்ளையுடை பூண்டு, கையில் வழிபடுபொருள்களும் அத் தெய்வத்தின் வடிவமும் ஏந்திக் கவித்தலை மலைக்கோட்டையிலிருந்து புறம்போந்து கீழ் இறங்கி அங்கே குழூஉகொண்டிருந்த கொடும்பகைவர் கூட்டத்தூடே அஞ்சாது வழிநடந்து சென்று, அச் சிறிய குன்றின்மேல் அவ் வழிபாட்டினைச் செய்துமுடித்து, மீண்டுஞ் செவ்வனே கவித்தலை மலைக் கோட்டையினுட் போய்ச்சேர்ந்தான். அங்ஙனந் தெய்வ வணக்கத்தின் பொருட்டு அவன் வருதலையும் போதலையுங் கண்டு, அக் காலவர்கள் அவனுக்கு ஏதுந் தீதுசெய்திலர். பாருங்கள்! தெய்வ வழிபாட்டில் உறைத்துத் தன்னுயிரையும் ஒரு பொருட்டாய் எண்ணாத அவ் வுரோமனைக் கண்டு, அத் தீயவர்களும் அடங்கி, அவனுக்கு ஏதுமே ஊறுசெய்திலரென்றால், தெய்வத்தின் அருளொளியிலேயே முழுதுந் தோய்ந்துநின்ற நினைவுடையார்க்கு எவராலும்

எதனாலும் எத்தகைய இடரும் நேராதென்பதனை நாம் விண்டுசொல்லுதலும் வேண்டுமோ!

இனிக், கவித்தலை மலைக்கோட்டையி னுள்ளிருந்து பசித்து வருந்தும் உரோமர்கள் எவ்வாறாயினர்கள்? அவர்கட்குக் கோட்டையின் வெளியேயிருந்து எவ்வாறுதவி வந்தது? என்பனவுங் கூறுவாம். அவ் வுரோம் நகரிற் பேராண்மையிற் சிறந்த 'காமிலியன்' என்பான் ஒருவன் இருந்தனன். அவன் அத் தலைநகரைச்சூழ இருந்த பட்டினங்களில், உரோமர்க்குப் பகைவராயிருந்தார் அனைவரையும் வென்று அடக்கினவன் ஆவன். என்றாலுந், தற்பெருமையுஞ் செருக்கும் அவன்பால் மிக்கிருந்தமையால், அவனையெல்லாரும் வெறுத்து, அவன்மேல் இல்லாத குற்றஞ் சுமத்தி, அவன்பா லிருந்த பெருந்தொகைப் பொருளையெல்லாம் பிடுங்கப் பார்த்தனர். அதனால் அவன், அயலிலுள்ள 'ஆரதியம்' என்னும் ஊரிற் போய்க் குடியேறி வாழ்ந்து வந்தனன்.

ஈதிங்ஙனமிருக்கக், காலவர் தலைவனான பிரானது படையிற்பாதி மேற்சொன்ன ஆரதிய ஊரைத் தாக்க வருஞ்செய்தி அதன்கண் உள்ளார்க்கு எட்டியது. அது கேட்ட காமிலியன் உடனே அவ்வூர்த் துரைத்தனத்தாரிடஞ்சென்று, தான் அவ் வூரைக் காப்பதற்கு முன்னிற்பதை அறிவிக்க, அவர்களும் அதற்கு மகிழ்வுடன் இசைந்து, அவ் வூர்ப்படையை அவன்பால் ஒப்புவிக்க, அவனும் படைக்கலம் பிடிக்கத்தக்க பொருநரையெல்லாம் ஒருமிக்கத் திரட்டிக் கொண்டுபோய், எதிரேறி வந்த காலவர் படையை நள்ளிரவிற் றாக்கி அதனைச் சின்ன பின்னமாகச் சிதற அடித்துச் சவட்டித், தனதூரைக் காத்தான். இவன் செய்த பேராண்மைச்செயல், சிதைவுண்டு சிதறிய உரோமர்

களின் செவிக்கு எட்ட அவர்கள் அதனல் மனக் கிளர்ச்சி மிகப்பெற்றுத், தமக்குக் காமிலியன் படைத் தலைவனுக நிற்க ஒருப்பட்டால், தாம் கவித்தலை மலைக் கோட்டையில் உள்ள தம்மவர்க்கு உதவிசெய்து, திரும்பவும் உரோம் நகரின் பெரும்புகழை மீட்டு நிலைபெறுத்துதல் கூடுமெனை நினைந்து, காமிலியனுக்குத் தம்முடைய கருத்தையும் வேண்டுகோளேயுந் தெரிவித்துத் தூதுவிடுத்தனர். காமிலியன் வணங்காமுடியனும் இறுமாப்புடையனுமாதலால், தான் தனது நகரினின்றுந் துரத்தப்பட்டவனுதலால், உரோம் அரசியற் றலைவரின் உடன்பாடுங் கட்டளேயும் இன்றித் தான் அவர்க்குத் தலைவனுய் நின்று படைநடாத்துதல் இயலாதெனை மறுமொழி போக்கினுன். உரோம் அரசியற் றலைவர்களோ இப்போது கவித்தலை மலைக் கோட்டையினுள் அடைபட்டிருக்கின்றனர். அவர்கட்கு வெளியேயுள்ள உரோமர்கள் செய்திவிடுத்து அவர்களேத் தமது கருத்துக்கு ஒருப்படுவிக்குமாறு யாஙனனம்? கொடிய காலவர்களோ அக் கோட்டையைச் சூழப் படைவீடு கொண்டிருக்கின்றனர்! என் செய்வ மதனறு எல்லாரும் பெரிது தியங்கினர்.

இந் நிலையிற் 'கோமினியன்' என்னும் ஓர் இளைஞன் தம்மவர்க்காகக் கவித்தலை மலைக்கோட்டையி னுள்ளார்பாற் றாது செல்லுதலை மேற்கொண்டான். தான் தைபர்யாற்றின் பாலத்தைக் கடந்துசெல்லக் கூடாவாறு காலவரின் காவலாள் அதனைக் காத்துநின்றுல், தான் ஆழம்மிகுந்து அகன்ற அவ் வியாற்றை நீந்திசசெல்ல வேண்டுமேயென எண்ணி, ஒரு குடியானவனுக்குரிய உடைஉடுத்துத் தான் நீரில் அமிழ்நதிவிடாமல் மிதத்தற்கு உதவியாகப் பெரிய பெரிய நெட்டித்துண்டுகளை அவ்வுடையின்கீழ் இணைத்துக் கொண்டு, நாள் முழுதுங் கால்நடையாகவே நடந்து, இராப்

பொழுதில் அவ் வியாற்றின் அருகுற்றான். தான் முன் எண்ணியவாறே காலவரின் காவலாள் அதன் பாலத்தைக் காத்துநிற்றல் கண்டு அதனை விலகிப் போய்த், தனதுடம் பின் மேற்புறத்தில் நெட்டியொடு பிணைத்த துணியைச் சுற்றிக் கட்டிக்கொண்டு அவ்வியாற்றில் இறங்கி நீந்தியபடி யாய்க் கவித்தலை மலையடிவாரத்தண்டை சேர்ந்து கரை யேறினான். அவ் வடிவாரத்தில் விளக்குவெளிச்சங் காணப் பட்ட இடங்களையும், மக்கள் பேசும் ஒலிகேட்கும் இடங் களையும் விழிப்பாக விட்டகன்று, பகைவர் இல்லாத இட மாகத் தோன்றிய அம் மலையின் செங்குத்தான ஒரு பக்கத்தைத் தெரிந்தடைந்தான். அப் பக்கம் மிகவுஞ் செங்குத்தாய் இருந்தமையால் அதனூடு எவருமே ஏறி அம் மலைமேற் செல்லல் முடியாதென்று கருதிக் காலவர் படைஞர் எவரும் அங்கே காவலாக வைக்கப்படவில்லை. மெய்யாகவே அச் செங்குத்தான பக்கம் மேலேற விரும்பு வார் எவர்க்கும் பேரச்சத்தை விளைப்பதொன்றாகவே தோன்றியது. ஆனால், தன்னுயிரையும் ஒரு துரும்பாய் எண்ணித், தான் முடிக்கக் கருதிய அருவினையிலேயே கண்ணூங் கருத்தும் உடைய அவ் வாண்மகனுக்கோ அஃ தொரு தடையாய்க் காணப்படவில்லை. அவன் இருள் சூழ்ந்த அவ் விரவில் அம் மலைப்பக்கத்திற் படர்ந்திருந்த படர்கொடிகளின் தண்டுகளையுஞ் சிறு தூறுகளின் வேர் களையுங் கைகளாற் பற்றிக்கொண்டும், பைம்புற்பொழி களின் அடியிற் காலடிகளை உதைந்துகொண்டுந் தொற்றித் தொற்றி இவர்ந்து, அம் மலையுச்சியிற்போய் அக் கோட்டைக் கொத்தளத்தின்மேல் நின்றான். நின்றவனைப் பகைவனென்றோ நண்பனென்றோ அறியாமையால், அங் கிருந்த காவலாளர் விரைந்துபோந்து அவனைச் சூழ்ந்து கொண்டனர். அங்ஙனஞ் சூழ்ந்தார்க்கு அவன் தன்

பெயரை யெடுத்துச்சொல்லி இலத்தீன் மொழியிற் பேசவே, ஆறுதிங்களாகத் தம்மவரின் ஒரு புதிய முகத்தை யுங் காணப்பெறுமற் பட்டினியும் பசியுமாய் அதனுட் கிடந்து மாழ்கிய உரோமர்கள் அவன் முகத்தைக் கண்டும் அவன் தமது தாய்மொழியிற் பேசிய சொற்களைக் கேட்டும் போனவுயிர் மீண்டவர்களாய் அளவிலாக் களிப்பெய்தினர். அங்குள்ளே உறங்கிக்கொண்டிருந்த அரசியற் றலைவர்களுங் கடிதில் எழுப்பப்பட்டு அவன்பால் வந்து குழுமினர். ஆரதியத்தைக் காலவர் வந்து தாக்கினமையுங், காமிலியன் உடனே தம்மூரவரைப் படை திரட்டிக்கொண்டு சென்று அவரை யெதிர் தாக்கி மாய்த்தமையும், இப்போது அரசியற் றலைவர்கள் ஒருங்கிசைந்து அக் காமிலியனைப் படைத்தலை வனுக ஏற்படுத்திக் கட்டளை தந்தாற் சிதர்ந்து போன உரோமர்கள் அத்தனை பேரும் அவன்கீழ் ஒருங்குதிரண்டு வந்து பகைவரையழித்துக் கவித்தலை மலைக்கோட்டையை மீட்க முனைந்து நிற்றலையும் அவன் சுருக்கமாகவும் அழுத்த மாகவும் அவர்கட்கு எடுத்துரைத்தான். உடனே அவ் வரசியற்றலைவர் அனைவரும் மறுமாற்றம் இன்றி ஒத்து ஒரு முகமாய்க் "காமிலியனையே நம்மவர் எல்லார்க்கும் ஒப்புயர் வில்லாப் படைத் தலைவனுகத் தந்தோம்" என்று உறுதி மொழி பகர்ந்தனர். அம் மகிழ்வான செய்தியைப் பெற்றுக் கொண்ட கோமினியன் சிறிதுந் தாழாது அவ்விரவே அம் மலையைவிட்டுப் பெரியதோர் இடர்ப்பாட்டுடன் கீழிறங்கித், தம்மவர்பாற் சென்று அதனை எல்லார்க்கும் பெருங் கிளர்ச்சி யுண்டாகத் தெரிவித்தனன்.

மறுநாட் காலையில், அம் மலையைச் சூழ்ந்திருந்த காலவர்கள் முன்நாள் இரவு செங்குத்தாய் நின்ற அதன் பக்கத்தில் எவரோ ஏறிச் சென்ற அடையாளங்களைக் கண் டார்கள். ஏனென்றால், அங்கங்கே அப் பக்கத்தில் வளர்ந்

திருந்த சிறு தூறுகளும் படர்கொடிகளும் அலைக்கப்பட்டு இடையிடையே முறிந்து காணப்பட்டன; கற்பாறைகளிற் பிடித்திருந்த பாசிகள் கைகால் உரைசித் தேய்வுண்டிருந் தன; புதிய உருண்டைக் கற்களும் மண்ணும் மேலிருந்து கீழ் உதிர்ந்து சிதறிக் கிடந்தன. இவ்வடையாளங்களைக் கண்டதுங் காலவர்கட்குச் சினம் மூண்டது. நகர வாழ்க்கையிலிருந்து மென்மையாய் வளர்ந்த ஓர் உரோமன் இருள்செறிந்த அவ்விரவிற் செங்குத்தான அம் மலைப் பக்கத்தே ஏறிச் சென்றனனென்றால், பனிக்கட்டி நிறைந்த மலைக்குவடுகளிலும் இருண்டு ஆழ்ந்த மலைப் பிளவுகளிலும் ஆலங்கட்டிகள் குவிந்த ஆலூப்பு மலைகளிலும் வாழ்க்கை செலுத்தி முரடராய் வளர்ந்த காலவர்கள் அம் மலைமேல் ஏறுதற்குப் பின்வாங்கலாமோவெனப் பிரான் தலைவன் எண்ணினன். பிறகு, தம் மலைவாணரில் மிகவுந் திண்ணியரா யுள்ளாரைத் தெரிந்தெடுத்து, நள்ளிராப் பொழுதிற் சிறிதும் அரவம் இன்றி அவர்கள் ஒருவர்பின் னொருவராய் அம் மலைமீதேறி, உரோமரைத் திடுமெனத் தாக்கி, அவர் கட்கு 'வை' யென்னும் ஊரிலிருந்து உதவிப்படை வரும் முன் அவர்கள் அனைவரையும் வெட்டிக் குவித்து வெற்றி கொள்கவென அவன் அவரை ஏவினன்.

அவன் ஏவியபடியே திண்ணிய காலவர்கள் ஒரு சிறிதும் ஓசையுண்டாகாமல் ஏறியதனால், அக் கோட்டை யிற் காவலாய் நின்ற நாய்களும் அவரது வருகையினை அறிந்தில. மதின்மேற் காவலாய் நின்ற படைஞனே பசிக் களைப்பில் உண்டான கடுந் தூக்கத்திற் றன்னை மறந்து கிடந்தான். என்றாலுங், "கடவுளை நம்பினோர் கைவிடப் பட்டார்" என்னும் மூதறிஞர் உரைப்படி, கோட்டையின் உள்ளிருந்த உரோமர்க்கு அங்கிருந்த சிவனையம்மை கோயிலிலிருந்து ஒரு முன்னறிவிப்பு எழுந்தது. அவ்வம்

மைக்கு நேர்ந்துகொண்டு அக் கோயிலில் விட்டுவைத்திருந்த தாராப்பறவைகள் எங்ஙனமோ அவ் வேற்றுட்களின் வருகையை யறிந்து தம் இறக்கைகளை அடித்துக் கொண்டு கத்திக் கெக்கெலிசெய்து பேரொலியை உண்டாக்கின. தாம் கடும்பசியால் வாடிவதங்குங் காலத்தும் உரோமர்கள் அப் பறவைகள் அம்மைக்காக விடப்பட்டனவென்று அன்புடன் கருதி அவற்றைத் தம் உணவுக்காகக் கொல்லாது விட்டுவைத்தமையாலன்றோ அவர்கள் இப்போது அப் பறவையினங்களாற் காக்கப்படுவாராயினர்? அவை செய்த பேரிரைச்சலைக் கேட்டு அங்கே உறங்கிக் கிடந்த உரோமர்கள் உடனே விழித்துக்கொண்டனர். விழித்துக் கொண்டவர்களில் ‘மானிலியன்’ என்பவனே உற்ற நேரத்தில் முதன்முதல் விரைந்து போந்து, அக் கோட்டையின் புறமதிலில் அப்போதுதான் ஏறிவந்து கால் வைத்த காலவர்களைத் தாக்கினான் அவன். முன்னதாக வந்து நின்ற காலவன் ஒருவன் வெட்டுதற்குத் தனது முழுப் படையை ஓங்கிய காலையில், அம் மானிலியன் தன் கை வாளால் அவனது கையைத் துணித்துப், பின்னர் அவனையும் அச் செங்குத்தான மலைப்பக்கமாய்க் கீழே தள்ளிவிட்டான். வீழ்ந்தவன் பின்னே ஏறிவருங் காலவனையும் அங்ஙனமே தொலைத்தற்கு முனைந்து மானிலியன் அம் மதின் மேற் றனிநின்றான். இதற்குள்ளாகக் கோட்டையி னுள்ளிருந்த படைஞர்கள் அத்தனைபேருங் காலவரை எதிர் தாக்குதற்கு மதிலண்டை வந்துசேர்ந்தார்கள். ஏறிவந்த காலவரெல்லாரும் உடனே கீழ்வீழ்த்தப்பட்டனர். மதின் மேல் தன் காவலிற் கருத்தின்றி உறங்கிய படைஞனையும் உரோமர்கள் உருட்டிக் கீழே தள்ளிவிட்டனர். தனிநின்று காலவரை மதின்மேல் எதிர்த்துத் தொலைத்த மானிலியன் பாற் படைஞரெல்லாரும் நன்றி மிக்கவராய்த் தாம் மிகுத்து

வைத்திருந்த அரிய சிறிது உணவினையும் பருகுநீரினையுங் கொணர்ந்து தந்தனர்.

இந்நேரத்திற் கவித்தலை மலைக்கோட்டையிலுள்ளார் நிலை கவலைக்கு இடமாகவேயிருந்தது. கீழூர்களிலிருக்குந் தம்மவர்பாலிருந்து தூதுவந்த கோமினியன் இருண்ட அவ் விரவிற் பகைவர்களுக்குத் தப்பித் திரும்பிச் செவ்வனே அவர்களிடம் போய்ச் சேர்ந்திருக்கக் கூடுமாவென்று அவரெல்லாரும் ஐயுற்றுக் கலங்கினர். அவன் அச் செங் குத்தான பக்கத்தே ஏறி மேல்வந்த அடையாளத்தைக் கண்டன்றோ காலவரும் அவ் வழியே யேறித் தம்மைத் தாக்க வந்தனரென்று உரோமர்கள் நினைத்தனர்; அதனால் அவன் அவர்களாற் பிடிபட்டிருப்ப னெனவே அவர்கள் கருதலாயினர். இங்ஙனம் எல்லாருங் கலங்கிக்கொண் டிருக்கையில் அவர்களுள் ஒருவற்கு ஒரு கனவுதோன் றிற்று. அம் மலைத் தலைக்கோயிலில் உள்ள சிவத்தர் என் னுங் கடவுளின் திருவுருவம் அவன் முன்னே தோன்றியது. தோன்றிய அஃது அவனை நோக்கி, "நீங்கள் எல்லீர்க்கும் உணவாக மிச்சமிருக்குங் கோதுமைமா அவ்வளவும் எடுத்து அப்பமாகச் சுட்டுக், கீழே சூழ்ந்து கொண்டிருக் கும் நுங்கள் பகைவர்களின் நடுவே அவ் வப்பங்கள் எல்லா வற்றையும் எறிந்துவிடுங்கள்!" என்று கட்டளையிட்டு மறைந்து போயது. சிறிதிருக்கும் உணவையும் இங்ஙனம் எறிந்துவிடின் எவ்வாறு உயிர்பிழைப்பதெனா அங்கிருந்த உரோமர் அனைவரும் எண்ணினரேனும், அச் சிவத்தப் பெருமான் இட்டகட்டளையை மீற எவரும் உள்ளந்துணிந் திலர். உயிர் ஒழிந்தாலும் இறைவன் கற்பித்தபடி செய் வதே தக்கதெனா அவரெல்லாரும் ஒருங்கியைந்து, தம்மிடம் மிச்சமாயிருந்த மாவையெல்லாம் எடுத்துப் பிசைந்து அப்பமாகச் சுட்டுச், சுட்ட அப்பங்களையெல்லாங் கீழுள்ள

பகைவராது குழுவில் வீசினர். மேலிருந்து கீழ்விழுந்த அவ் வப்பங்களைப், பசியால் வாடிவதங்கித் தத்தளிக்கும் அக் காலவர்கள் விரைந்தெடுத்து உண்டு பசி தீர்ந்ததுந், தமது பசி வருத்தங் கண்டு இரங்கிப் பகைமை பாராது உணவு தந்த அவ் வுரோமர்கள்பால் நன்றியும் அன்பும் இயற்கையாகவே தம்முள்ளத்தே கொள்ளப் பெற்றனர். அதுவேயுமன்றி, அக் காலவர் தலைவனை பிரானுந் தம்மவர் அத்தனை பேர்க்கும் அத்தனை மிகுதியான உணவு தந்த உரோமர்கள் இன்னும் எவ்வளவு மிகுதியான உணவுப் பண்டங்கள் வைத்திருக்கவேண்டும்! அவ்வளவு மிகுந்த உணவு வைத்துக்கொண்டு மலைமேற் கோட்டையில் வலியராயிருக்கும் அவர்களைக் கீழே உணவின்றிப் பசித்து வருந்துந் தம்மவர் தொடர்பாக முற்றுகை செய்திருத்தல் பயன்றராதெனை எண்ணினன். எண்ணி அவர்களுடன் ஒத்துப் போகுங் கருத்துடையனாய், அவர்களின் தலைவர்பால் ஒரு தூதுவனை விடுத்தான். அதற்கிசைந்து அவர்கள் சொல் விடுப்பவே, பிரான் அம் மலைமேற் போந்து அத் தலைவரில் ஒருவருடன் அமைதிபேசி, அவர்கள் தனக்கு முந்நூற்று முப்பத்துமூன்று வீசை யெடையுள்ள பொன்னை நிறுத்துத் தந்தால் தான் தம்மவருடன் உரோமருடைய நகரத்தையும் நாட்டையும் விட்டுப் போய்விடுவதாக உறுதிமொழி புகன்றான். அதற்கு அவ் வுரோம் தலைவர் இணங்கவே, காலவர் தம்மிடமிருந்த வீசைக் குண்டுகளைக் கொண்டுவந்தனர். உரோமர்கள் தம்மவர்பாலிருந்து திரட்டிக்கொணர்ந்து தொகுத்த பொற்பணிகள், காலவர் கொணர்ந்த எடையினும் மிகுதியாக இருந்தன. அப் பொற்குவியலைக் கண்ட பிரான் அவ்வளவையுந் தான் கவர்ந்துகொள்ள அவாக் கொண்டு, தூக்குத் தட்டில் எடைகுண்டொடுகூட நிறை மிகுந்த தனது கொடுவாளையும் இட்டான். அதுகண்ட

உரோமர்கள் கேட்ட அளவுக்குமேற் பொன்கொடுக்க இசையோமென மறுக்கக் காலவர்களும் உரோமர்களும் பெருஞ் சீற்றத்துடன் வழக்குப் பேசலாயினர்.

இவர்கள் இவ்வாறு வழக்காடிக் கொண்டிருக்கையிற், கீழிருந்த காலவர் குழாத்திலிருந்து ஒருபெருங் கூக்குரல் மேலெழுந்தது. அதனையடுத்துக், காமிலியனைத் தலைவனாய்க் கொண்டு உரோமரது பெரும்படையொன்று மலைமேற்பாட்டையில் ஏறிவந்தது. அதனைக் கண்டதும் அக் கவித்தலை மலைக்கோட்டையி லிருந்த உரோமரனைவரும் பெருங்களிப்பும் பெருங்கிளர்ச்சியும் உடையராகி, அங்கே தாங்கொணர்ந்து குவித்த பொற்றிரளையெல்லாம் மீண்டுந் தமது களஞ்சியத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும்படி தம்மவர்க்குப் பணித்தனர். அவர்களின் தலைவரும் பிரானை நோக்கி, "உரோமர்கள் தமது நாட்டை இரும்பினாற் காப்பவரேயல்லாற் பொன்னினாற் காப்பவரல்லர்" என்று ஆண்மையுடன் கூறினர். அதுகேட்ட பிரான், "செய்து கொண்ட உடன்படிக்கையில் வழுவிக், கொடுக்க இசைந்த பொன்னைக் கொடாது மறுத்தல் நம்பிக்கைக்கு மாறு அன்றோ?" என வினவினான். உரோமரைப் படை திரட்டி வந்த காமிலியன், யான் இல்லாத வேளையிற் செய்த உடன்படிக்கை செல்லாது; எவரும் அது செய்தற்குரியரல்லர்." என வற்புறுத்திக் கூவினான். அதனாற், காலவர்க்கும் உரோமர்க்கும் போர் மூண்டது. உரோமரது படைஞர் நாற்பதினாயிரம்பேர் மேலுக்குமேல் வந்தமையாற், பசியாலும் நோயாலும் மெலிந்த தன் படைஞர் அத்துணைப் பெரிய படையை எதிர்த்தல் இயலாதென்று கண்ட பிரான் தன் காலவர் கூட்டத்தை யழைத்துக்கொண்டு மறுநாள் விடியற்காலையிலேயே உரோம் நகரைவிட்டுப் பின்னிடைந்து ஆனாற், காமிலியன் அவனையும் அவன் படை

ஞரையும் விடாது பின்றொடர்ந்து தாக்கி, உரோமிலிருந்து எட்டுக் கல் வரையிற் காலவர்களைக் கொன்று குவித்துப் பெருவென்றி யெய்தினன்.

கொடியரான காலவரது படையெடுப்பினல் ஒளி யிழந்த உரோம் நகரும் நாடும், அப் பேரிருள் ஒழிந்தபின் முன்போற் பேரொளி மிகுந்து துலங்கலாயிற்று. அப் பேரிடுக்கண் நேர்ந்த காலத்திற் செயற்கருஞ் செயல் செய்த அலுவினியன், பேவியன்றூர்சன், கோமினியன், மானிலி யன், காமிலியன் என்னும் அருந்திறலாளர்க் கெல்லாம் உரோமர்கள் பெருஞ்சிறப்புகள் செய்து அவர்களைப் பெரிது கொண்டாடினர் என்பது.

---

## உ௨. ஆயிரத்துத்தொளாயிர ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவர் காலத்திருந்த மேல்நாட்டாசிரியர் செனீகரின் அறிவுமொழிகள்

பலகாலுங் காற்றினல் அலைக்கப்படாத எத்தகைய மரமும் வலுவாய் உறுதியாய் நிலைப்பதில்லை; ஆனல், அடுத் தடுத்துக் காற்றினல் அசைக்கப்படும் மரமோ உரம் ஏறப் பெற்று நிலத்திலே அழுத்தமாக வேர் ஊன்றுகின்றது. நாற்புறமும் அடைப்பாக உள்ள பள்ளத்தாக்குகளில் வளரும் மரங்கள் எளிதிலே முறிந்துவிடும் இயல்பின. ஆகவே, அச்சத்துக்கு ஏதுவான நிகழ்ச்சிகளின் நடுவே உயிர்வாழப் பெறுவதே நல்லோன் ஒருவனுக்கு நன்மையை அளிக்கின்றது; ஏனென்றால், அவற்றின் நடுவிருந்து பழகப் பழக அவன் அஞ்சாநெஞ்சினன் ஆகின்றான். மேலும், எந்தத் துன்பத்தையுந் துன்பமாகக் கருதாமையிலிருந்து, எத்தகைய இடர்வரினும் அதனைப் பொறுக்கவுங் கற்றுக் கொள்கின்றான்.

இறப்பில்லாக் கடவுள் நமதுள்ளத்தைத் தாற்றுக்கோல் இட்டு எழுப்புவது போல் வருவிக்கும் இடர்களைக் கண்டு வெருக் கொளாதேயுங்கள்! ஏனென்றால், தீதுவருங் காலத்திலே தான் ஒருவனது உள்ளத்தின் நன்மை புலனாகின்றது.

நிறைந்த ஐம்பொறி யின்பத்திற் சிக்கி அறிவுமயங்கி யிருப்பவர்களை நல்வினையற்றவர்க ளென்றே சொல்லல் வேண்டும்; ஏனெனில், அவர்கள் அவ் வின்ப வயப்பட்டு அறிவின் சுறுசுறுப் பிழந்து அதன்கண் ஆழ்ந்து விடுகின்றனரல்லரோ? அத் தன்மையினார்க்கு ஏதேனும் இடர்வரின் அவர் அதனைத் தாங்கார். மெல்லிய கழுத்துடையது நுகத் தடியைத் தாங்குமோ?

கடவுள் தாம் அன்பு பாராட்டும் அடியார்களைப் பல்வகை அல்லல்களிற் படுப்பிக்குமாற்றால், அவர்களைப் பழக்கி உரமேற்றி உறுதிப் படுத்துகின்றார்.

**மறைத்திரு. மறைமலையடிகளார்**

எழுதிய

**சிறுவர்க்கான செந்தமிழ்**

**முற்றும்.**

## மறைமலையடிகளாரின்

# தனிச் செந்தமிழ் நூல்கள்

| | ரூ. | காசு |
|---|---|---|
| சாகுந்தல நாடகம் | | |
| விளக்க உரைக் குறிப்புக்களுடன் | | 25 |
| கலிக்காக்கட்டு | | 25 |
| சாகுந்தல நாடக ஆராய்ச்சி | | 50 |
| இளைஞர்க்கான இன்றமிழ் | | 50 |
| கலிக்காக்கட்டு | | 25 |
| மரணத்தின்பின் மனிதர் நிலை | | 25 |
| தமிழர் மதம் | 5 | 00 |
| திருவொற்றிமுருகர் மும்மணிக்கோவையுரை | 5 | 00 |
| சிந்தனைக் கட்டுரைகள் | 2 | 00 |
| முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் | 2 | 50 |
| சைவசித்தாந்த ஞானபோதம் | 4 | 00 |
| குமுதவல்லி நாகநாட்டரசி | 4 | 00 |
| தொலைவிலுணர்தல் | 4 | 00 |
| சோமசுந்தரக் காஞ்சியாக்கம் | 1 | 50 |
| பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| கலிக்காக்கட்டு | 2 | 75 |
| கோகிலாம்பாள் கடிதங்கள் ,, | 6 | 00 |
| சிறுவர்க்கான செந்தமிழ் | 2 | 25 |
| கலிக்காக்கட்டு | 3 | 00 |
| முற்காலபிற்காலத் தமிழ்ப் புலவோர் | 2 | 25 |
| சோமசுந்தர நாயகர் வரலாறு | 1 | 50 |
| வேளாளர் நாகரிகம் | 2 | 00 |

கழக வெளியீடு : ௮௯௯

# வேளாளர் நாகரிகம்

பல்லாவரம்
பொதுநிலைக் கழக ஆசிரியர்
மறைத்திரு. சுவாமி வேதாசலம்
என்னும்
**மறைமலையடிகள்**
இயற்றியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: (Author) 1923.
Reprints: 1927; (Kazhagam) July, 1957.

# VELALAR NAGARIGAM



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras 1. C. 1100.

# பதிப்புரை

வேளாளர் நாகரிகம் என்பது பண்டைத் தமிழ்நாட்டுச் சிறந்த பண்பாகும். இப் பண்பு ஏறத்தாழ வரலாற்றுக் காலங்களுக்கு மிகமிக முந்திய காலந்தொட்டு வளர்ந்து வந்த சிறந்த தனித்தமிழ்ப் பண்பாகும். வேளாண்மைக் குரியார் வேளாளராவர். இவர்களுடைய சிறப்பு ஐயாயிரத் தைந்நூறு ஆண்டுகளுக்குமுன் தோன்றிய ஒல்காப்பெரும் புகழ்த் தொல்காப்பியத்தின்கண் கிளந்தெடுத்து ஓதப் பட்டுள்ளது. வேளாண்மை பிறர் நலத்துக்குப் பெருந் துணைபுரியும் பெருந்தகைமை. வேள்—சிறந்த விருப்பம். ஆண்மை—நிறைவேறத் துணைபுரிதல். தொல்காப்பியத் திற்குப் பின்னுள்ள சிறந்த தமிழ்நூல்கள் அனைத்தும் அங்ஙனமே ஓதுகின்றன.

வேளாளர்கள் தொன்றுதொட்டே தாழ்வில் உழைப் பினராய், நுண் உணர்வினராய், அறவோராய், ஈவு இரக்கத் திறவோராய், 'காடுகெடுத்து நாடாக்கிக் குளந்தொட்டு வளம்படுத்து' வாழ்வுமிகு செல்வராய் நாடு நகர் அமைத்துக் கடவுள்வழிபாட்டுக்கு அந்தணரையும், காவற்கு வேந்த ரையும், கொண்டுவிற்பதற்கு வணிகரையும் தம்மின் நின்றே பிரித்தெடுத்தமைத்துள்ளனர். தங்கள் தொழிற்கு உதவியாக ஏனைக் குடிமக்களையும் தொழில் பற்றிப் பதி னெண் வகையினராகப் பாகுபடுத்தி அவர்தம் வாழ்க் கைக்கு வேண்டும் துணைகளை உற்றுழி உதவிப் போற்றி வந்தனர்.

வேட்டையாடும் வேடரையும், ஆடுமாடு மேய்க்கும் இடையரையும் போன்று நிலையிலா வாழ்க்கை வாழ்ந்துவந்த ஆரியமக்களை ஈவிரக்கங்களால் காப்பாற்றி முதற்கண் நிலை பெறப் பேணினவர் வேளாளரே யாவர். அவர்கள் செய்து வந்த கொலைபுலை வேள்விகளை அருவருத்துக் கொலை புலை யில்லாத தங்கள் இரக்க மனப்பான்மையால் அவர்களும் நல்வழிப்படுதற் பொருட்டு அவர்கள் மொழியில் உயர்ந்த பல நூற்களை ஆக்கிக் கொடுத்தோரும் வேளாளரே யாவர்.

## வேளாளர் நாகரிகம்

இவ்வுண்மைகள் அனைத்தும் தெள்ளத் தெளியப் புலனாகும்படி மறைத்திரு மறைமலையடிகளார் 'வேளாளர் நாகரிகம்' எனப் பெயரிய சிறந்த இந்நூலை உண்மை கண்டுணர்ந்து ஒழுகும்படி யாத்து வெளிப்படுத்தி யுள்ளார்கள். இந் நூலின்கண் பல வேறு சிறந்த தலைப்புக்கள் அமைத்துள்ளார்கள். இந்நூல், பழந் தமிழர் பண்பாடுகளும், அவர்கள் உலக நாகரிக வளர்ச்சிக்கு எத்துணை அடிப்படை யுதவியாளராக இருந்தனர்களென்பதும், வந்தேறுங்குடிகளாகிய ஆரியர்க்கு எவ்வெவ் வகையிலெல்லாம் உதவிபுரிந்து அவர்களை உயர்த்தினர்கள் என்பதும், சிறந்த முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் ஒருவனையே வழிபட்டு வந்துள்ளார் என்பதும், தொழில்பற்றி யன்றிப் பிறப்புப்பற்றிச் சாதி வேறுபாடுகள் கொண்டிலர் என்பதும், ஐவகை வேள்விகளை ஆற்றிய அந்தணர் என்பதும் பிறவும் வலிய சான்றுகளுடன் நிலைநாட்டியமைமை நுவல்கின்றது. அதனால், இந்நூல் தொன்மைத் தமிழர் நாகரிகம், தமிழ் நாட்டுவளம், தமிழ்நூற் சிறப்பு, தமிழ்நூற்களின் ஆராய்ச்சி, காலவரையறை, ஆரியர் வருகை, அவர்கள் நிலைமை, அவர்களுக்குத் தமிழ் நன்மக்கள் ஆற்றிய கைம்மாறுகருதா உதவி, உலகமுற்றுக்கும் உதவிய ஒப்பில்லாப் பல்வகை உதவிகள் எல்லாவற்றையும் செவ்வனே விளக்கித் திகழும் ஒரு சிறந்த வரலாற்றுநூல் ஆகும். இதனைக் கற்று உண்மைவழியொழுகி இன்புறுதல் சிறப்பாகும்.

அடிகளார் இதற்கு முன் இந்நூலை இரண்டு பதிப்பு வெளியிட்டுள்ளார்கள் அவர்கள் எழுதிவைத்துள்ள ௧௯௫௦ செப்டெம்பர் ௩-ஆம் நாள் விருப்ப ஆவணத்தின்படி வாரமுறையில் பல நூல்கள் நம் கழகவழியாக வெளிவந்துள்ளன. அவைகளைத் தொடர்ந்து இந்நூல் மூன்றும் பதிப்பாக வெளிவருகின்றது. இன்னும் பல நூல் தொடர்ந்து வெளிவரும். இதனை வாங்கிப் போற்றுமாறு விழைகின்றனம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

## முதற்பதிப்பு முகவுரை

கி. பி. ௧௯௨௧-ஆம் ஆண்டு மார்கழித் திங்களில் யாம் யாழ்ப்பாணத்தில் உள்ள அன்பர்களால் அழைக்கப் பட்டு, அங்கே விரிவுரை நிகழ்த்தச் சென்று, யாழ்ப்பாண நகரத்தும் அதனையடுத்துள்ள பல ஊர்களிலுஞ் சைவசித் தாந்தப் பொருள்களையுந், தமிழ்ச் சிறப்புகளையுந் எடுத்துப் பல விரிவுரைகள் நிகழ்த்தினேம். அவ்விரிவுரைகளை யெல் லாம் பெருந்திரளான அன்பர்கள் ஆங்காங்கு வந்துகேட்டு இன்புற்றனர். கடைமுறையாக யாம் யாழ்ப்பாணத்தை விட்டுப் புறப்படுதற்குச் சில நாட்களின்முன், அஃதாவது கி. பி. ௧௯௨௨-ஆம் ஆண்டு தைத்திங்கள் முதல்நாள் அன்று யாழ்ப்பாண நகரமண்டபத்தில் மாலை ௬-மணிக்குத் துவங்கித் 'தமிழர்நாகரிகம்' என்னும் பொருளை விரித்துப் பேசினேம். தமிழர்நாகரிகத்தின் வரலாறுகளை அவ்விரி வுரை புதுமுறை ஆராய்ச்சியால் நன்கெடுத்து விளக்கின மையால், அவற்றை ஆண்டுக் குழுமியிருந்து கேட்ட அறி வுடை அவையத்தார் எல்லாரும் அவ் விரிவுரையை மிக வியந்து பாராட்டினர். அவ் விரிவுரையின் அருமை இலங் கையிலும், யாழ்ப்பாணத்து நன்மக்கள் மிகுதியாய்ச் சென்று குடியேறி வாழும் மலாய்நாடுகளிலும் விரைந்து பரவலாயிற்று. யாழ்ப்பாணம், கந்தரோடையிலிருந்து சென்று மலாய்நாட்டில் இரெங்கான் என்னும் ஊரிற் புகைவண்டிநிலை உதவித் தலைவராய் (Assistant station master) அலுவலில் அமர்ந்திருந்த திருவாளர் ந. சி. கந்தையா அவர்கள் சைவசித்தாந்த உண்மைகளையுந் தமி ழின் அரும்பெருஞ் சிறப்புக்களையும் நாடெங்கும் பரவச் செய்வதில் நிரம்பக் கருத்தூன்றினவர்களாதலின் 'தமிழர் நாகரிகம்' என்னும் அவ் விரிவுரையை ஒரு நூலாக அச்

சிட்டு வெளியிடும்படி எம்மைக் கேட்டுக் கொண்டதோடு, செகமத் என்னும் ஊரில் அரசினர் மருத்துவ விடுதியில் (Government hospital) அலுவல் பார்க்குந் திருவாளர் குமாரசாமி அவர்களை ஊக்கி, அவர்களும் அவர்களின் நண்பர் சிலருமாக ஒருங்குசேர்ந்து அந் நூற் பதிப்புச் செலவுக்கு இருநூறு ரூபா பொருளுதவி செய்யுமாறும் புரிந்திட்டார்கள். தமிழில் இத்தகைய புதுமுறை ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதற்கு உதவி செய்தலினுஞ் சிறந்த அறம் வேறு இல்லை. இவ் வுயர்ந்த அறத்தைச் செய்து வருந் திருக் கந்தையா அவர்கட்கும், அவர்களின் நண்பர் திருக் குமாரசாமி அவர்கட்கும் அவர்களோடு ஒத்து உதவிசெய்த மற்ற நண்பர்கட்கும் யாம் பெரிதும் நன்றி செலுத்துகின்றேம்.

கல்விவளர்ச்சியின் பொருட்டுப் பல நன்முயற்சிகளை யாம் இடைவிடாது செய்துவருதலால், 'தமிழர்நாகரிகம்' என்னும் இதனை எழுதி வெளியிடுதற்கு அமயம் வாயாது ஏறக்குறைய ஒன்றரை ஆண்டுகள் கழிந்தன. பிறகு, நாட்டுக்கோட்டைச் செட்டிமார் முன்னேற்றத்தின் பொருட்டு வெளியிடப்படுந் 'தனவைசிய ஊழியன்' என்னும் இதழில் (கி. பி. ௧௯௨௫-ஆம் ஆண்டு ஆடித்திங்கள் ௧௨-ஆம் நாள்) அதன் தலைவர் வேளாளர் உண்மை வரலாறுகளை அறியாமல் அவரைச் 'சூத்திரர்' என்று இகழ்ந்து, தம் மரபினரில் உள்ள ஆடவர்கட்கு வேளாள மரபினரிலிருந்து பெண்கள் எடுத்து மணஞ்செய்வித்துக் கொள்ளுதலைப் பற்றிப் பேசியவிடத்துத், தாம் வைசிய வகுப்பினராகலான், தம்மவர் தம்மிற் றாழ்ந்த சூத்திர வகுப்பினரான வேளாளரிடமிருந்து பெண்கள் எடுத்து மணஞ் செய்துகொள்ளல் முறையேயாம் என்று எழுதிய கட்டுரை ஒன்றைக் கண்டேம்.

# முதற்பதிப்பு முகவுரை

அப்போது நமக்கு நண்பராயுள்ள சைவவேளாளர் சிலர் வேளாளரின் பண்டை உண்மை வரலாறுகளை ஆராய்ந்து ஒரு கட்டுரை விரைந்தெழுதும்படி எம்மைப் பெரிதுவேண்டினர். பண்டைக்காலந் தொட்டு நம் செந் தமிழ் மக்களில் நாகரிகத்தாற் சிறந்து வாழ்ந்து, தமிழ் மொழியையுஞ் சிவ வழிபாட்டையும் நிலைநிறுத்தி ஆரிய ரையுந் திருத்தி நல்வழிப் படுத்தினோர் வேளாளரே என் பது எமது ஆராய்ச்சியில் நன்கு புலப்பட்டமையால், 'வேளாளர் யாவர்?' என்பதனை விளக்குகையில் 'தமிழ ரது நாகரிகத்'தையும் உடன் விளக்க வேண்டுவது இன்றி யமையாததாய்த் தானே வந்து கூடிற்று. ஆகவே, யாம் முன்னர் எழுதக் குறித்திருந்த 'தமிழர் நாகரிகம்' என்ப தனையும் இதன்கண் விரித்து விளக்க இடம் பெற்றேம். ஆரியர் இவ் விந்திய நாட்டிற் புகும் முன்னரே தமிழர் நாகரிக வாழ்க்கையில் முதிர்ச்சிபெற்று நின்று, பின்னர்த் தம்மொடு வந்து கலந்த அவ் வாரியரைத் திருத்தினமை இதன்கண் நன்கெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. பழந் தமிழ் நூலாராய்ச்சியின்றி, வடநூற் பயிற்சி ஒன்றேயுடை யார் ஆரியரை உயர்த்துத் தமிழரை இழித்துக்கூறுவன வெல்லாம் பொருந்தாமையுந், தமிழரே எவ்வாற்றானும் உயர்ந்தோராதலும் இவைதம்மை ஆராயாதார்க்குப் புதுமை யாய்த் தோன்றினும், யாம் ஆராய்ந்து சான்றுகளோடு உரைப்பனவற்றை நடுநிலை வழாது நின்று காண்பார்க்கு எம் உரையின் மெய்ம்மைதானே விளங்குதல் திண்ணம்.

## இரண்டாம்பதிப்பு முகவுரை

இவ் விரண்டாம் பதிப்பிற் பல புதியகுறிப்புகள் விரித்தெழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. முற்பதிப்பில் இருந்தவைகளிற் சிற்சில திருத்தங்களுஞ் செய்யப்பட்டிருக்கின்றன. இவ் வாற்றால் இந்நூல் முன்னையினும் ஒருபங்கு கூடப்பெருகிவிட்டது.

இனித் தமிழருட் சிறந்த வேளாளர் நாகரிகத்தை விளக்கவே தமிழரது நாகரிகமுந் தானே பெறப்படுமாகலானும், முதற் பதிப்புக்கு வைத்த 'தமிழர் நாகரிகம்' அல்லது 'வேளாளர் யாவர்?' என்னும் இருபெயர்கள் வழங்குதற்கு இடர் பயத்தலானும் இப் பதிப்புக்கு அவ் விரண்டையும் உள்ளடக்கிய 'வேளாளர் நாகரிகம்' என்பதனைப் பெயராக அமைத்தாம்.

பல்லாவரம்,<br>கி. பி. ௧௯௨௭,<br>ஆடிமீ ௫.

மறைமலையடிகள்.

## PREFACE TO THE SECOND EDITION

The first edition of this work was published in November, 1923 and 500 copies of it were sold within four years—a period too short for the sale of a Tamil book of this kind which, in contradistinction to the current fashion for a mixed kind of Tamil prose, is written in a scrupulously pure Tamil style, setting forth at the same time views of a revolutionary character in the sphere of social, religious and historical ideas of the Tamil people. In point of truth the views themselves are neither strange nor revolutionary, being the outcome of a comparative study carefully made of both Tamil and Sanscrit literature. If they appear strange surely they must appear so, to many, it is because their knowledge is partial: and where that knowledge claims to be derived from the literatures of the two languages, it does not go beyond the pale of modern Puranic literature of the two.

No doubt, beneath the legendary accounts of Puranas critics of trenchant intellect—such are rarely to be met with in this country, may detect facts of great value for studying the history of ancient people, but others, who are untrained in the critical and historica methods of looking at things and events, take every bit of them as so many literal truths. People in every country, before they get the benefits of an excellent education, are more credulous than children, since children cannot rest satisfied in a blind belief with respect to a

certain thing or an occurrence, unless they receive satisfying answers to all they want to know about the one or the other. This, the self-interested persons know full well and such of them as are versed in the knowledge of a language know also how to work upon the people's fancy by making that language as a medium for their artifices. This was how the huge body of Puranic literature came to be written first in Sanscrit and then translated into Tamil and other living languages in India. Sanscrit being the dead and not the spoken language understood by people, the authors of the Puranas adopted it as the means best suited to their purpose and said in them all that was to be said in their own interest and to the great disadvantage of the people. And as if to give a finishing and successful stroke to their artifices, not only did they uniformly conceal their human authorship of the Puranas, but they also attributed the composition of which invariably to Divine Beings such as Siva and Narayana. Being Divine utterances their contents were taught to be unquestionable under penalty of hell-fire to unbelievers. Having thus established the unquestionable authority of the Puranas, their authors, selecting for the basis a few cardinal facts, did their work excellently by exaggerating them so much out of all proportion, twisting them so much out of their shape, and combining them so much out of all harmony, that, to the degree they succeeded in the abnormal treatment of the subject, the legends appealed the more strongly to the minds of the credulous and led their belief to take

deep root in them. As a consequence of this artifice people have become slaves to blind faith and ineradicable superstition and they completely distrust that there can be anything as reason to question about their truth or untruth. Nay the very attitude of a person who dares to doubt the legend is repugnant to the people and they are sure to look upon him as their bitterest enemy and heretic. The hold which the Puranas thus have on the mind of the people and the intensity of the prejudice which they foster in their mind against a man who doubts them, one may best learn by noting the strength of the Puranic belief even in those who have imbibed western education.

Under this deplorable condition it is no wonder that Tamil books written on modern critical and historical lines should seem strange and revolutionary to men of such mental calibre. Still the sale of 500 copies within four years betokens a brightening prospect and authors of my type need not despair of a better condition in future. For man cannot always rest in ignorance. He is ever prompted by an innate desire to learn the nature and constitution of things and ascertain the causes that are at work within the heart of things. He is ever free to think on life and life-struggles and no power can restrain his thought nor can hold it eternally captive. To this freedom of thinking, the spread of western education is contributing its mighty and accelerating influence and we, on our part must do our utmost to bring the people to think for themselves and examine

their beliefs in the light of reason before communicating them to their youngsters.

The object of this book is to examine some of the important beliefs that have clustered around the mind of the people and to rid it of such beliefs as are likely to mislead them or to hamper their progress in the path of right knowledge.

In the first place attention is directed to Velalas the civilized agricultural class of the Tamils, and to their origin, and organization. From references made to them, their occupation and social rank, in Tholkappiam the most ancient and existing Tamil work in all its entirety, the age of which goes back to 3500 B. C., it is shown that at a time when all the people except those who lived all along the equatorial regions, were leading the life of hunters or nomads, these Velalas attained perfection in the art of agriculture, built towns and strong forts, had been priests, kings and traders and by means of navigation occupied the whole of India settling in rich and fertile countries along the coasts and river-sides.

When the Aryan hordes came from the north-west of Punjab and poured forth into the interior, it was the ten velala kings then ruling in the north that stopped their advance (See Ragozin's Vedic India). When, after a while, the intellectual section of the Aryan nomads found it impossible to get admission into the Tamilian territories by combating with their kings, they sought it by peaceful means and were thereafter accorded a cordial

reception and admitted to a high rank in the Tamilian society. To the few stray hymns brought by the Aryans, the Tamil kings added a greater number of their own: and, in imitation of their four Tamil vedas which treated of practical ethics, political economy love and heavenly bliss, they classified the hymns into four books and called them 'Vedas'. That the word 'Veda' is a pure Tamil one, is etymologically proved in the body of this work, by grouping a number of pure Tamil words all having a single root 'Ve' and cognate in meaning, After a century of laborious research in linguistic matters. oriental scholars in Europe and America are just now coming to recognise that not only was the Tamilian civilization prior to the Aryan but it was also much superior to it and was the great formative force that modelled it after its own (See Prof. Rapson's Ancient India).

In spite of the repeated efforts which the Tamil kings made, as is manifest from the Chandogya, Kaushitaki and other upanishads, to divert the attention of the Aryan priests from costly rituals supposed to bring only transient benefits, to a contemplation of eternal verities and problems of philosophy, the priests were persisting in the performance of bloody sacrifices so much so that as time went on their conduct became more and more revolting to the delicate feelings of the humanitarian Velalas.

So long as the Tamil kings and rich trading communities yielded to the wishes and devices of the Aryan

priests and lavished their wealth on rituals, the latter pretended to treat them with utmost respect by designating them the Kshatriyas and Vaisyas, while in fact they were positing themselves openly at the zenith in the scale of castes and casting down others secretly much below. But from the moment the kings and nobles and others began to suspect the motives of the Aryan priests, these supercilious parasites gave up their bloody sacrifices but devised other effective means to suck the wealth of the Tamilians. At first they brought all the Tamils under the three denominations of Kshatriya, Vaisya and Sudra, formulated rigid rules exclusively for each and ordained numerous ceremonies to each, doing all these, by means of a dead language Sanscrit, as if in the interest of the people's welfare both here and hereafter, but in fact to establish their supremacy among them and make their priestly help seem indispensable to the people for consulting them on such rules and conducting the ceremonies prescribed for each. In this design the Aryan priests succeeded so well, that the Tamils whether kings or nobles, rich or poor, learned or ignorant, all have become thorough slaves not only to the Aryan priests but also to all who have joined the Aryan fold and bear the name of brahmin. After this the further work of vilifying the Tamils was made much easier, and all those who, in course of time, styled themselves brahmins discovered it, to their great benefit and glory, to efface the three grades of distinctions into which their predecessors classed the Tamils and to put them all together under the generic term

'Sudra' which means but the contemptuous menials as a whole. But in the Tamil country nobody will call himself a Sudra, or a Vaisya or a Kshatriya. The Tamils are either agriculturists or traders, artisans or labourers; every class of people follows a hereditary profession and calls themselves by the name of that profession. But quite recently a great mania has taken possession of some classes of people whose professions though much useful are looked upon as low by brahmins and their imitators, to bring themselves under the Aryan appellations of brahmin, kshatriya and vaisya and escape being called the Sudra. This mania is setting one class against the other and breeds enmity and arrogance in each. All this mischief and injustice of classifying the Tamils who are above such caste iniquities, are exposed in the body of this treatise and remedial measures suggested.

Unfortunately owing to the influence of brahmins, European scholars devoted their attention exclusively to Sanscrit and have acquired the most amazing mastery in it. Had they spent half so much labour on ancient Tamil classics, the result would have been more fruitful, more accurate and more enlightening in the study of ancient Indian history, philosophy and religion. My truth dispel falsehood and love overcome hate and God who is both truth and love illumine our understanding!

The Sacred Order of Love,<br>Pallavaram, 20th July, 1927. VEDACHALAM.

# பொருளடக்கம்

# வேளாளர் நாகரிகம்



## க. வேளாளர் வாழ்க்கை

இப்போதிருக்குந் தமிழ்நூல்களில் மிகப் பழையதாகிய தொல்காப்பியத்தில் வேளாளர்களும் அவர்களுக்கே சிறப்பாக உரிய உழவுதொழிலும் ஒருங்கேவைத்துச் சொல்லப் படுதல் பெரிதும் நினைவிற் பதிக்கற்பாற்று. தொல் காப்பியம் ஐயாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட நூலாகையால், அதிற் குறிக்கப்பட்ட வேளாளர்கள், அந் நூலுக்கும் முற்பட்ட காலத்திலேயே அஃதாவது ஆறாயிர ஆண்டுகளுக்கு முன்னரேயே உழவுதொழிலைக் கண்டறிந்து பெருக்கி, அதனால் தாமும் நாகரிகத்திற் சிறந்து, பிறரை யுஞ் சிறப்புறச்செய்து வாழ்ந்தமை புலனும். ஆடு மாடு மேய்க்குந் தொழிலை மேற்கொண்டு, ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோரிடத்திற் குடியேறிக், கடைசியாக இப் பரத நாட்டிற் புகுந்த 'ஆரியர்,' அஞ்ஞான்று வடக்கே வாழ்ந்த வேளாளரின் உழவுதொழிற் சிறப்பும், அதனால் அவர் பெற்ற நாகரிக வாழ்க்கையுங் கண்டு வியந்து, அவ் வேளா ளரை அண்டிப் பிழைக்கலாயினர். வேளாளருந் தமக்குள்ள செல்வப் பெருக்காலும், இரக்க நெஞ்சத்தாலுந் தம் பால் வந்து தமது உதவியை அவாவிய ஆரியர்க்கு உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க இடமுந் தந்து பல வாற்றானும் அவர்களைப் பாதுகாத்துவந்தனர். ஆகவே,

'வேளாளர்' என்னுஞ் சொல் 'ஈகையுடையார்' என்னும் பொருளில் அவர்க்கே வழங்கிவரலாயிற்று. 'வேளாண்மை' என்னுஞ்சொல் இங்ஙனம் பண்டுதொட்டு ஈகைப்பொருளில் வழங்குதல், "வேளாண்மை யுபகாரம் ஈகையும் விளம்பும்" என்னும் பழைய திவாகரச் சூத்திரத்தால் விளங்கும்.

உழவுதொழிலோ மிகவும் வருத்தமான தொன்று. உழவுதொழிலைச் செய்பவர்கட்கே வருத்தம் இன்ன தென்பது தெரியும்; அதனைச் செவ்வையாய்ச் செய்து முடிப்பதற்கோ முன்பின் ஆராயும் நுண்ணறிவு வேண்டும். ஆதலால், அதனைச் செய்வார்க்கே உயர்ந்த அறிவும் அவ் வறிவினைப் பயன்படுத்தும் முறைகளும் விளங்கும். ஆதலினாற்றான், வேளாளர்க்கு இரக்கமும் அறிவும் ஈகையுந் தொன்று தொட்டுவரும் இயல்புகளாகக் கூறப்படுகின்றன. தம்மையொத்த மக்கள் வறுமையாலும் நோயாலுந் துன்புறக் கண்டால், அவர்க்குள்ள அத் துன்பத்தின் கொடுமையினை நினைந்துருகி, அவைதம்மைப் பொருளாலும் மருந்தாலும் நீக்கவல்லவர்கள் வேளாளர்களே யாவர். பிறர் தரும் பொருளைப்பெற்றுத் தம் மெய்வருந்தாமல் இல்லத்திருந்து இனிது காலங்கழிப்பவர்க்குப், பிறர் படுந்துயர் தெரியாதாகையால் அன்னவர் வறியோர்க்கும் நோயாளர்க்கும் பிறர்க்குஞ் சிறிதும் இரங்கார். ஆதலினாற்றான், வேளாளரல்லாத பிறர் பிறர்க்கு உதவிசெய்தல் அரிதாயிருக்கின்றது. ஈகையும் விருந்தோம்பலும் வேளாளர்க்கே சிறந்தனவாக வைத்து நூல்கள் ஓதுதலும் பின்னே காட்டப்படும்.

இனித், தம்மோடொத்த மக்களின் துயர் களைதலே யன்றி, மக்களினுந் தாழ்ந்த ஆடு மாடு குதிரை கோழி கொக்கு முதலான சிற்றுயிர்கள் படுந் துன்பத்தையுங்

நன்குணர்ந்து, அவைகட்குத் தம்மாலும் பிறர் தம்மாலுந் தீங்குநேராதபடி கொல்லா அறத்தை வளர்க்கவல்ல ஆற்றலும் வேளாளர்க்கே உரித்தாயிற்று.

உயிரோடிருக்கும் மக்களுக்கும் மக்களினுந் தாழ்ந்த சிற்றுயிர்களுக்கும் உதவியாற்றுதலோடு அமையாது, தம்மைப் பெற்று வளர்த்துப் பெரியராக்கிய தம் மூதாதைகளின் பேருதவியையும் நினைந்து, அவர்கள் இவ்வுலக வாழ்வைத் துறந்து மறுமையுலகங்கட்குச் சென்றபின்னும், அவர்களது உயிர் தூய பிறவியையோ பிறவியொழிந்து இறைவன் திருவடியையோ அடையுமாறு இறைவனை வேண்டி வழுத்துதலும் வேளாளர்க்கே உரித்தாயிற்று.

இனித், தமதறிவு வளர்ச்சிக்கும் முயற்சியின் ஈடேற்றத்திற்கும் இன்றியமையாத வழிவகைகளைக் காட்டி, அவ்விரண்டினுஞ் சிறந்த தம்முன்னோர்கள் எழுதிவைத்த நூல்களை ஓதி, அவ்வாற்றாற் கல்வியைப் பரவச்செய்தலும் வேளாளர்க்கே சிறந்ததோர் அறமாயிற்று.

ஆகவே, ஈகைக்குப் பெயரான 'வேளாண்மை' என்னுஞ்சொல், அவ் வீகைக்குக் கருவியான 'பயிர்த் தொழிலுக்கும்' பெயராயிற்று. பின்னர் அவ்விரண்டு தொழில்களையும் ஆள்வாரான 'வேளாளர்'க்கும் அது பெயராயிற்று. இவ் வேளாளர் ஏனை மக்களை நோக்கிச் செய்யும் ஈகையும் விருந்தோம்பலும் 'மக்கள்வேள்வி' (மாநுடயாகம்) எனவும், ஏனைச் சிற்றுயிர்களைப் பாதுகாத்தற் பொருட்டு அவர் மேற்கொண்டு ஒழுகுங் கொல்லாஅறம் 'உயிர்வேள்வி' (பூதயாகம்) எனவும், இறந்து பட்ட தம் முன்னோரை நோக்கிச் செய்யும் நன்றிக்கடன் 'தென்புலத்தார் வேள்வி' (பிதிர்யாகம்) எனவும், இவ்வாறு பிறர்க்காற்றும் உதவி பயன் தரற்பொருட்டு இறைவனை நோக்கிச்

செய்யும் வழிபாடு 'கடவுள்வேள்வி' (தேவயாகம்) எனவுந், தமக்கும் பிறர்க்கும் அறிவை விளக்கி முயற்சியைப் பயன் பெறுவிக்கும் நூலோதுமுறை 'கலைவேள்வி' (பிரமயாகம்) எனவும் ஆன்றோரால் வகுத்துரைக்கப் பட்டன. எனவே, ஈகையும் ஈகைக்குக் கருவியாவனவும், ஈகையைப் பாராட்டும் நன்றிக்கடனும், ஈகையைப் பயன்படுத்துமாறு வேண்டும் வழிபாடும் 'வேள்வி' என்னும் பெயர்க்கு இயைபுடையவாய் நிற்றல் கண்டுகொள்க. கொல்லாஅறம், சிற்றுயிர்கள் தத்தம் உடம்புகளில் நின்று அறிவு விளங்குதற்கு உதவி செய்வதாகலின், அதுவும் 'வேள்வி' என்னும் பெயர்க்குப் பெரிதும் உரிமை பூண்டு நிற்றல் கண்டுகொள்க. இங்ஙன மாக ஐவகை வேள்விகளையும் ஆள்பவராகலின், பண்டைத் தமிழரில் உழவுதொழிலாற் சிறந்து நாகரிக வாழ்க்கையை வகுத்த நன்மக்கள் 'வேளாளர்' எனப்படுவாராயின ரென்பது.

உழவுதொழிலை யறிந்து அதனைத் திறமையாகச் செய்யத் தெரியாத காலங்களில், மக்கள் உண்ணப் போது மான உணவும் உடுக்கச் செவ்வையான உடையும் இன்றி மிகவும் மிடிப்பட்டு உயிர்வாழ்ந்தனர்; காடுகளிலும் மலை களிலும் உள்ள மான், மரை, கடம்பை, முள்ளம்பன்றி, ஆடு, மாடு முதலான விலங்கினங்களை அளவிறந்த வருத் தத்தோடு வேட்டமாடிக் கொன்று, அவற்றின் இறைச்சி யையும் அரிதிற் கிடைத்த காய் கனி கிழங்குகளையும் அயின்று, தழைகளையுந் தோலையும் உடுத்து, நாகரிகம் இன்னதென்றே தெரியாமல் மலைக்குகைகளிலும் மரப் பொந்துகளிலும் இருந்து காலங்கழித்தனர். எவ்வளவோ தேடித்திரிந்தும் அவ் விலங்குகளும் காய் கனி முதலியன வும் அகப்படாத காலங்களிற் பட்டினியும் பசியுமாயிருந்து அவர்கள் பொறுத்தற்கரிய துன்பத்திற் கழித்த நாட்களும்

பல! வேட்டுவ வாழ்க்கையில் இப்போதும் நாகரிகமின்றி உயிர்வாழும் மலைவாணரும் கானவரும் நிரம்பவும் மிடிப்பட்ட நிலையி லிருத்தலை நாம் இஞ்ஞான்றும் நேரே சென்று காணலாம். இங்ஙனமாகப் பண்டைக்காலத்தில் வறுமையிற் கிடந்துழன்ற மக்களின் கொடுந் துன்பமெல்லாம், உழவு தொழிலை முதன்முதற் கண்டறிந்த அறிவுடை நன்மக்களாலேதாம் நீங்கின. தமிழ்மக்களுள் வேளாளர் உழவு தொழிலைக் கண்டறிந்த பண்டை நாட்களில், எகுபதி, சாலடி முதலான சிற்சில நாடுகளில் உறைந்த மக்கட் பகுதியினர் சிற்சிலரைத் தவிர, ஏனைப் பெரும்பாலார் எல்லாரும் உழவுதொழிலை அறியாராய் வேட்டுவவாழ்க்கையிற் பெரிதும் வறுமைப்பட்டு வாழ்நாட் கழித்தனர். வேளாளர் உழவுதொழிலை நடாத்தி நாகரிகத்தைப் பெருகச் செய்த பண்டைநாளில், ஆரியர் வேட்டுவவாழ்க்கையிலும் ஆடு மாடு மேய்க்கும் இடையர் வாழ்க்கையிலுமே இருந்தனர். அதனாலேதான், ஆரியரும் அவர் வழிப்பட்டாருஞ் செய்த நூல்களில் உழவுதொழில் இழித்துரைக்கப்பட்டிருப்பதோடு, அதனைத் தம் மினத்தவர் எவருஞ் செய்தலாகாதென்னுங் கட்டுப்பாடுங் காணப்படுகின்றது.[1] ஆனாற், றமிழ வேளாளரோ அவ் வுழவுதொழிலைத் தமது நுண்ணறிவாற் கண்டுணர்ந்து அதனைச் செவ்வையாகச் செய்து வந்தமையால், அத் தொழில் வேளாளர்க்கே சிறந்ததாக வைத்து வடமொழி தென்மொழியிலுள்ள நூல்களெல்லாம் ஒருமுகமாய் நின்று ஒத்துரைப்பவாயின. இவ்வாறு உழவு தொழிலை வேளாளர்கள் தோற்றுவித்த பிறகுதான் உணவுக்கும் உடைக்கும் உறைவிடத்திற்கும் மிடிப்பட்ட துன்ப வாழ்க்கை நீங்கிற்று; உணவுக்காக விலங்கினங்களைக் கொல்லுங் கொலைத்தொழில் நீங்கிற்று; அளவுக்குமேல்

1. மனு, ௩, ௯௪; ௧௦, ௮௩, ௮௪.

விளைந்த நெல் துவரை முதலான பண்டங்களைத் தம்போற் பசியால் வருந்தும் ஏனைமக்கட்கும் பகுத்துக்கொடுக்கும் ஈர நெஞ்சமும் ஈகையும் கிளைப்பவாயின; விளைந்த பண்டங் களைப் பாதுகாத்து வழங்குதற்கு அரசனும் நாடுநகரங் களுஞ் செல்வமுங் கல்வியும் இன்பவாழ்க்கையும் இறைவன் வழிபாடும் ஒன்றன்மேலொன்றாய்ப் பெருகலாயின. இன்னும் மிகுத்துக்கூற வேண்டுவதென்! இஞ்ஞான்றை மக்கட்கு வந்துள்ள நாகரிக வாழ்வெல்லாம் பண்டும் இன்றும் வேளாளர் கண்டறிந்து நடாத்தும் உழவினால் வந்தனவேயாமென் றுணர்ந்துகொள்ளல் வேண்டும்.

இங்ஙனம் எல்லாத் தொழிலினுஞ் சிறந்ததாய், எல்லார் உயிர்வாழ்க்கைக்கும் இன்றியமையாததாய் உள்ள உழவு தொழிலைப் பண்டுதொட்டு நடாத்திவரும் வேளாளர் கொலையும் புலையும் நீக்கி நாகரிகத்திற் சிறந்தாராய் விளங்கு தலின் அவரது பெருமை பழைய நல்லாசிரியர் இயற்றிய தமிழ்நூல்களிற் பாராட்டப்பட்டிருப்பதோடு, அஃது இன்றுகாறும் மங்காது ஏனை யெல்லா வகுப்பினர்க்குரிய பெருமையினும் மிக்கு விளங்காநிற்கின்றது. இவர்கள் தமக்குள்ள அறிவின் றிறத்தாற், காலமறிந்து நிலத்தைத் திருத்தி வளம்படுத்தி நெல் முதலான நன்செய்ப்பயிரும் துவரை முதலான புன்செய்ப்பயிரும் விளைவித்து, அவற் றால் வரும் பயன்களைத் தாமும் உண்டு பிறரும் உண்ணக் கொடுத்து, யாடு மாடு மீன் முதலான மற்றை உயிர்களைக் கொல்லாமலுங், கொன்று அவற்றின் ஊனைத் தின்னாமலும் அருளொழுக்கத்தில் இன்றுகாறுந் தலைநின்று வருகின்றார் கள். இவர்களது உண்மைப் பெருமையினை யுள்ளவா றுணர்ந்தே தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார்,

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி"

எனவும்,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்."

எனவும்,

"இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய் தூண் மாலையவர்."

எனவும்,

"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம் என்பார்க்கு நிலை"

எனவும் அருளிச் செய்தனர். ஏனைத் தொழில் செய்வா ரெல்லாந் தம துயிர்வாழ்க்கைக்கு வேளாளரையே நாடி நிற்றலின் அவரை "உலகத்தார்க்கு ஆணி" யென்றார்; பிற தொழில்களைச் செய்வாரெல்லாம் பிறரிட்ட ஊழியஞ் செய்து அவரைத் தொழுதுகொண்டு செல்பவராயிருக்க, வேளாளரோ பிறரெவர்க்கும் ஏவல் புரியாராய்ப் பிறரைத் தம் ஏவல்வழி நிறுத்தித் தமதுரிமையில் மேம்பட்டு வாழு மியல்பின ரென்பது தெரிப்பார் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்றார்; உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத எல்லாப் பொருள்களையும் வேளாளரே விளைப்பவராயிருத் தலின் அவர் பிறரிடத்துச் சென்று இரந்து பெற்றுக் கொள்ள வேண்டுவது எதுவும் இன்றென்பதூஉந், தம்மை வந்து இரப்பார்க்கு அவர் வேண்டியதொன்றை ஈயவல்ல ரென்பதும் உணர்த்துவார் "இரவார் இரப்பார்க்கொன் றீவர்" என்றார்; இதனால், இரத்தற் றொழிலையே தமக்கு இயல்பாகவுடைய பார்ப்பன மாந்தரும் பிறரும் வேளா ளரைச் சார்ந்தே பிழைப்ப ரென்பது பெற்றாம்; இனி ஐம்புல அவாக்களைத் துவரத்துறந்த துறவோரது தவ வொழுக்கமும் வேளாளரது உதவி இல்லையாயின் நிலைபெறா தென்பார், "உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம், விட்டே மென்பார்க்கு நிலை" என்றார். இனித் தமது

வெண் கொற்றக்குடை நீழலில் உலகத்தைப் பாதுகாக்கும் அரசரது அரசவாழ்க்கையும் வேளாளர்தம் வேளாண் வாழ்க்கையின் கீழ் அடங்கும் என்பதனையும் விளக்கிப்,

"பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க்காண்பர்
அலகுடை நீழ லவர்."

என்று ஓதிய தெய்வத் திருவள்ளுவர் கருத்தை உற்று நோக்கின் வேளாளரினுஞ் சிறந்த இனத்தினர் வேறில்லை யென்பது வெள்ளிடை மலைபோல் விளங்கிக் கிடக்கும். இங்ஙனங் கூறிய திருவள்ளுவநாயனார் கருத்துக்கு இணங்கவே பண்டைத் தமிழ்ப் பாட்டாகிய பட்டினப்பாலை யுள்ளும் அதன் ஆசிரியர் உருத்திரங் கண்ணனார் காவிரிப் பூம்பட்டினத்தி லிருந்த பழைய வேளாளரைப் பற்றிக் கூறுகின்ற விடத்துக்,

"கொலை கடிந்துங் களவு நீக்கியும்
அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்
நல்லாவொடு பகடுஓம்பியும்
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசைஉழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுஅஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉங்
குறைபடாது
பல்பண்டம் பகர்ந்துவீசுந்
தொல்கொண்டித் துவன்று இருக்கை."

என்று கூறினர். கொலைகளவு நீக்கிக் கடவுளரை வணங்கி யும், வேள்விகள் வேட்டும், எருது ப

பாதுகாத்தும், நான்மறை வல்ல அந்தணர்களின் புகழைப் பரப்பியும், விருந்தினர்க்குப் பல பண்டங்களைக் கொடுத்துஞ் சோறு தந்தும், நல்வினையினின்றும் பிறழாத அன்பு சுரக்கும் வாழ்க்கையினையுடைய கலப்பைத் தொழிலை விரும்பும் உழவராகிய வேளாளர் நடுவுநிலையில் நிலைநின்ற சிறந்த உள்ளத்தினராய்ப் பழியை அஞ்சி உண்மையே பேசித் தம்முடைய பண்டங்களையும் பிறருடைய பண்டங்களையும் ஒப்பாகப் பார்த்துத், தாம் பிறர் பொருள்களை விலைகொள்ளுங்கால் விலைக்குமேல் அப் பொருள்களை மிக அளந்து வாங்காமலும், தம் பொருள்களைப் பிறர்க்கு விலைப்படுத்துங்கால் அவர் கொடுக்கும் விலைக்கு அவற்றைக் குறைய அளந்து கொடாமலும் ஊதியத்தை வெளிப் படையாகச் சொல்லி விற்பவர் என்பது இப் பகுதியால் நன்கு விளங்குகின்றது. இதனால், உழவுதொழிலும், அவ்வுழவு தொழிலாற் பெற்ற நெல் துவரை முதலான பல் பண்டங்களை விலைப்படுத்தும் வாணிக வாழ்க்கையும் பண்டு தொட்டு வேளாளர் ஒருவர்க்கே உரியவாய் வருதலுந்

இனிப், பழமைக் காலந்தொட்டே இரப்போராகிய பார்ப்பனச் சுற்றத்தையும், உலகத்தைப் புரப்போராகிய அரசரையுந் தமது வேளாண் முயற்சியி லிருந்தும் வேளாளர் கள் உண்டாக்கிவந்தனரென்பது சிலப்பதிகாரத்து நாடுகாண் காதையில்,

> "பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
> இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
> உழவிடை விளைப்போர் பழவிறல் ஊர்களும்."
>
> (கசசு - கருo)

என்று ஆசிரியர் இளங்கோவடிகள் கூறியவாற்றால் நன்கு புலப்படும்.

அதுவேயுமன்றித், தம்முள் நுண்ணறிவாற் சிறந் தாரை அறிவுநூல் ஓதுதற்குந் திருக்கோயில்களிற் கடவுள் வழிபாடு ஆற்றுதற்கும் ஒரு வகுப்பினராகப் பழையநாளி லிருந்தே பிரித்துவைத்தார்கள் ; இவர்களே தமிழ்நாட்டு அந்தண ராவர் ; இவர்தம்மை இக் காலத்தார் 'ஆதிசைவர்' என்றுங், 'குருக்கள்' 'பட்டர்' 'நம்பியார்' என்றும் அழைப்பர். தமிழ் நாட்டின்கண் உள்ள பழைய திருக் கோயில்களெல்லாந் தமிழ் மக்களால் அமைக்கப்பட்டுத் தமிழர்க்கே உரியவாகி வருதலால், தமிழ வேளாளரினின் றும் அந்தணராகப் பிரித்துவைக்கப்பட்ட இவ் வாதிசைவ வகுப்பாரை யன்றி, ஆரியப் பார்ப்பனர் எவரும் இத் திருக் கோயிலிலுள்ள திருவுருவங்களைத் தொட்டு வழிபாடு செய் தற்கு இடம்பெறாராயினர். இப் பண்டைவழக்கம் இன்று காறும் நடைபெற்று வருதல் காண்க. பழையநாளில் ஆரியப் பார்ப்பனர் ஆ எருது முதலியவற்றைக் கொன்று அவற்றின் இறைச்சியைத் தின்றுவந்தமையின், அவர் தமிழ்நாட்டுக் கோயில்களுள் நுழைதற்கும் இறைவன் திரு வுருவத்தைத் தொடுதற்குந் தகுதியிலராக ஒதுக்கி வைக்கப் பட்டனர். கொலைத்தொழில் புலைத்தொழில்களைக் கைக் கொண்டு ஒழுகினமை பற்றி வேளாளரால் தாழ்த்தப்பட்ட ஆரியப் பார்ப்பனர் பையப் பைய அவ் விழிதொழில்களைக் கைவிட்டுத், தம்மைத் தாமே உயர்த்துப் பேசிக்கொண்டு, தம்மைத் தாழ்த்திய வேளாளர்களைத் தாமுந் தாழ்த்துதற் பொருட்டு அவரைச் 'சூத்திரர்' என்று வழங்கலாயினர் ; அவரை மட்டுமோ ! அவ் வேளாளரினின்று பிரிந்த 'ஆதி சைவ அந்தண'ரையுங் கூடச் சூத்திரரெனக் கூறி வருகின் றார்கள் !

இனி, வேளாளர் ஓதுதற்குங் கடவுள்வழிபாடு ஆற்று தற்கும் தம்மினின்று ஓர் அந்தணக் குடியை வகுத்து

வைத்தவாறு போலவே, போர் செய்தற்குரிய ஆற்றலுங் குடிகளைப் பாதுகாத்தற்குரிய அறிவுவலியுமுடைய வேளாண்மக்களைப் பிரித்து அரசாளுதற்கு வைத்தார்கள். பண்டைநாளில் மிழலைக் கூற்றத்தை அரசாண்டவனுங், கொடை கொடுப்பதிற் சிறந்தவனுமான வேள் எவ்வி என்னும் மன்னன் வேளாள வகுப்பினனே யாவன். கடை யெழு வள்ளல்களில் ஒருவனும், முந்நூறு ஊரையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்பு மலைக்கும் அரசனுஞ், சைவ சமயாசிரியருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனாராலே "கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப் பாரிலை" என்று பாராட்டி யருளிச்செய்யப்பட்டவனு மாகிய வேள்பாரி என்னும் மன்னனும் வேளாள வகுப் பினனே யாவன்; துவரையை அரசாண்டவனுஞ், சிறந்த கொடையாளியும் ஆகிய இருங்கோவேள் என்னும் அரசனும் வேளாள வகுப்பினனே யாவன். ஒருகாற் குமரிமுதல் இமயம்வரை ஒருமொழி வைத்து உலகாண்ட வேந்தர் பெருமானாகிய சோழன் கரிகாற் பெருவளத்தான், நாங்கூர் வேள் என்னும் வேளாண் தலைவனிடத்துப் பெண்கொண் டமையானும், இக் கரிகாற் சோழனுக்குத் தந்தையாகிய உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி என்னும் மன்னர்பிரான் அழுந்தூர்வேள் என்னும் வேளாண் தலைவன்பால் மகட் கொண்டமையானும் பண்டைநாளிலிருந்த சிறந்த சோழ அரசர்களும் வேளாள வகுப்பினரேயாதல் நன்கு தெளியப் படும். இன்னும் பழைய நாளில் அரசாண்ட வேளாள அரசர்களையெல்லாம் எடுத்துரைக்கப்புகின் இது மிக விரியு மென அஞ்சி, அவருட் சிலரையே ஈண்டு எடுத்துக் கூறினும்.

இனி, வேளாளர் தமது உழவு தொழிலால் விளைவித்த பொருள்களை அறவோர்க்குக் கொடுத்தும், அவற்றால் அந்

தனைப் பாதுகாத்தும், அவை தம்மைத் துறவோர்க்கு எதிர்சென்று வழங்கியும், விருந்தினரை ஏற்று அவர்க்கு அருத்தியும், அவ் வாற்றானெல்லாங் குறைபடாமல் மிகுந்த பண்டங்களை விலைப்படுத்தும் பொருட்டு, அத் தொழில் செய்தற்கேற்ற கணக்கறிவும் இன்சொல்லும் இயற்கையே வாய்ந்தாராய் உள்ள தம்மினத்தவரில் ஒரு சாராரைப் பிரித்து அவரை வணிகராக நிறுத்துவாராயினர். இங்ஙனம் நிறுத்தப்பட்ட வணிக வேளாளரே தொன்றுதொட்டு இன்றுகாறுங் கொலை புலை முதலியன தவிர்ந்த அறவொழுக் கத்தினராய் 'வேளாண் செட்டிகள்' என்று பெயர்பெற்று வருகின்றனர்

இனிக், கொலை புலை நீக்கமாட்டாராய் அற வொழுக் கத்திற் றாழ்ந்து நிற்போரான மற்றைத் தமிழ்க் குடிகளைத் தமது உழவுதொழிலுக்குந் தமக்கும் உதவியாகும் பல கைத்தொழில்களைப் புரியும்படி ஏவி, அவர்களைப் பதினெண் வகுப்பினராகப் பிரித்து வைத்தவர்களும் வேளாளர்களே யாவர். அப் பதினெண் வகுப்பினராவார்: கைக்கோளர், தச்சர், கொல்லர், கம்மாளர், தட்டார், கன்னார், செக்கார், மருத்துவர், குயவர், வண்ணார், துன்னர், ஓவியர், பாணர் கூத்தர், நாவிதர், சங்கறுப்பார், பாகர், பறையர் என்பவரே யாவர். இப் பதினெண் வகுப்பினருந் தத்தமக் குரிய தொழில்களைச் செய்துகொண்டு வேளாளர் ஏவல்வழிநின்று அவர்க்கும் அவரது உழவு தொழிலுக்கும் பயன்படுவா ராயிருந்து வாழ்ந்துவருதலைத் தமிழ்நாட்டிலுள்ள வேளாள நத்தங்களில் இன்றும் நேரே காணலாம்.

இங்ஙனமாகத் தமிழகத்தில் முதன்முதல் உழவுதொழி லைக் காணும் நுண்ணறிவும், அதனாற் கொலை புலை தவிர்ந்த அறவொழுக்கமும், அதனாற் பெற்ற நாகரிகமும் உடைய

வேளாளரே தமிழ்மக்கள் எல்லாரினுஞ் சிறந்து விளங்கித், தம்மினின்று அந்தணர் அரசர் என்னும் உயர்ந்த வகுப்பி னர் இருவரையும் அமைத்துவைத்து, அறவொழுக்கத்தின் வழுவிய ஏனைத் தமிழ் மக்களெல்லாந் தமக்குந் தமதுழவுக் கும் உதவியாம்படி பதினெண் டொழில்களைச் செய்யுமாறு அவர்களை அவற்றின்கண் நிலைபெறுத்தித் தமிழ் நாகரிகத் தைப் பண்டு தொட்டு வளர்த்துவரலானார்கள். மக்களின் தோற்றத்தையும் நாகரிகத்தையும் பெரிதும் வியக்கத் தக்க வாறாய் ஆராய்ந்தறியும் ஆங்கில நூலாசிரியர்களும் 'முதன் முதல் உழவுதொழிலைக் கண்டறிந்த மக்களிலிருந்தே நாகரிகந் தோன்றி வளர்ந்து வரலாயிற்று' என்று இவ் வுண் மையைப் புலப்படுத்தி யிருக்கின்றார்கள். தமது தாளாண் மையாற் கொலை புலை கடிந்து ஈகை அறங்களை இத் தமிழகத் தில் நிலை நிறுத்தினவர்கள் வேளாளர் ஒருவரேயாதல் நன் குணர்ந்தே சைவசமயாசிரியருள் முதல்வரான திருஞான சம்பந்தப் பெருமானும்,

"வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந்
தாளார் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே."

என்று திருவாய் மலர்ந்தருளினர்.

இத் துணைச் சிறந்த வேளாளர் நாகரிகத்திற்குப் பிறப் பிடமாய், ஏனை நாகரிக வகுப்பினர் எல்லாருந் தோன்று தற்கு முற்றோன்றினவராய் இருத்தலின், இவர்கள் ஆரியர் கூறிய பிரம்ம சத்திரிய வைசிய சூத்திரர் என்னும் நால் வகை வகுப்பினுள் ஒன்றினும் அடங்காராய் அந் நால்வகை யினர்க்கும் முற்பட்டாராய்ச் சிறந்து விளங்குதல் நடுவு நின்று ஆராய்வார்க்கு நன்கு விளங்கும்.

இவ் வேளாளர் அன்பினும் அறத்திலுஞ் சிறந்து நின் றாராதலின், எத்தகையோராயினும் எவ்வகுப்பினராயினுங்

துன்புறக் கண்டால் அத் துன்பத்தை நீக்கும் பொருட்டுத் தமக்குள்ள பொருள்களையுஞ், சில நேரங்களில் தமது உயிரையுங்கூடக் கொடுத்துதவும் அத் துணை இரக்கநெஞ்சமும் அன்புங் கண்ணோட்டமும் உடையரென்பது இவர் தம் வரலாறுகளை ஆராய்தலால் நன்கு விளங்காநிற்கும். விருந்தினரை அகமும் முகமும் மலர்ந்து ஏற்று அவர்க்கு வேண்டுவன வெல்லாஞ் செய்து அவரை உவப்பித்தல் இவரது இயற்கை. இஃது,

> "இன்மையாற் சென்றிரந்தார்க்
> இல்லையென்றாது ஈந்துஉவக்குந்
> தன்மையார் ஆக்கூரிற்
> றான்றோன்றி மாடமே."

என்னுந் திருஞானசம்பந்தப் பெருமான் அருளுரையால் தெளியப்படும்.

## உ. ஆரிய நாற்சாதியில் வேளாளர் அடங்காமை

இத் தன்மையினரான வேளாளரை ஆரியர் கூறும் நால்வகைச்சாதிப் பெயரால் வழங்காமல், அவர்கொண்ட நாற்சாதியார்க்கும் முற்பட்டவராகவும் அந் நால்வரினும் மேற்பட்டவராகவும் கொள்ளுதலே பொருத்த முடைத்தாம். ஏனென்றால், வேளாளரினின்றே அந்தண வகுப்பும் அரச வகுப்பும் பிரிந்தமையின் இவர்களைப் பிராமணரென்றுவது சத்திரியரென்றுவது கூறுதல் பொருந்தாது; அல்லது ஆநிரை காத்து உழவும் வாணிகமும் நடாத்துதல் பற்றி இவரை வைசியரென்போ மென்றால், இவர்களுட் பலர் அந்தணராயும் அரசராயும் பண்டுதொட்டு வாழ்ந்து

வரக் காண்டலால், இவர்களை அவ்வாறு வைசியரென்று வரையறுத்துக் கூறுதலும் ஆகாது.

இனி, இவரைச் சூத்திரரென்று கூறுவோமென்றால், அது முற்றும் அடாத உரையாம். ஆரியர் கூற்றின்படி, சூத்திர ரென்போர் பிராமணர் சத்திரியர் வைசியர் என்னும் மூன்று சாதியார்க்குங் குற்றேவல் செய்தல் ஒன்றே உடையரல்லது, வேறு ஏதோர் உரிமையும் ஏதோர் உடைமையும் ஏதொரு முதன்மையும் உடையரல்லர். மற்று, வேளாளரோ அந்தணராயிருந்து நூலோதல் ஓதுவித்தல் திருக்கோயில்களிற் கடவுளுக்கு வழிபாடு ஆற்றல் முதலான உயர்ந்த தொழில்கட்கு உரிமையும், அரசர்க்கு முடிசூட்டும் உரிமையும் அரசாளும் உரிமையும், பண்டுதொட்டுப் பெற்றாராய் வரக்காண்டலானும், அரசர்களாயும் பெருஞ்செல்வர்களாயும் முன்னும் பின்னு மிருந்து வருகின்றமையின் அவர்கள் எல்லாச் செல்வங்களும் உடையராதல் தானே பெறப்படுதலானும், இவ்வாறெல்லாம் அறிவுஞ் செல்வமுங் கல்வியும் வாய்த்த இவர்கள் தனிமுதன்மையுடையராயிருந்து எல்லார்க்குந் தம் பொருள்களை இரக்கத்தானும் அன்பானும் ஈந்து தம்மால் நிறுத்தப்பட்ட பதினெண் வகுப்பினர்பாலுந் தாம் ஏவல்வாங்கி வருதலன்றித் தாம் எவர்க்குங் குற்றேவல் செய்யாமை "இரவார் இரப்பார்க்கொன்றீவர்," "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந், தொழுதுண்டு பின்செல் பவர்" என்னுந் தெய்வத் திருவள்ளுவர் திருக்குறட் பாட்டுகளானும், "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்" எனச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் அருளிச் செய்த திருமொழியானும், "வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந், தாளாளர்," "இன்மையாற் சென்றிரந்தார்க்கு இல்லையென்னாது ஈந்து

உவக்குந், தன்மையார்" எனத் திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய அருளுரையானும் பெறப்படுமாற்றானும் இவரைச் சூத்திரரென்னும் இழித்துரையின்பாற் படுத்து வழங்கல் ஒரு சிறிதும் அடாதென்க.

இன்னும் பண்டைக்காலந் தொட்டுச் சைவவேளாளர்கள் கொலையும் புலாலுணவும் மறுத்துச் சிவவழிபாடு இயற்றி வருகின்றமையின், புலாலுண்டுஞ் சிவவழிபாடு செய்யாமலும் இருக்கும் எந்த வகுப்பினரிடத்தும் உடன் உண்ணுதலும் உடன் கலத்தலுஞ் செய்யாமலே வாழ்ந்து வருகின்றனர். பெரும்பாலும் எல்லாச் சாதியார்களும் சைவ வேளாளர் வீட்டில் உணவெடுப்பர்; சைவ வேளாளர் வேறெந்தச் சாதியார் வீட்டிலும் உணவெடார். ஆரியப் பார்ப்பனர் பழைய நாளிற் புலாலுணவு கொள்வாராயிருந்தமையின், அவர்கள் வேளாளராகிய தம்மைக் கண்டு புலால் மறுத்த பின்னும் வேளாளர் அவர்கள்பால் உணவு கொள்ளாமலே இருந்தனர். சிவதீக்கை பெற்ற சைவ வேளாளர் இந் நாளிலும் ஆரியப் பார்ப்பனர் வீட்டில் உணவெடார்.

இங்ஙனமாகச், சைவவேளாளர் எல்லாவகையானும் உயர்ந்தாராய், ஆரியர்பால் உண்ணல் கலத்தல்களைச் செய்யாமல் அவர் தம்மைப் புறத்தொதுக்கி வந்தமை கண்ட ஆரியப் பார்ப்பனர் தாமும் அச் சைவ வேளாளரைத் தாழ்த்துதற் பொருட்டுத், தம் முன்னோர் எழுதிவைத்த மனு முதலான மிருதி நூல்கட்கும் மாறாகச் 'சூத்திரர்' என்னும் இழிந்தபெயரை வேளாளர்க்கு வைத்து வழங்கத் தொடங்கினர். மனு முதலான பழைய ஆரிய நூல்களின்படி ஆராய்ந்து பார்த்தாலும் வேளாளரைச் சூத்திரர் என்று சொல்வதற்கு ஒருசிறிதும் இடமேயில்லை. மனு தர்மநூலின் ஒன்பதாம் அத்தியாயத்தின் இறுதியில்,

"வைசியன் மறைநூல் ஓதியபின் திருமணஞ் செய்து கொண்டு ஆவைக்காத்தலும், உழவுதொழில் நடாத்தலு மாகிய முயற்சியினை மேற்கொண்டவனு யிருக்கவேண்டும்"

"நான்முகன் ஆனிரைகளைப் படைத்து அவற்றைக் காக்கும் பொருட்டு வைசியனிடத்துங், குடிமக்களைப் படைத்து அவர்களை இம்மை மறுமையிற் காக்கும் பொருட்டு சத்திரிய பிராமணரிடத்தும் ஒப்புவித்தான்"

"நாம் ஆக்களைக் காத்தல் வேண்டாமென்று வைசியன் நினைத்தல் ஆகாது. அவன் காக்கும்போது வேறெந்தச் சாதியானும் ஆக்களைக் காத்தல் கூடாது.

"முத்து மணி பவளம் உலோகம் ஆடை கருப்புரம் முதலிய நறுமணப் பண்டம் உப்பு முதலிய சுவைப்பண்டம் இவைகளுக்கு அவ் வந்நாடுகளில் உள்ளவிலையின் ஏற்றக் குறைச்சல்களையுஞ் சரக்குகளின் நன்மை தீமைகளையும் வைசியன் அறிதல்வேண்டும்"

"தருமமாக வியாபாரஞ்செய்து பொருளைப் பெருக்கு தற்கு முயலல்வேண்டும். மற்ற தானங்களைவிட எல்லா உயிர்களுக்குங் கட்டாயமாக அன்னதானஞ் செய்தல் வேண்டும்"

என்று வைசியனுக் குரிய ஒழுகலாறுகள் வரை யறுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. இதனையடுத்துச் சூத்திர தருமத்தைக் கூறுங்கால்,

"வேதநூல் ஓதியுணர்ந்து புகழ்பெற்ற இல்லறத்தா ஞகிய பிராமணனுக்கு ஊழியஞ் செய்வதே சூத்திரனுக்கு வீடு பேற்றை அடைவிக்கும் மேலான அறமாகும்"

"உள்ளும் புறம்புந் தூயன் ஆகிய உயர்ந்த சாதி யானைக் கொடுமையாகப் பேசாமல், பிராமணனுக்கும், அவ னில்லாவிடின் சத்திரியனுக்கும், அவனில்லாவிடின்

வைசியனுக்கும் மேலான பணிவிடை செய்துகொண்டு செருக்கில்லாமல் நாடோறும் அவர்களை யடுத்திருக்கிற சூத்திரன் மேலான சாதியாகுவன்"

என்று சூத்திரன் ஊழியத்தொழில் ஒன்றற்கே உரிய னாதலை அம் மனுதர்மநூல் வலியுறுத்துக் கூறுகின்றது. ஆரியர்க்குரிய தருமநூல்களில் மிகச் சிறந்ததாகிய மனு தர்மநூலின்படி பார்த்தாலும், ஆன்நிரை ஓம்பல் உழவும் வாணிகமும் நடாத்தல் என்னும் இத்தொழில்களையன்றி, எவர்க்கும் ஊழியஞ்செய்யுந் தொழிலினை மேற்கொள்ளாமல் தொன்று தொட்டு அறவொழுக்கத்தின்கண் வாழ்ந்துவருபவரான வேளாளரை வைசியரெனக் கூறலாமே யன்றிச் சூத்திரரெனக் கூறுதல் ஒருசிறிதும் அடாது. வேளாளர்க்கு ஏவல்புரியும் ஏனைப் பதினெண் வகுப்பினரைக்கூட அவ்வாறு சூத்திரரெனக் கூறுதல் பொருத்தமாகாது.

இனி, வடமொழியில் எல்லார்க்கும் பொதுநூலாகிய அமர நிகண்டிலும் வைசிய வர்க்கத்தைச் சொல்லுமிடத்து உழவு வாணிகம் ஆனிரை ஓம்பல் என்னும் மூன்று தொழிற்கும் உரியார் வைசியரெனக் கூறப்பட்டிருக்கின்றனர். சூத்திரவர்க்கத்தைச் சொல்லுமிடத்துக், குயவர் கொற்றர் கைக்கோளர் துன்னர் கொல்லர் தட்டார் தச்சர் ஓவியர் நாவிதர் வண்ணார் கூத்தர் பாணர் வேடர் கள்விலைஞர் ஊன்விலைஞர் ஏவலர் இழிகுலத்தோர் மடவோர் என்னும் இவர்களே சூத்திர வகுப்பில் அடக்கிக் கூறப்பட்டிருக்கின்றனர். இவ் வடமொழிப் பொது நூலின்படி பார்த்தாலும், உயர்ந்தோருந் தலைவருங் காணியாளருமாகிய வேளாளரை இழிந்தோர்க்குரிய சூத்திரப் பெயராற் கூறுதல் பெரிதுங் குற்றமுடைத்தாதல் காண்க.

# ௩. ஆரியர் வேளாளரைத் தாழ்த்தச் செய்த சூழ்ச்சி

இனிக், குடியேறிப் பிழைக்கவந்த ஆரியப்பார்ப்பனரை அன்பாக வரவேற்று, அவர் இருக்க இடங்கொடுத்தும், அவர் உண்ணச் சோறும் உடுக்கக் கூறையும் வழங்கியும், நூல்கற்க உதவிகள் புரிந்தும் அவர்க்குப் பலவாற்ருன் நன்றிசெய்து அவரைப் பாதுகாத்த தமிழ் நன்மக்களாகிய வேளாளர்க்குத் திரும்ப நன்றிசெய்தற்கு மாருகத், 'நீட்டின மரத்திற் கூர்பார்த்தலோடு' ஒப்ப, அவ்வாரியப் பார்ப்பனர் அவரை மிகவுந் தாழ்த்துதற்குக் கங்கணங் கட்டிக்கொண்டு, நேரம் வாய்க்கும்போதெல்லாம் அவரைச் சூத்திரரென வாய்கூசாது சொல்லுதற்குஞ், சுந்தரமூர்த்தி நாயஞர் காலத்திற்குப் பிற்பட்ட தமிழ்நூல் வடநூல்களில் அங்ஙனமே அவரைச் சூத்திரரென எழுதிக் கரவாய்ச் சேர்த்துவிடுதற்குந் துணிந்து வரலாஞர். இப் பிற்பட்ட காலத்தில் எழுந்த துலுக்கர் அரசாட்சியால் நேர்ந்த பல குழப்பங்களில் அகப்பட்டு வேளாளரிற் கல்விகற்பார் தொகை மிகச் சுருங்கிப்போகவே, ஆரியப் பார்ப்பனர் இழித்துக் கூறுஞ் சூத்திரர் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் தெரியாமல், அவ் வேளாளர் தாமும் அச் சொல்லைத் தமக்கு உரியதெனக் கொண்டு அச் சொல்லால் தம்மைத் தாமும் வழங்கிக்கொள்வாராஞர்கள். இங்ஙனமே, இஞ்ஞான்றை இந்து சமயத்தவர் பலருந் தம்மை 'அஞ்ஞானிகள்' என்று கிறித்துவமதத்தினர் இகழ்ந்துகூறும் பெயரைத் தமக்கு ஓர் அணிகலஞக ஏற்றுக்கொண்டு, 'அஞ்ஞானிகள்' என்னும் அப் பெயரிஞலேயே தம்மைத் தாம் சொல்லிக் கொள்கின்றனர்! ஐயோ! அறியாமையின்

பெருமிதம் இருந்தவா றென்னை! இப் பிற்பட்டகாலத்திற் தோன்றிய புராணங்கள் பலவற்றிலும் ஆகமங்களிலும் பிற நூல்களிலும் ஆரியப் பார்ப்பனரும் அவர் வழிச்சார்ந்த தமிழ்அந்தணரும், வேளாளரைச் சூத்திரரென வழங்கு தற்குவேண்டும் நிலையான ஏற்பாடுகளையெல்லாஞ் செய்து அவற்றின்கட் செருகிவிட்டனர். வேளாளரிற் கற்றவர் எவரேனும் இப் புரட்டுகளைத் தெரிந்துகொண்டு, 'வேளாளரின் பண்டை வழக்கவொழுக்கங்களெல்லாம் மிகச் சிறந்தனவா யிருத்தலின், இவர்களைப் பழைய நூல்களெல்லாம் உயர்குலத்தினராக மிகுத்துக் கூற, நீவிர்மட்டும் இவரைச் சூத்திரர் என இழித்துக் கூறுதல் என்னை?' என்று அவ்வாரியப் பார்ப்பனரையும் அவர் வழிச் சார்ந்தாரையும் வினவினால், அப்போது அவர்கள் மிகவும் ஆழ்ந்த சூழ்ச்சியுடையராய்ச் சூத்திரரென்னும் பெயரை எடுத்துவிடாமலும், அச் சூத்திரப்பெயர் கொண்டே அவரை அந்நேரத்தில் மகிழ்வித்தல் வேண்டியும் 'நீங்கள் சற்சூத்திரர்; உங்களுக்கு ஊழியம்புரியும் ஏனையோரெல்லாம் அசற்சூத்திரர்' எனக் கூறியும், அதனை நூல்களில் எழுதியும் அவரை ஏமாற்றி வந்தனர். அவ் ஏமாற்றங்களைத் தெரிந்து கொள்ளும் ஆராய்ச்சி யுணர்வில்லாதவர்களும், வடமொழியில் எவர் எவைகளை எழுதிவைத்தாலும் அவை தம்மையெல்லாம் ஆராய்ந்துபாராமற் கடவுள் அருளிச் செய்தனவாகவே நம்பிவிடுவாருமான தமிழ் கற்றார் சிலர் தாம் வேளாளராயிருந்துந் தம்மைச், 'சற்சூத்திரர்' எனச் சொல்லிப் பெருமைபாராட்டிக்கொள்கின்றனர்! 'சூத்திரர்' என்னுஞ் சொல்லுக்குப் பொருள் 'மடமை யுடையோர்,' 'பிறர்க்கு ஏவல்வேலை செய்வோர்' என்பனவாதல் அமர நிகண்டினால் நன்கு விளங்குதலால், தம்மைச் சற்சூத்திரர் என்போர் தம்மை 'நல்ல மடையர்,' 'நல்லவேலைக்காரர்'

என்று கூறி மகிழ்வாரையே ஒத்திருக்கின்றனர்! தமக்கு உதவிபுரிந்த வேளாளரைச் சூத்திரரெனக் கூறித் தாழ்த்தி வைக்கும்பொருட்டு ஆரியப்பார்ப்பனர் அதுவே கண்ணுங் கருத்துமாயிருந்து பல ஏற்பாடுகளைப் பிற்காலத்திற் செய்து வைத்த தல்லாமலும், தமிழ்நாட்டில் வேளாளரே செல்வமுஞ் சீருஞ் சிறப்புங் கல்வியும் நன்னடையும் நாகரிகமும் வலிமையும் உடையராயிருத்தலால், அதனையுஞ் சிதைக்கும் பொருட்டு, அவர்க்கு அடங்கி அமைதியாய் வாழ்ந்த குடிமக்கள் பலரையும் அவர்கட்கு எதிரிகளாக்கல் வேண்டி அவருட் சிலரை 'சத்திரியர்' என்றுஞ் சிலரை 'வைசியர்' என்றுஞ் சொல்லித் தூண்டிவிட்டு, அவ்வாற்றால் அவர்கள் வேளாளரைத் தம்மிற் றாழ்ந்த சூத்திரரெனச் சொல்லி அவர்களோடு மாறுபடிநிற்கும்படி செய்துவிட்டு, அவ்வாரியப் பார்ப்பனராகிய தாம் அவரெல்லாரினும் உயர்ந்தாராகத் தனிநின்று கொண்டு, அவரிடும் போரினைக் கண்குளிரக் கண்டு மகிழ்கின்றார்கள்! இவர்செய்த இப்பொல்லாத சூழ்ச்சியால், தமிழ்நாட்டில் முன்னே ஒருவர்க் கொருவர் உதவியாய் ஒற்றுமைகொண்டு உறவாடி அமைதியாய் வாழ்ந்த குடிமக்களெல்லாரும் இப்போது பல்லாயிரம் பிரிவினராய்ப் பிரிந்து ஒற்றுமையிழந்து பகைமை மேற்கொண்டு, தமக் குரியவல்லாத சத்திரியர் வைசியர் என்னும் ஆரியப்பெயர்களைத் தாமாகவே புனைந்தனராய் மல்லாடி நாட்டின் நலத்தைக் கெடுக்கின்றனர்! "ஊர் இரண்டுபட்டாற் கூத்தாடிக்கு இளக்கரம்" என்னும் பழமொழிக்கு இணங்க ஆரியப் பார்ப்பனர் பழந் தமிழ்மக்களைத் தம்முட் போராடவிட்டு, அவரெல்லார்க்குந் தாம் மேலானவர்போல் தனிநின்று அவருடைய நலங்களையெல்லாந் தாம் கைப்பற்றி வருகின்றனர்! இனியேனும், இத் தென்றமிழ் நாட்டிலுள்ள தமிழ்மக்கள் தம் பழைய வழக்க ஒழுக்கங்களைப் பண்டைத் தனித்தமிழ்

நூல்களின் உதவிகொண்டு ஆராய்ந்து தெளிந்து, தாம் சிக்கிக்கொண்ட ஆரியர் வலையினின்றுந் தம்மை விடுவித்துத், தம்மை உண்மையாக உயர்த்துதற்குரிய தமிழ் முறையால் தம்மை உயர்த்தி ஒருமித்து வாழ்வதிற் கருத்தாய் விரைந்து முயலல்வேண்டும்.

## ௬. அருளும் அன்பும் உடையாரே உயர்ந்த சாதியார்

தம்மை உயர்த்துதற் குரிய தமிழ்முறை யாதென்றால், அஃது அறிவும் அன்பும் அருளும் உடைய ஒழுக்கமே யாகும். எந்த உயிர்க்குந் தீங்குசெய்யாத அருளொழுக்கமே எல்லா ஒழுகலாற்றினுஞ் சிறந்ததாய்த் தன்னை யுடையார்க்கு எல்லா உயர்வினையுந் தரும். இது,

> "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
> எல்லா உயிருந் தொழும்."

என்னுந் தெய்வத் திருவள்ளுவர் திருக்குறளால் நன்கு விளங்கும். எந்த உயிரையுங் கொல்லுதலும் ஆகாது, கொன்று அதன் ஊனைத் தின்னுதலும் ஆகாது. "தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான், எங்ஙனம் ஆளும் அருள்?" என்று ஆசிரியர் திருவள்ளுவர் கேட்டவாற், கொலையும் புலையும் நீக்காதார் அருளுடையவர் ஆகார். ஆரியர் எண்ணிறந்த யாடு மாடு குதிரை முதலிய உயிர்களை வேள்விவேட்கின்றேமென்று சொல்லிக் கொண்டு கொன்று தின்றமையால் அவர் அருளுடையராகார்; அதனால் அவர் உயர்ந்தோ ராதலும் இல்லை. ஆதலால், அவரைப் பின்பற்றி, அவர் கூறிய பெயர்களால் தம்மை 'சத்திரியர்' எனவும், 'வைசியர்' எனவுஞ்

சொல்லிக்கொண்டு உயர்வு தேடுதலால், ஒருவர்க்கு உயர்வு வந்துவிடமாட்டாது. கொலையும் புலாலுணவும் நீக்கி அருளொழுக்கத்தில் வந்து நிலைபெற்றால் மட்டும் ஒருவர் வேளாளரைப்போல் உயர்ந்தவராகலாம். இப்போது தம்மைச் சத்திரியர் எனவும் வைசியர் எனவுங் கூறித் தமக்குப் பெருமைதேடுந் தமிழ்க் குடிமக்கள், வேளாளரைப்போற் கொலை புலை நீக்கித் தூய அருளொழுக்கத்தினராய் நடக்கின்றார்களா வென்றால் அதுவுமில்லை. வேளாளர்களோ பண்டைக்காலந் தொட்டே தமது நுண்ணறிவால் நிலத்தை உழுது பயிர்செய்து பல உயர்ந்த சுவைப் பண்டங்களை விளைக்கத் தெரிந்து, அவற்றை உணவாக அருந்தி, மற்றை உயிர்களைக் கொல்லாமலும் அவற்றின் ஊனைத் தின்னாமலும் அருளொழுக்கத்தின் கண்ணராய், இன்றுகாறும் ஏனை எல்லா மக்களாலும் உயர்த்துக் கொண்டாடப்பட்டு வாழ்ந்து வருகின்றனர். இவ்வாறு இயற்கையில் உயர்ந்தோராய் நிற்கும் நன்மக்களை வறிதே 'சூத்திரர்' என்று சொல்லிவிட்டால் அவ்வளவில் அவர்களைத் தாழ்த்திவிடுதல் கூடுமோ? கொலைபுலை யாகிய இழிந்தவற்றைச் செய்யும் ஏனை வகுப்பினர் தம்மைப் 'பிராமணர்' 'சத்திரியர்' 'வைசியர்' என்று வாளா கூறிக்கொண்டால் அவ்வளவில் அவர் உயர்ந்தாராய் விடுதல்கூடுமோ? இரண்டுமில்லை. இது பற்றியன்றே தெய்வத் திருவள்ளுவர் "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யால்" என்று அருளிச் செய்தாரென்க.

இனி, மக்களாய்ப் பிறந்தோர் தம்மையொத்த எல்லார்க்கும் பசியும் நோயும் வறுமையும் உண்டென்பதனை உணர்ந்து, அவர்பால் இரக்கமும் அன்பும் மீதூரப் பெற்றாராய் அவர்க்குச் சோறு தந்து பசியை நீக்கியும், மருந்து ஊட்டி நோயைத் தீர்த்தும், பொருள் வழங்கி வறுமை

யைக் களைந்தும் ஒழுகுவதோடு, அவர் இம்மை மறுமைப் பயன்களை எய்துதற்கு இன்றியமையாத கல்வியறிவையுந் தந்து நடத்தல் வேண்டும். இதுவே அன்பொழுக்கமாம். இவ் வொழுக்கம் ஆரியப் பார்ப்பனர் பால் இல்லையென்பதை எவரும் உணர்வர். தம் மினத்தவரல்லாத பிறர் எவரேனும் பசியாலும் விடாயாலும் மிக வருந்திவந்து ஒரு பிடிசோறும் ஒரு குடங்கைநீருங் கேட்டாலுந் தீட்டுப்பட்டுப்போம் என்று சொல்லி அவற்றைக் கொடாமல் அவரைத் துரத்துவர்; தாம் நீர் முகக்குங் கிணற்றிற் பிறர் நீர் எடுக்கவும் விடார்; தாம் குளிக்கும் நீர்த் துறையிற் பிறர் இறங்குதற்கும் ஒருப்படார்; தமது வீட்டுத் திண்ணையிற் பிறர் களைத்திருக்கவும் இடங் கொடார்; பழந்தமிழ்க் குடிகளாகிய பறையர் பள்ளர் தம் தெருவண்டை நெருங்கு தற்கும் மனம் ஒப்பார். நல்ல நிலைமையிற் சிறிது உதவி வேண்டினோர்க்கே அதனைச் செய்யாத ஆரியப் பார்ப்பனர், நோயும் வறுமையுங்கொண்டு தமது நிலைமை கெட்ட ஏனை யோரைத் திரும்பியும் பார்ப்பரோ! நடுநிலையுடையீர் கூறு மின்கள்! இனி, இவர் தாங் கற்ற கல்வியைத் தம்மினத் தவர் அல்லாத பிறரெவர்க்குங் கற்றுக்கொடார்; தம் மினத்தவர் மட்டுமே வீட்டுநெறி யெய்துதற்குரியராத லால், ஏனையோர் அவ் வீட்டுநூல்களைக் கற்கலாகா தென்பர். தாமோதும் வீட்டுநூல்களைப் பிறர் ஒதின் அவர் நாவைப் பிளக்கவேண்டுமெனவும், அவற்றைக் கேட்பிற் காய்ச்சி உருகின ஈயத்தை அவரது செவியில் உகுத்தல் வேண்டுமெனவுங் கூறுவர். இவையெல்லாம் அவர்க ளெழுதிவைத்த மனுமுதலான மிருதி நூல்களிற் பரக்கக் காணலாம். இவ்வாரியப் பார்ப்பனர்க்குப் பிறர்மாட்டு ஆ! எவ்வளவு இரக்கம்!

இனித், தமிழ்நன்மக்களான வேளாளர்களோவென்றால் எல்லா மாந்தரிடத்தும் அன்பும் இரக்கமும் உடையராய்ப், பசித்து வருந்தினார்க்கு அப் பசியைத் தீர்த்தற்கு அறச்சோற்று விடுதிகளும், நீர்விடாய் தணித்தற்கு அறக்கூவல் குளங்கள் தண்ணீர்ப்பந்தர்கள் இளமரக்காக்களும், வழிப்போவார் தங்குதற்குச் சத்திரஞ் சாவடிகளும், நோயுற்று வருந்தினார்க்கு நோய்தீர்க்கும் மருத்து விடுதிகளுங், கல்வி கற்பிக்குங் கல்விக் கழகங்கள் திருமடங்களுங், கடவுளை வழிபடுதற்குத் திருக் கோயில்களும் பண்டுதொட்டு ஆங்காங்கமைத்துப் பல்வகை அறங்களுஞ் செய்திருக்கின்றனர். அவைமட்டுமோ, பொருளின்றித் தம்பால் வந்த புலவர்க்குந் துறவோர்க்கும் மழையைப்போற் கொடை கொடுத்து, அவர் தம்மால் உலகிற்குப் பல நலங்களை விளைவித்திருக்கின்றனர். வேளாளர் இங்ஙனம் பல்வகை அறங்களைச் செய்துவைக்க, அவற்றை இன்று வரையில் துய்ப்பவர்கள் மட்டும் பெரும்பாலும் ஆரியப் பார்ப்பனராயிருத்தலை அறியாதார் யார்?

ஆரியப் பார்ப்பனர் தம்மினத்தவர் அல்லாத வேறொருவர் தமக்கு நண்பராதல் பற்றித் தம் வீட்டிற்கு விருந்தினராய் வந்தால் அவர் எவ்வளவு பசியோடிருந்து முகங் குழைந்தாராயினும் அவரைப் புறந்திண்ணையில் இருக்கச்செய்து, வாயிற்கதவை அடைத்துக்கொண்டு தாமுந் தம்மினத்தவரும் உள்ளேயிருந்து நன்றாய் விலாப் புடைக்க மெல்லத் தின்று முடித்தபின் மிஞ்சியதைப் பசித்துப் பாதிஉயிர் போன அவ் விருந்தினர்க்கு வாயிற் கதவண்டை நடையில்வைத்து இடுதலும், அவர் எச்சிற் சோற்றை மனவருத்தத்தோடும் அரைகுறையாய் உண்ட பின் அவரே தாம் உணவுகொண்ட எச்சிற்கல்லையைக் கையில் தூக்கிக் கொண்டு தெருவேசெல்ல, அவர்க்குச்

சோறிட்ட அப் பார்ப்பனரின் மகளிர் அவர் பின்னே சாணத்தைக் கரைத்துத் தெளித்துக்கொண்டு வருதலும் இன்றுகாறும் நடக்கக் காணலாம். வேறினத்தவர் எவரா யிருப்பினும்—அவர் தம்மைச் சத்திரியரெனக் கூறிக் கொள்பவராயினும் வைசியரெனக் கூறிக்கொள்பவராயினும் அன்றித் தம்மையும் பிராமணரெனவே கருதிக் கூறுபவ ராயினும், அல்லது தம்மைச் சூத்திரரெனவே ஒப்புக்கொண் டவராயினும், அவரெல்லாம் ஆரியப் பார்ப்பனர் தமக்கு ஆருயிர் நேசராதல் பற்றி அவர் வீட்டுக்குத் தப்பித்தவறி விருந்தினராய்ச் சென்றால், அவர்கட்கு அங்கே இவ்வளவு பெருஞ் சிறப்பும் நடக்கின்றது! வெட்கங் கெட்ட இவ் வெச்சிற் சோற்றைத் தின்னுதற்குத் தமிழரில் மானமுடை யோர் எவரும் இவ்வாரியப் பார்ப்பனர் வீட்டுக்குச் செல்வரோ?

இனி, வேளாளரோவென்றால் "விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா, மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" என்று ஒப்புயர்வற்ற தமிழ்மறை கூறுகின்றபடி, வந்த விருந்தினரைப் புறத்தே பசித்திருக்கவிட்டுத், தாமுந் தம்மினத்தவருமாக உள்ளே கதவடைத்துக் கொண்டு உண்ணும் நீரர் அல்லர்; வந்த விருந்தினர், தம்மோடு உட னிருந்து உண்ணுதற்கு ஏற்ற சைவ வொழுக்கம் இல்லாத வராயிருப்பின் அவரை முன் ஊட்டிப் பின் தாம் உண்பர்; அல்லது அவரை ஒரு பக்கத்து வைத்துத் தாம் ஒருபக்கத் திருந்து, அவருந் தாமும் ஒரேகாலத்தில் உணவு கொள்ளத் தக்கதான ஒழுங்குஞ் செய்வர். தம்மினத்தவர் அல்லரா யினும், கொலை புலை தவிர்ந்த சைவ வொழுக்கத்தினரா யிருப்பவரைத் தம்மோடு உடன்வைத் துண்ணுதற்கும் வேளாளர் பின் நிற்பவர் அல்லர். ஆனால், வேளாள வகுப் பினரிற் சிலர் இக் காலத்தில் ஆரியப் பார்ப்பனரைப்

பார்த்துத் தாமும் அவர்போல் ஆகல்வேண்டி, விருந்தின ராய் வந்த வேற்றினத்தாரைப் புறத்தேவைத்துத் தாம் உண்ணுதலும், உண்டு மிஞ்சிய மிச்சிற்சோற்றை அவர்க்கு இடுதலும், தாம் உண்டபின் எஞ்சிய உணவுகளைப் பறை யர்க்கு இட்டால் தமக்குத் தீட்டாகும் என்று பிழைபடக் கருதி அவற்றை நிலத்தின்கண் வெட்டிப் புதைத்தலுஞ் செய்து நடத்தல் உண்மையே; என்றாலும், அன்பும் இரக்கமும் அருளும் பண்டுதொட்டு இயற்கையாகவுடைய வேளாள நன்மக்கட்கு இத்தகைய இரக்கமற்ற கொடுஞ் செயல் சிறிதுந் தகாதென்பதை யுணர்ந்து தம்மைத் திருத்திக்கொண்டு, சைவ வொழுக்கமுடைய வேற்றினத் தாருஞ் சைவ வொழுக்கமில்லா வேற்றினத்தாருமாகிய எல்லாக் குடிமக்களையும் அவரவர்க்கேற்ற தகுதியாக எவர் மனமும் வருந்தாமற் சிறப்பாக நடப்பித்தலிலேயே கண்ணுங் கருத்தும் வைத்தல் வேண்டும். சைவவொழுக்கத் தினராய் உயர்ந்துவரும் வேற்றினத்தாரைக் கீழேதூக்கி அழுத்தாமல், அருட்கைகொடுத்து மேற்றூக்கி அவரைத் தம்மினத்தவராக்கிக் கொள்ளல்வேண்டும். அப்போது தான் கொலையும் புலையுங் கட்குடியும் இவை வாயிலாகவரும் ஏனைத் தீவினைகளும் உலகில் வரவரக் குறையும். 'யாம் உயர்ந்தாற் போதும்; பிறர் எங்ஙனமாயின் எமக்கு என்!' என்று தமது நலமே கருதிப் பிறர் நலங் கருதாதார்க்கு அன்பும் அருளும் இரக்கமும் இன்மையால் அவர் அவை யெல்லாம் ஒருங்கே உடைய கடவுளின் திருவருளைப் பெறமாட்டார்; அவர் இம்மை மறுமை யிரண்டிலும் உயர்ந்த நலங்களைப்பெறார்; அவர் உண்மை வேளாளரும் ஆகார்; அவரை உயர்ந்தோரென அறிவுடையோருங் கொள்ளார். ஆகையால், "அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்"

என்னுந் தெய்வமறையின் உண்மையைக் கடைப் பிடித்து, வேளாளராவார் பண்டைக்காலந் தொட்டு வருந் தமக்குரிய அருளொழுக்கத்தினின்றுஞ் சிறிதும் வழுவாது ஒழுகுதலே அவர்க்கு என்றும் மங்காத பெருமையையும் இறைவனருட்பேற்றையுந் தரும் என்க. தொன்றுதொட்டு வருந் தமது அருளொழுக்கப் பெருமையைக் கற்றும் கேட்டும் ஆய்ந்தறியாத அறியாமையுடைய வேளாளரிற் சிலர் ஆரியப் பார்ப்பனரைப் பார்த்து அவர்போல் அருளொழுக்கத்தில் வழுவி நடப்பராயினும், அங்ஙனம் அருளிலராய் நடப்பது அவர்க்கு இயற்கையன் றென்பது, அவர்கள் திருவிழாக் காலங்களிலும் ஏனைச் சிறப்பு நாட்களிலும் எல்லா வகுப்பினரையும் வேற்றுமையின்றி ஒருங்கு வைத்து உடனிருந்து உணவுகொள்ளுதலாகிய 'மகேசுர பூசை' நடத்துமாற்றால் நன்கறியப்படும். அதுநிற்க.

---

## ரு. ஆரியப்பார்ப்பனர் தமிழையுஞ் சிவத்தையும் இகழ்தல்

இன்னும், ஆரியப் பார்ப்பனர் தமக்குப் பல்வகையால் உதவியாற்றிவருந் தமிழ்மக்களெல்லாரையும் ஒரு தொகைப் படுத்துச் சூத்திரர் என்று இகழ்தல் அல்லாமலும், ஆரியர்க்கு முன்னேதொட்டுத் தமிழ் மேன்மக்கள் வழிபட்டு வரும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானையுஞ் சூத்திர தெய்வமென இகழ்ந்துவருவதுடன், அதனைத் தமது வசிட்ட மிருதிநூலிலும் எழுதிவைத்திருக்கின்றார்கள். தமிழ்மொழி அவர்கட்கு எட்டிக்காயினுங் கசப்பதாகும். இறந்துபட்ட தமது சமஸ்கிருத மொழியினையுஞ், சில நூற்றாண்டுகட்கு முன் தோன்றிப் பலமொழிக் கலப்புடையவாய் வழங்கும் ஆங்கிலம் இந்தி முதலான மொழி

களையும் எவ்வளவு உயர்த்துப் பேசவேண்டுமாயினும் அதற்கு மடிகட்டிநிற்பர். இன்ன காலத்திற்றான் தோன்றிய தென்று கூறுதற்கு ஆகாத அத்துணைப் பழமையுடைத் தாய்ப், பண்டைக்காலத்திலேயே இலக்கண இலக்கிய வரம்புபெற்று, எல்லா வளங்களும் நிரம்பி இன்றுகாறும் நடைபெறுகின்ற தமிழையுந் தமிழ்நூல்களையும் அவை கற்றாரையுங் கண்டாற் சூத்திரபாஷை சூத்திரநூல்கள் சூத்திரப் படிப்பாளிகள் என்று இகழ்ந்து முகஞ் சுளித்துப் போவர். இத் தென்றமிழ் நாட்டிற் பிறந்தவர்களாயிருந்தும் இவ்வாரியப் பார்ப்பனர், வடநாட்டிலுள்ளவர்களையும், அவர்கள் தம்முடைய மொழிகளில் எழுதிவைத்திருக்கும் நூல்களையுமே எந்நேரமுங் கொண்டாடுவர். இவர்களிற் சிற்சிலர் தமிழ்மொழியைக் கற்றுத் தமிழ்ப்புலவரா யிருந்து பொருள்தேடினும், இவர்களை நெருங்கி ஆராய்ந்தால் இவர்களுந் தமிழையுந் தமிழ்நூல்களையுந் தமிழரையும் இகழ்பவராகவே காணப்படுகின்றனர்; அதனால், இவர்கள் தமிழ்கற்றது வயிற்றுப்பிழைப்புக்கே யன்றிப் பிறிதன் றென்பது நன்கு புலப்படும். இதுமட்டுமோ, தமிழ் நாட்டிற் பிறந்தருளி முழுமுதற் கடவுளின் உண்மையை நாட்டி யருளின திருஞானசம்பந்தர் முதலான சைவசமயாசிரி யரில் மூவர் அந்தணர்களாயிருந்தும் அவர்களையுஞ் சூத்திரர் எனக்கூறி, அவர்கள் அருளிச்செய்த நூல்களைச் சூத்திரப் பண்டாரப் பாட்டென்று இகழ்ந்து, சைவவேளாளர் மிகுதி யாயுள்ள திருநெல்வேலி முதலான ஊர்களிலுங்கூடச் சிவபிரான் திருக்கோயில்களில் ஓதுவார்பாடும் இத் தேவார திருவாசகங்களைத் தாம் செவிகொடுத்துக் கேட்டாற் பார்ப் பனராகிய தமக்குத் தீட்டாம் என்று கருதி, ஓதுவார் அவற்றைப் பாடத்தொடங்கும் முன்னரே நம்பியாரிடந் [illegible]ீறு பெற்றுக்கொண்டு அவ் வாரியப்பார்ப்பனர்

கோயிலைவிட்டு அகன்றுபோதலை இன்றும் பார்க்கலாம். தமிழராற் கட்டிவைக்கப்பட்டுத், தமிழராற் பெரிதும் போற்றி வழிபாடு செய்யப்பட்டுவருந் தமிழ்த்தெய்வ மாகிய சிவபெருமான் உறையுங் கோயில்களிலே, முழு முதற்கடவுளாகிய அச் சிவபிரான் திருவுருவத்தின் எதிரிலே, ஆரியப்பார்ப்பனர் தாம் வணங்கிப் போந்த இந்திரன் வருணன் அசுவினி முதலான சிறுதேவர்கள்மேல் தம் முன்னோர்கள் பாடிவைத்த ஆரியவேதங்களை முதலில் ஓதும்படி, அவ் வேதங்களின் சிறுமையுணராத தமிழர்களை ஏமாற்றி ஏற்பாடு செய்துவிட்டது மல்லாமற், சிவபிரான் ஒருவனையே வழுத்துந் தேவார திருவாசகங்களை முதலில் ஓதாதபடிக்குஞ் சூழ்ச்சிசெய்து விட்டார்கள்! இதனினும் வேளாளரை இழிவுபடுத்தத் தக்கது வேறு எதுவேண்டும்! இதுமட்டுமோ, தமிழ்நாட்டி லிருந்து செயற்கருஞ் செயல் கள் புரிந்து உண்மையன்பாற் சிவபிரான் திருவடி தலைக் கூடிய சைவத்திருத் தொண்டர் வரலாறுகளை இவ் வாரியப பார்ப்பனர் இகழ்ந்து ஒதுக்கி, வடநாட்டிற் பிறந்து சிறு தெய்வங்களை வணங்கிப்போன தாசர்களின் வரலாறு களையே எந்நேரமும் விரும்பிக் கற்றுக் கொண்டாடுவர்! இவர்கள் சிவபிரான் கோயில்கட்குச் செல்லுதல் தமிழராற் பாராட்டப்படுதற்குந், தம் ஆரிய முறைகளை ஆண்டு நுழைத்தற்குமேயாம். இவர்கள் கடவுள் ஒருவன் உண் டெனக் கொள்ளாமல், தம்மையே கடவுளாகக் கருதும் நாத்திகர் என்பதற்கு, இவர்கட்கே உண்மையாக உரிய மீமாஞ்சைநூல் கடவுள் இல்லையென மறுப்பதனாலுஞ், சங்கராசிரியர் 'நானேகடவுள்' என நாட்டிய மாயவாத வேதாந்தக் கொள்கையையே இவர்கள் அனைவருங் கைக் கொண்டு நடத்தலாலும் நன்கு துணியப்படும். இன்னும் இங்ஙனமே இவ்வாரியப் பார்ப்பனர் தமிழையுந் தமிழ்நூல்

களையுந் தமிழரையுந் தமிழ்ப் பெரியாரையுந் தமிழ்த் தெய்வத்தையுந் தாழ்வுபடுத்திவருஞ் சூழ்ச்சிகளையெல்லாம் ஈண்டுரைக்கப்புகின் இது மிகவிரியும். பொதுவாய்த் தமிழ்த்தொடர்புடைய எதனையும் இகழ்ந்தொதுக்குதலே இவர்தங் கடப்பாடு. தாம் அங்ஙனம் ஒதுக்குதற்கு ஏலாமல் ஏற்பதற்குரிய மிகச் சிறந்தது ஏதேனும் ஒன்றைத் தமிழிற் கண்டால் உடனே அஃது ஆரியராகிய தம்மவரிட மிருந்து வந்ததெனக் காட்டுதற்குத் தக்க ஏற்பாடுகளை யெல்லாம் எப்படியோ செய்துவைப்பர்! இவர்திறம் இவ்வா றிருக்க.

---

## ௬௰. வேளாளர் ஆரியத்தையும் பார்ப்பனரையும் கொண்டாடல்

இனி, வேளாளர்களோ வென்றால் வந்தேறுங் குடிகளாய்ப் போந்த ஆரியப் பார்ப்பனர்களை அகமும் முகமும் மலர்ந்தேற்று அவர்க்கு வேண்டுஞ் சிறப்புகளை யெல்லாம் இன்றுகாறும் இன்னும் மனங் கோணாமலே செய்துவருகின்றனர். பழையநாளில் வந்த ஆரியர் இருக்க நிலங்களும் இல்லங்களும் உயிர்வாழ்க்கைக்குக் கழனிகளும் பொருள்களும் வேளாளர்கள் வழங்கியிருக்கின்றனர். தமது நூன்முறைப்படி வேளாளர் ஆரியப் பார்ப்பனரைக் குரவராகக் கொள்ளக்கூடா திருந்துந், திருமணக் காலங்களிலுந் தென்புலத்தாரை வணங்குங் காலங்களிலுந் திருக்கோயில் வழிபாடு செய்யுங் காலங்களிலும் பிற சிறப்பு நாட்களிலும் அவர்களையும் வருவித்துத், தம் தமிழ்அந்தணர்க்கு அடுத்த நிலையில் அவரையுங் குரவராகவைத்து அவர்க்கும் வேண்டுவனவெல்லாங் கொடுத்து வந்தனர்; இன்றுங் கொடுத்து வருகின்றனர். சைவசமய ஆசிரியர்கள்

தமிழைச் சிறப்பித்துக் கூறும் இடங்களில் ஆரியத்தையும் உடனெடுத்துச் சிறப்பித்து அருளிச்செய்கின்றனர்; தமிழ் நான்மறைகளைச் சிறந்தெடுத்து ஓதுகின்றுழி ஆரிய வேதங்களையும் உடன்வைத்துச் சிறப்பித்துப் பாடியிருக்கின்றனர்; தமக்குரிய இசைக்கருவியாகிய 'யாழ்' என்பதனைக் குறித்துச் சொல்லுங்காற் கூடவே ஆரியர்க்குரிய 'வீணை'யையும் உடன் வைத்துச் சொல்கின்றனர். இங்ஙனமெல்லாம் பலகாலும் பலவிடத்துந் தமிழ்ச் சான்றோர் தம்மால் உயர்த்துப் பாராட்டப்படுதற்குரிய தகுதியில்லாத ஆரியரையும் அவர்செய்த நூல்களையும் அருண்மிகுதியால் உயர்த்துப் பாராட்டுதல்போல, ஆரியருள் எவரேனுந் தமிழரையும் அவரியற்றிய அரும்பெரு நூல்களையும் பாராட்டித் தம் வடமொழி நூல்களிற் பேசியிருக்கின்றனரா? இல்லையே. இதனாலேயே, தமிழர் அருளாளராதலும், ஆரியர் அழுக்காறுடையராதலும் நன்கு விளங்கும்.

இன்னுந், தமிழர் வாய்மையே கூறும் இயல்பினரென்பதற்கும், ஆரியர் பொய்யும் புளுகும் புனைந்து கட்டிச் சொல்லித் தம்மை உயர்த்தும் நீரர் என்பதற்கும் அவரவர் தத்தம் நூல்களைப் பற்றிக் கூறுவனவே சான்றாம். அளக்கலாகாப் பெருமையுடைய திருக்குறள், நாலடியார், தேவார திருவாசகங்கள் முதலிய நூல்களையெல்லாந் தமிழ்மக்கள் அவ்வவற்றை இயற்றிய சான்றோர் பெயர்களால் உண்மையை உள்ளவாறே சொல்லி வழங்குவர். ஆரியரோ, மேற்கூறிய தமிழ்நூல்களின் அரும்பொருள்களில் நூறாயிரத்து ஒன்றுகூட இல்லாமற், பெரும்பாலுஞ் சிறு தெய்வங்கள்மேற் சிறப்பில்லா வகையாகத் தம்மவராற் பாடப்பட்ட இருக்கு முதலான வேதங்களையும், அருளறத்திற்கு ஒவ்வாத முறைகளைக் கூறும் மிருதிகளையுங், கடவுளின் இறைமைத் தன்மைக்கு இழுக்கந்தேடும் பொய்க்கதைகள்

மிக நிரம்பிய புராணங்களையும் எல்லாங் கடவுள் அருளிச் செய்தனவாகப் பொய் கூறி, அவற்றின்கண் எல்லாம் ஆரியராகிய தாம் தேவர்களாகப் பேசப்பட்டிருத்தலைக் காட்டித் தம்மை உயர்த்திச் செருக்குவர். இன்னும், ஆரியர் தமது மொழியில் தாம் உயர்வாகக் கொள்ளும் நூல்களிற் காணப்படாமல் தமிழில் உயர்ந்தனவாகக் காணப்படுவனவற்றைக் கைக்கொள்ளாதும் அவற்றாற் பயன்பெறாதும் போதலைக் கண்டு இரங்கிய பிற்காலத்துத் தமிழறிஞர் தாம் எழுதுந் தமிழ்த் தலபுராணங்களையும் பிறவற்றையும் அவர் கைக்கொண்டு பயன்பெறல் வேண்டித் தாம் அவற்றை வடநூல்களிலிருந்து மொழிபெயர்த்துச் செய்ததாகவுங் கூறித், தம்மை வெறுத்துத் தள்ளும் அவர்களோடும் உறவு பாராட்டாநிற்பர்.

தமிழ் நாட்டுச் சைவசித்தாந்தத் திருமடங்களுக்குத் தலைவரும் ஆசிரியருமாய் இருக்குந் தமிழ வேளாளக் குராவர்கள் தமது சைவசித்தாந்தக் கொள்கைக்கு முற்றும் மாறான மாயாவாத வேதாந்தக் கொள்கையுடைய ஆரியப் பார்ப்பனரைக் கூட்டங் கூட்டமாகத் தம் மடங்களில் வைத்துக்கொண்டு அவர்கட்கு எல்லாவகையான உதவிகளும் புரிந்து வருதலை இஞ்ஞான்றும் பார்க்கலாம். ஆனால், ஆரியப்பார்ப்பனக் குருவான சங்கராசாரியரோ தம் மடங்களில் வேளாளர் முதலான தமிழர் எவரையும் அணுகுதற்கும் விடுவதில்லை; எவரேனுந் தமிழரை, அச் சங்கராசாரியர் கண்டு பேசும்படி நேர்ந்தால் அவரது முகத்தை நோக்கிப் பேசுதலுந் தமக்குத் தீட்டாமெனக் கருதித் தம் ஆரியப்பார்ப்பனருள் எவரது முகத்தையேனும் நோக்கியபடியாகவே பேசுவர். இன்னுந், தமிழ வேளாளர் தாம் கட்டிவைத்த பற்பல சத்திரஞ் சாவடிகள் பள்ளிக்கூடங்கள் கோயில்களில் ஆரியப் பார்ப்பனரைத் தலைவர்களாக

ஏற்படுத்தி, அவ்வாற்ருல் அவை தம் தமிழினத்தார்க்கும் பயன்படாவாறு செய்துவர, ஆரியப்பார்ப்பனரோ தாம் எடுப்பித்த சிற்சில சத்திரங்கள் கோயில்கள் சமஸ்கிருத பாடசாலைகளில் தமிழர் எவரையும் நெருங்கவிடாது வருதலையும் இன்றுகாறும் எவரும் நேரே கண்டு தெளியலாம். இங்ஙனமே, ஆரியப்பார்ப்பனர் தம்மினத்தவரல்லாத மற்றெவரும் முன்னேற்றம் அடைதற்குத் தினையளவும் இடங்கொடாமல் ஒரவன்னெஞ்சம் உடையராய்ச் செய்து வரும் பொல்லாத கட்டுப்பாடுகளையும், தம்மினத்தவரல்லாததுடன் தம்மை ஓயாது புறம்பழித்து வருவாருமான அவ்வாரியப் பார்ப்பனர்க்கும் பிறர்க்குந் தமிழ வேளாளர் ஈர மென்னெஞ்சமுடையராய்ச் செய்துவரும் அருளுதவிகளையும் ஈண்டு முற்ற வெடுத்து மொழியப்புகுந்தால் இது மிகவிரியுமெனா அஞ்சி இதனை இவ்வளவில் நிறுத்தி, வேறென்று கூறத் துவங்குவாம்.

---

## எ. தொல்காப்பியரும் வேளாளரும்

இவ்வாறு பண்டைக்காலந் தொடங்கிச் சீருஞ் சிறப்பும் உடையராய் வரும் வேளாளவகுப்பினரைச் சூத்திரரெனவும், இத்தகைய சீருஞ்சிறப்பும் இல்லாத ஏனைவகுப்பினரைப் பிராமண சத்திரிய வைசியரெனவுங் கூறினல் அதனை நடுவுநிலை பிறழா அறிவுடையோர் எவரேனும் ஒப்புவரோ? ஒருசிறிதும் ஒப்பாரன்றே. அற்றன்று, செந்தமிழ்த் தொல்லாசிரியராகிய தொல்காப்பியனர் தாம் இயற்றியருளிய ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்துள் வேளாளரைச் சூத்திரரெனக் கூறிய தென்னை யெனின்; இது தொல்காப்பியம் என்னும் ஒப்புயர்வில்லாச் செந்தமிழ்த் தனி முதல்நூலை நன்குபயின்று அறியாதார்

கூறுங் கூற்றும். ஆசிரியர் தொல்காப்பியனார் வேளாளரை வேளாளரென்றே ஓதினரல்லது சூத்திரரென யாண்டும் ஓதிற்றிலர். அற்றன்று, சூத்திரர் என்னுஞ் சொல் வடமொழிப் பெயராகலின் பண்டைச் செந்தமிழ் நூலாகிய அத் தொல்காப்பியத்தின்கண் அச் சொல்லால் அவரைக் குறித்திலரெனின்; "வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை" என்னுஞ் சூத்திரத்தில் 'வைசிய' எனும் வடமொழிச்சொல்லை அவர் எடுத்தாண்டிருத்தலின், வேளாளரையுஞ் சூத்திரரெனக் கூறல்வேண்டினாராயின் அவர் அச் சொல்லை அவர்க்குப் பெயராக வழங்காதிரார். இஃதொன்று கொண்டே வேளாளரைச் சூத்திரரெனக் கொள்ளுதல் தொல்காப்பியனார் திருவுளக்கருத்துக்கு இணங்குவதன்றென்பது பெற்றும். அஃதொக்குமாயினும், அந்தணரையும் அரசரையும் வைசியரையுங் கூறியபின் அவர் வேளாளரை நான்காம் முறைமைக்கண் வைத்து வடநூலார் கூறுமாறே கூறுதலின், வேளாளரைச் சூத்திர ரென வெளிப்படையாக வைத்துக் கிளந்து கூறிற்றிலரா யினும், அவர் தம்மைச் சூத்திரரெனக் கூறுதல் தொல் காப்பியனார்க்கும் உடன்பாடேயாமெனின்; நன்று கூறினாய், நான்காம் முறைமைக்கண் வைத்துக் கூறிய துணையானே அவரைச் சூத்திரரெனக் கொண்டாரென்பது ஆசிரியன் கருத்தை முன்னொடுபின் ஆராய்ந்து உணரமாட்டாதார் கூற்றும். ஆசிரியன் இன்னாரை இன்ன வகுப்பினர் எனக் கொண்டானென்பது, அவரவர்க்கு வரையறுத்த தொழில் களை அவன் எடுத்துக்கூறும் வழியா னல்லது வேறு வகை யாற் றுணியப்படாது. மேலே யாம் விளக்கிக் காட்டியபடி பழைய ஆரியநூல்கள் சூத்திரர்க்கு வரையறுத்த தொழில்: "மேல்வகுப்பினர் மூவர்க்கும் அவர் ஏவிய குற்றேவற்றொழில் புரிதல் ஒன்றேயாம்." சூத்திரராவார்

உழவுதொழிலாயினும் வாணிகமாயினுஞ் செய்தற்கு உரிமையுடைய ரல்லர். ஆரியர் வகுத்த சூத்திரவகுப்பில் வேளாளரை அடக்குதல் ஆசிரியர் தொல்காப்பியனார்க்குக் கருத்தாயின் அவர் அவ் வேளாளர்க்குக் குற்றேவற்றொழில் ஒன்றுமே கூறியிருப்பர்; மற்று அவர் அவ்வா றுரையாது, ஆரிய நூல்கள் வைசியர்க்கு உழவு தொழிலைச் சிறந்ததாக வைத்துக் கூறுமா றுபோலவே,

> "வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
> இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி."

எனக் கிளந்து கூறினாராகலின் அவரைச் சூத்திரரெனக் கோடல் அவர்க்குக் கருத்தன்றாதல் துணியப்படும். மேலும், வேளாளர் காடு கெடுத்து நாடாக்கிக் குளந் தொட்டு வளம்பெருக்கி உழவுசெய்யும் வகையினை முதன் முதற் கண்டறிந்த நாகரிக உயர்குடி மக்களாதல் பற்றி அவர்க்கு உழவுதொழிலைச் சிறந்ததாக வைத்துக் கூறினா ராயினும், அவர்கள் அரசர்க்கு உதவியாளராய் அவர்க்குப் படைத்தலைவரும் அமைச்சரும் ஆதற்குரியா ரென்ப தூஉம், அரசர்தரும் வரிசைகளைப் பெற்றுக் குறுநில மன்னர் ஆதற்குரியா ரென்பதூஉம் மேற்சூத்திரத்தை யடுத்து,

> "வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
> வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே."

என்று ஆசிரியர் மீண்டுங் கூறுதலாற் றெளியப்படும். இங்ஙனம் வேளாளர் ஒருவர்க்கே யுரிய சிறப்புத் தொழி லும், அவர் அரசரைச் சார்ந்து பெறுந் தண்டத் தலைமை முதலிய பொதுத்தொழிலுங் கூறி, அந்தணாளர் ஒரோ வழி அரசு செலுத்துதற்குரியராதலும் அரசர்க்குரிய வரிசைகளிற் பல குறுநில மன்னர் பெறுதற்குரியாராதலுங் கூறிமுடித்தபின் ஆசிரியர்,

"அன்ன ராயினும் இழிந்தோர்க்கு இல்லை"

என்னுஞ் சூத்திரம் அருளிச்செய் திருத்தலின், இச் சூத்திரத்தின்கண் 'இழிந்தோர்' எனக் குறிப்பிக்கப்பட்டவர், வேளாளர்க்கு ஏவல் புரிவாராக வகுக்கப்பட்ட ஏனைப் பதினெண் வகுப்பினராதல் இனிது விளங்கும். வடமொழிக்கண் மிருதிநூல் முதலியவற்றிலும் அமரநிகண்டிலும் இப் பதினெண் வகுப்பினருஞ் 'சூத்திரவர்க்கத்'தின்கண் அடக்கப்பட்டிருத்தற்கேற்பவே, ஆசிரியரும் இவரை 'இழிந்தோர்' என்பர். இப் பதினெண்மருஞ் செல்வத்தான் மிக்குயர்ந்தாராயினும், அரசனாற் பெறுந் தண்டத் தலைமை அமைச்சுரிமை சிற்றரசர்க்குரிய அடையாளங்கள் முதலாயின வெல்லாம் பெறுதற்குரியர் அல்லரென்பது தொல்காப்பியனார் கருத்து. அந்தணரும் அரசரும் வேளாளரும் அல்லாத பிறரே 'இழிந்தோர்' என ஆசிரியராற் கொள்ளப்பட்டனரென்பது எற்றாற் பெறுதுமெனின், உயர்ந்தோராவார் தத்தமக்குரிய கடமைகளைத் தமக்கு மேம்பாடுண்டாகுமாறு செய்து முடிக்கும் வகைமையை வாகைத்திணையுள் ஆசிரியன்,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்."

என்று ஓதியவாற்றாற் பெறுதுமென்பது. இதன்கண் அரசரல்லாத 'ஏனோர்' எனப்பட்டவர் 'மரபியலிற்' கூறியாங்கு அரசராற் பெறும் வரிசைக்கு உரிமையுடைய வேளாளரேயாவர்; இவர்தமக் குரிய இருமூன்று கடமைகளாவன: ஓதலும் வேட்டலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமும் என இவை. இவ் வறுவகைத்தொழில் வேளாளர் அல்லாத ஏனைப் பதினெண் வகுப்பினுட் பட்டார்க்கு அக்காலத்து இல்லாமையின், இச் சூத்திரத்

தின்கண் மூன்றும் வகுப்பினராக ஓதப்பட்டவர் வேளாளரே யாதல் ஐயுறவின்றித் தெளியப்படுகின்றதன்றோ? இவ்வாறு இவ் வறுவகைத் தொழில் வேளாளர் ஒழிந்த ஏனைக் கீழ்வகுப்பினர் பதினெண்மருக்கும் பெரும்பாலும் இல்லாமையானும், அவை இல்லையாகவே அவற்றின்கட் சிறந்து வென்றி பெற்றுத் தோன்றுதலும் அவர்க் கில்லாமையானும் அந் நான்காம் வகுப்பினரை ஆசிரியன் இச் சூத்திரத்தின்கண் ஓதிற்றிலன். அற்றேல், இவ் வாகைத் திணைச் சூத்திரத்தில் வேளாளரை மூன்றும் வகுப்பின்கண் வைத்து ஓதிய ஆசிரியன், மரபியலில் "வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை" என வைசியனை மூன்றும் முறைமைக் கண் வைத்து, அதன்பின் "வேளாண் மாந்தர்க்கு" என்னுஞ் சூத்திரத்தை நிறுத்தி வேளாளனை நான்காம் முறைமைக்கண் வைத்தோதியவா றென்னையெனின் உழவும் வாணிகமும் வேளாளர்க்கு ஒப்ப உரியவாயினும், அவருள் ஒருபகுதியார் உழுதொழிலைவிட்டு வாணிகம் ஒன்றையே நடத்துங்கால் அவரை அத் தொழில்பற்றி அஞ்ஞான்று வேறு பெயரான் வழங்கினமை தெரிப்பார் "வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை" என்றோதினர்; இக் காலத்திலும் வாணிகஞ்செய்யும் வேளாளர் 'வேளாண் செட்டிகள்' என்று வழங்கப்படுதல் காண்க. உழவுதொழில் வேளாளர்க்கு என்றுஞ் சிறந்த உரிமையாதல்பற்றி அவர்க்கு எஞ்ஞான்றும் வழங்கும் "வேளாண்" பெயராற் சூத்திரஞ் செய்தார். இவ்வாறு வேளாளரை இருவேறு தொழில் பற்றி இருவகைப்படுத் தோதுங்கால், இவரல்லாத ஏனைப் பதினெண் குடிமக்களையும் ஒருதொகைப் படுத்து ஐந்தாம் வகுப்பாக்கி, அவர்தம்மை "இழிந்தோர்" எனவும் "கீழோர்" எனவும் ஆசிரியன் கூறுவன்; அவ்வாறு வேளாளரை இருவகைப்படுத்தாது ஒன்றாக்கி ஒரு வகுப்பினராகக்

கூறும்வழி அவ் வேளாளர் தம்மை "ஏனோர்" எனவும் "பின்னோர் எனவுங் கூறுவன். ஓதுதற்றொழில் அந்தணர் ஒருவர்க்கே சிறந்ததாயினும், அஃது ஏனை அரசர் வணிகர் வேளாளர் என்னும் ஒவ்வொரு சிறப்புத் தொழில் உடையார்க்குந், தனித் தனிக் கைத்தொழில்களுடைய ஏனைப் பதினெண் வகுப்பார்க்கும் பொதுவகையில் உரித்தென்று ஓதுகின்றுழி, அந்தணரல்லாத அவ் வேனையோரை நான்கு வகுப்பாக்கி, அவ் வந்தணரை ஒருவகுப்பாக்கி "மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே" என்று ஆசிரியன் தன் கருத்தை இனிது புலப்படுத்துரைத்தல் காண்க; இச் சூத்திரத்தில் 'மேலோர் முறைமை' என்றது அந்தணர்க்குச் சிறப்பாகவுரிய 'நூல் ஓதுந்தொழில்;' 'நால்வர்க்கும் உரித்து' என்றது அவ் வோதுதற்றொழில்; அஃது ஏனைத் தொழில்களிற் றனித்தனிச் சிறந்தாராகிய அரசர் வணிகர் வேளாளர் இவரல்லாத ஏனைப் பதினெண்மர் என்னும் நால்வகையார்க்கும் பொதுப்பட உரியதாகும் என்றபடியாம். இனி, அந்தணரை வேறுபிரியாமல் அவரையும் அகப்படுத்து, வணிகரையும் வேளாளரையும் ஒருவகுப் பாக்கி யுரைக்கும்வழி, அந்தணர் அரசர் வேளாளர் என்னும் மூவரையும் 'மேலோர்' எனவும், அவரல்லாத ஏனைப் பதினெண்மரையுங் 'கீழோர்' எனவும் ஆசிரியன் ஓதுவன்; அது,

> "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்
> கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே."

என்னுந் தொல்காப்பியக் கற்பியற் சூத்திரத்தால் நன்கு தெளியப்படும். இச் சூத்திரப் பொருள் 'மேலோராகிய அந்தணர் அரசர் வேளாளராகிய மூவர்க்குங் கூட்டிச் சொல்லிய வேள்விச்சடங்கு, ஏனைக் கீழோராகிய பதினெண் வகுப்பார்க்கும் உரித்தான காலமும் உண்டு' என்பதாம்.

இங்ஙனம் ஒருகால் நால்வகுப்பினராகவும், பிறிதொரு கால் 3வகுப்பினராகவும் பகுத்து உயர்ந்தோராகவும் இழிந்தோராகவும் ஆசிரியனாற் கூறப்பட்ட மக்கள் மருதநிலத்திற்கு உரியராவர். வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருதநிலமே மக்கள் உழவுதொழிலாற் சிறந்து நாகரிகமுற்று வாழ்தற்கு உதவிசெய்வதாகலின், அந் நிலத்தாற் பெருகிய மக்களையே ஆசிரியன் மேலோரெனவுங் கீழோரெனவும் வகுத்து அவ்வவர்க்குரிய தொழில்வேறுபாடுகளை எடுத்து மொழிந்து நூலருளிச் செய்தான். அரசனது அரண்மனை மருதநிலத்தின்கண்ணேதான் உளதென்பது "உழிஞை தானே மருதத்துப் புறனே" எனவும், "முழுமுத லரணம் முற்றலுங் கோடலும், அனைநெறி மரபிற் றாகுமென்ப" எனவும் ஆசிரியன் புறத்திணையியலிற் கூறிய சூத்திரங்களான் அறியப்படும்.

இனி, மருதநிலம் அல்லாத முல்லை, குறிஞ்சி முதலான நிலப்பகுதிகளினும் மேலோருங் கீழோருஞ் சிறுபான்மை உளரென்பது,

> "ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
> ஆவயின் வரூஉங் கிழவரும் உளரே."

என ஆசிரியன் கூறுமாறுபற்றி உணர்ந்துகொள்க. எனவே, தமிழ்நாட்டின்கட் பிறந்த மக்கள் வகுப்பு, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலம்பற்றி எழுந்த தொன்றுதல் நன்கு பெறப்படும். இந் நால்வகை நிலத்தும் மேலோரான நன்மக்கள் தம்முள் ஏதும் வேறுபாடின்றி உண்ணல் கலத்தல்களைச் செய்து வந்தமை 'தொல்காப்பியம்,' 'இறையனாரகப் பொருள்,' 'திருச்சிற்றம்பலக் கோவையார்' முதலான தெய்வத் தமிழ் மறை நூல்களால் நன்கறியப்படும்; அவையெல்லாம் ஈண்

டுரைக்கப் புகின் மிகவிரியுமாதலின் அவைதம்மை அந் நூல்களுட் கண்டு கொள்க.

இங்ஙனம் நால்வகை நிலத்தும் அவ்வந் நிலத்து மக்களின் தொழில் வேறுபாடு பற்றிப் பல்வகுப்பினராகப் பிரிக்கப்பட்டோருட், கொலையும் புலாலுணவும் மறுத்து ஓதல் வேட்டல் அரசுபுரிதல் வாணிகஞ் செய்தல் உழவு நடாத்தல் என்னும் உயர்ந்த தொழிற்கண் நிலைபெற்று நின்றோர் 'மேலோர்' எனவும், அவர்தம் ஏவல்வழி நின்று, அக் கொலையும் புலையும் நீக்காமற் பெரும்பாலுங் கைத் தொழில் செய்யும் அவ் வளவில் நின்ற ஏனைவகுப்பினர் 'கீழோர்' எனவும் இருபெரும் பிரிவில் வகுக்கப்பட்டு, அவரவரும் அறிவாலும் ஒழுக்கத்தாலுந் தொழிலாலுந் தத்தமக்குள்ள உயர்வு தாழ்வுகளை நினைந்து, கீழோர் மேலோர்க்கு அடங்கி நடக்கவும், மேலோர் தங்கீழ்வாழுங் குடிமக்களை இனிது பாதுகாத்து வரவும் இவ்வாறு மிகவும் அமைதியாகவும் ஒழுங்காகவும் பண்டைத் தமிழ்மக்கள் வாழ்க்கை இனிது நடைபெறலாயிற்று.

## அ. வடநாட்டிற் குடியேறிய வேளாளர்

நாகரிக வாழ்க்கையிற் சிறந்த இத் தமிழ் மக்கள் இத் தென்னாட்டின்கண் மட்டுங் குடிவாழ்ந்தவர் அல்லர். இவர்கள் இத் தமிழ்நாட்டின் மேல்கடற்கரைப் பக்கமாகவும் வடக்கு நோக்கிச் சென்று இமயமலைச் சாரல் வரையிலுள்ள வடநாடெங்கும் பரவி, ஆங்காங்கு நாடுநகரங்கள் அமைத்துத் தமது நாகரிகத்தைப் பெருக்கிவந்தனர். இங்ஙனம் பெருக்கிவந்த தமிழர்களுள் வேளாள வகுப்பினரே முதன்மையானவர். வடக்கே மேல்கடற்கரை

யைச் சார்ந்த பல ஊர்களும் நகர்களும், கீழ்கடற்கரையைச் சார்ந்த தெலுங்குநாட்டு ஊர்களும், அங்கு அரசாண்ட ஆந்திர சாளுக்கிய அரசர்களும், 'வேள்புலம்,' 'வேளாபுரம்,' 'வேளகம்,' 'வேள்காம்,' 'வேள்பட்டி,' எனவும்; 'வேளிர்,' 'வேண்மார்' எனவும் முறையே வழங்கப் பட்டு வந்தமையே இதற்குச் சான்றாம்.[1] வடக்கே கீழ்கடற் கரையிலுள்ள நாடுகளை அரசாண்ட சளுக்கியர்களும் வேளாளரேயாவர்; "வேள்புல அரசர் சளுக்கு வேந்தர்" என்னுந் திவாகரச் சூத்திரமும் இதற்குச் சான்றாம். இவ் வேளாள அரசர்கள் வடக்கே கங்கையாறு பாயும் இடங் களிற் பெருந்தொகையினராகிய தம் மினத்தவரோடு குடி யேறி வாழ்ந்துவந்தமை பற்றி, வேளாளர் 'கங்கையின் புதல்வர்' என்றும் வழங்கப்படுவர். இங்ஙனம் வடநாடு களில் அரசாண்ட வேளிரும் அவர் இனத்தவருமான வேளாண்மக்கள் தென்னாட்டிலிருந்த தம் முன்னோரைப் பிரிந்து போனவரேனும், அவர்கள் தம் முன்னோரின் பிறப் பிடமான தமிழ்நாட்டையும், அதன்கண் தம் முன்னோர் வழிவந்த வேளாண்மரபினரையும் மறந்தவரல்லர். காலம் வாய்த்துழியெல்லாம் அவர்கள் தென்னாட்டிலுள்ள தம் உறவினரோடு உறவு கலந்தும், நேரிமலைக்குத்[2] தெற்கே யுள்ள காடுகளையழித்து அவற்றின்கண் நாடுநகரங்கள் அமைத்து அரசுபுரிந்தும் வந்தனர். நடுநாடாகிய மைசூரில் இப்போது 'துவாரசமுத்திரம்' என வழங்கும் 'துவரை நகரை' வேளிர் அரசர் நாற்பத் தொன்பது தலைமுறை செங்கோல்செலுத்தி வந்தனரென்பதும், அவருள் இறுதி யாக வந்தோன் இருங்கோவேள் என்னும் மன்னனும் என்பதும் புலப்பட,

1. 'வேளிர் வரலாறு,' கசுகசு, பக்கம், கசு.

2. நேரிமலை என்பது விந்தயமலை; 'கல்லாடம்,

“நீயே, வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்
செம்புபுனைந் தியற்றிய சேண்நெடும் புரிசை
உவரா ஈகைத் துவரை ஆண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே.”

என்று கபிலர் கூறுதல் காண்க[1]. இதுகொண்டு, பண்டை நாளில் தென்னாட்டிலும் வடநாட்டிலும் பரவியிருந்த வேளாளரும், அவருள் அரசராயிருந்த வேளிரும் நாகரிகத் திற் றலைசிறந்தவரா யிருந்தமையின், தாம் ஒருவரை யொருவர் மறவாது, வடநாட்டிலுள்ளார் தென்னாடு போந்தும், தென்னாட்டில் உள்ளார் வடநாடு சென்றும் இடையிடையே உறவுகலந்து வந்தமை தெற்றென விளங்கா நம்.

இங்ஙனமாகத் தமிழரில் மிகச் சிறந்த வேளாளர் இந்திய நாட்டின் வடபால் எங்கும் பண்டைக்கால பரவியிருந்தன ரென்பதற்கு, மகதநாட்டை ஆந்திரர் பேசிய தெலுங்குமொழியும், நருமதையாறு பாயும் இடங்களிலும் நாகபுரியின் வடக்கிலுமுள்ள கோண்டு மொழியும், இராசமகல் மலைச்சாரல்களில் வழங்கும் இராச மகல், ஊராவோன் மொழிகளும், இவ்விந்தியாவின் வடமேற் கெல்லையிலுள்ள பெலுசித்தான மலைப்பக்கங்களி லுள்ள குன்றவர் வழங்கும் பிராகுவி மொழியும், இமயமலைச்சாரலி லும் வடகிழக்கு நாடுகளிலும் பேசப்படும் மொழிகள் சிலவுந் தமிழ்மொழியோடு இனம் உடையவைகளாயிருந் தலே ஒருபெருஞ் சான்றும் என்க.

1. புறநானூறு, ௨0௧.

## ௪௰. இந்தியாவின் வடமேற்கிற் குடிபுகுந்த ஆரியரின் புலையொழுக்கம்

இவ்வாறிவர்கள் இந்தியாவினுள் எங்கும் மேம்பட்டு வாழு நாளையில், இவ் விந்திய நாட்டின் வட வெல்லையாய் உள்ள இமயமலைக்கும் வடக்கே நெடுந்தொலைவில் இந் நிலவுருண்டையின் வடமுனைநாடுகளில் இருந்த ஆரியர், அந் நாடுகள் வரவரக் குளிர்மிகுந்து உயிர்வாழ்தற்கு ஏற்ற தன்றாய் மாற, அவர்களுட் பலர் தாம் இருந்த இடத்தை விட்டுத் தெற்கு நோக்கிவந்து, இவ்விந்திய நாட்டின் வட மேற் கெல்லையிலுள்ள பெலுசித்தானத்தின் வழிப்புகுந்து பஞ்சாபிலுள்ள சிந்துயாற்றங் கரையிற் குடியேறினார்கள்.[1] அப்போது அங்கு அரசாண்ட தமிழரசர்களாகிய வேளிர், பல நகரங்கள் அமைத்து வலிய கோட்டைகள் கட்டி வலிமையும் நாகரிகமும் உடையராய் விளங்கினரென்பது அவர்பால் வந்தெய்திய ஆரியரே தம்முடைய இருக்குவேதப் பாட்டுகளிற் கூறுமாற்றால் நன்குவிளங்கும்.

''ம 'ம

கொண்டவர்களாய் அவர்கள் (தாசர்கள்) இந் நிலத்தின் மேல் ஒரு மூடுவலையை விரித்தார்கள்''[2]

“இலபிசனுடைய வலிய கோட்டைகளை இந்திரன் உடைத்துப் பிளந்தான்.''[3]

---

1. இது பாலகங்காதரதிலகர் நுணுகி ஆராய்ந்தெழுதிய 'வேதங்களிற் கூறிய வடமுனை இல்லம்' (Arctic Home In Tha Vedas) என்னும் நூலிற் காண்க.

2. இருக்குவேதம், ௧, ௩௩, ௮.

3. இருக்குவேதம், ௧, ௩௩. ௧௨.

"மறஞ்சிறந்த நெஞ்சினனாகிய நீ பிப்ருவின் கோட்டைகளை உடைத்து வீழ்த்தினாய், ஆரியர்களையுந் தாசியர்களையும் நீ நன்றாகப் பகுத்துணர்ந்து கொள்ளல்வேண்டும், உறுதியாகக் கட்டிவைக்கப்பட்ட சுஷ்ணாவின் கோட்டைகளை அவன் (இந்திரன்) துண்டு துண்டாகப் பிளந்தான்."[1]

"இந்தச் சோமபானத் துளிகளால் உவந்து இந்திரன் தாசியர்களைக் கலைத்துத் துரத்த, நாங்கள் அவர்களின் பகைமைக்குத் தப்பிப்பிழைத்து, ஏராளமான உணவைப் பெறுவேமாக.

"ஓ இந்திரனே, ஏராளமான செல்வத்தையும் உணவையும் பெற்று, மிகச்சிறந்த வலிமையினால் நாங்கள் வானளவும் உயர்ந்து விளங்குக.

"இரிஜிஸ்வான் அவர்களைச் சூழ்ந்து முற்றுகையிட்டஞான்று, நீ சிறிதும் விட்டுக்கொடாமல் வங்கிரிதனுடைய நூறு கோட்டைகளை நுறுக்கியிருக்கின்றனை."[2]

இவ்விருக்குவேதப் பாட்டுகளில் ஆரியர்கள் இந்திரனை நோக்கிக் கூறும் வேண்டுகோளுரைகளால், தம் காலத்திருந்த வேளாண்மக்களையும் அவர்க்குத் தலைவரான வேளிர் அரசர்களையும் நிரம்பக் கொடுமையாக இகழ்ந்துரைத்தனராயினும், ஆரியர் அவர்களின் பெருஞ்செல்வத்தையும் நாகரிக அரசவாழ்க்கையையும் பொறாமையால் உடன் உயர்த்துக் கூறுதலுங் காண்க. ஆரியர்களாகிய தம்மையுந், தம்மால் தாசியரென வழங்கப்பட்ட தமிழரையும் பிரித்துக்காணுமாறு அவ்விந்திரனை வேண்டிக் கோடலும் நினைவுகூரற்பாற்று. இன்னுந், தமிழராகிய பிறர் இனிது வாழ்தலைக் காண இவ் வாரியர் மனம்பொறாது எரியும் இயல்பினர் என்பதற்குக்,

---

1. இருக்குவேதம், க, ருக. 2. இருக்குவேதம், க, ருரு.

"குயவன் என்பவனின் மனைவியர் இருவரும் பாலிலே
தலைமுழுகுகின்றனரே! அவர்கள் சிபா யாற்றின்
திலே அமிழ்ந்தி இறவார்களா"[1]

என்னும் அவர்களது கொடிய வேண்டுகோளுரையே சான்றாம். "அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார், வழுக்கியுங் கேடு ஈன்பது" என்னுந் தெய்வத் திருக்குறளின்படி, பெருஞ் செல்வத்தில்வாழ்ந்த இத் தமிழ் நன்மக்களை வயிறெரிந்து வைத ஆரியர் உண்ணச் சோறும் உடுக்கச் சிறிய துணியும் இருக்கச் சிறந்த இல்லமும் இன்றி மிக மிடிப்பட்டுக் காலங்கழித்தனரே யல்லாமற் பிறிதில்லை யென்பது அவர்களது வாய்மொழியினாலேயே நன்கு புலப் ப

அற்றேல், நாம்பும் நலனறத்திற் சிறந்த பண்டைத் தமிழ வேளாளர் மிடிப்பட்டு வருந்திவந்த வருத்தியது என்னையெனிற் கூறுதும். பண்டை ியர் முழுமுதற் கடவுளின் உண்மையை உணர்ந்தவர் அல்லர்; அதனை யுணராமையின் தாம் அம் முதற்பொருளை வழிபடுமாறும் உணராராயினர். தமக்காகத் தம் பகைவரோடு போர் இயற்றவும், மழைபெய்வித்துத் தமக்கு உணவுப் பண்டங்களை விளைவித்துத் தரவும் வல்லன வாகத் தம்மாற் கருதப்பட்ட இந்திரன் மித்திரன் வருணன் மருத்துக்கள் முதலான சிறு தெய்வங்களையே பெரிதும் வண ன சா சமைத்த களிப்பான பானகத்தை அத் தெய்வங்களுக்குப் பருகக் கொடுத்தலானும், யாடு மாடு குதிரை முதலிய விலங்கினங்களை வெட்டி அவற்றின் இறைச்சியை அவை தமக்கு உணவாகக் கொடுத்துத் தாமும் உண்டலானும்

1. இருக்குவேதம், ௧, ௧௦௪.

தாம் இந் நிலவுலகத்திற் பெறவேண்டிய எல்லாச் செல்வங்களையும் பிழையாமல் எளிதிற் பெறலாம் என்று நம்பி வந்தார்கள். இந் நம்பிக்கையாற் சோமபானத்தையும் விலங்கின் இறைச்சியையும் அவியாகக் கொடுக்கும் பொருட்டு அளவிறந்த வேள்விகளையும் வேள்விச் சடங்குகளையும் நாடோறும் பெருக்கி வந்தனர். அதற்கு இருக்குவேதத்தின் ஐந்தாம் மண்டிலத்தின்கண் உள்ள,

"ஓ பிராமணர்களே, மருத்துக்களே, யான் கருத்தாய்ப் பிழிந்த இந்தச் சோமபானத்தை இந்திரன் பருகட்டும்;

ஏனென்றால் இந்தக் காணிக்கையானது ஆடவனுக்கு ஆடுமாடுகளைத் தேடித் தந்தது; இந்திரன் அதனைப் பருகிய பின் அவ் அரவினைக் கொன்றான்.

ஒரு நண்பன் மற்றொரு நண்பனுக்கு உதவிசெய்தல் போல, அக்கினியானவன் அவன் வேண்டியபடியே முந்நூறு எருமை மாடுகளை விரைந்து பாகம் பண்ணிக் கொடுத்தான்.

ஏம,

காணிக்கையாக, நெருக்கிப் பிழிந்த மூன்று பெரிய தொட்டிச் சோமபானத்தை உடனே குடித்துவிட்டான்.

மகவான், நீ முந்நூறு எருமை மாடுகளின் இறைச்சியைத் தின்று, மூன்று தொட்டிச் சோமபானத்தைப் பருகிய போது, தேவர்களெல்லாரும் வென்றி முழக்கத்தை எழுப்பினார்கள்; அவன் அரவினைக் கொன்றதற்காக அவனைப் புகழ்ந்தார்கள்."[1]

என்னும் பாட்டே சான்றாம். மயக்கத்தைத் தரும் கள்ளையொத்த சோமப்பூண்டின் சாற்றை ஏராளமாகப் பருகியதல்லாமலும், முந்நூறு எருமை மாடுகளையுங் கொலை

---

1. இருக்குவேதம், ௫, ௨௯, ௩, ௭, ௮.

செய்து பலியூட்டி ஆரியர் தம் தெய்வமாகிய இந்திரனுக்கு ஒருகால் வெறியாட்டு அயர்ந்தமை இதன்கண் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதன்றோ? இங்ஙனமே வெள்ளாடு களுஞ் செம்மறிக்கிடாய்களும், எருதுகளும், ஆக்களும், குதிரைகளும் ஆரியரால் அளவின்றிக் கொல்லப்பட்டமை யினை இருக்கு வேதத்தின் முதன்மண்டிலம், ஐந்தாம்மண்டிலம், ஆறும்மண்டிலம், பத்தாம் மண்டிலங்களில் இடையிடையே காணலாம். இச் சிற்றுயிர்களையே யல்லாமல், தம்மை யொத்த மக்களையுங்கூட ஆரியர் கொலைபுரிந்து புருஷமேதம் செய்தமையுஞ் சதபதபிராமணத்தாற் புலனாகின்றது; கடைசி யாக ஓர்ஆண்மகனைக் கொன்று பலியூட்டினவன் சியாபர்ண சாயகாயனனே ஆவன் என்று சதபதபிராமணங் கூறுதல் காண்க.[1] இவ்வாறாகக் குடியுங் கொலையும் மலிந்த வெறியாட்டுச்சடங்குகள் கொண்டாடுவதைத் தவிர, அத் தீவினையை ஒழித்து எல்லா அருளும் உடைய ஒரு முழு முதற் கடவுளைத் தமக்கு இயன்றமட்டுமாவது வணங்குத லில் ஆரியர்க்குக் கருத்துச் செல்லாமை, அவர்கட்கு இன்றி யமையாததாகிய மீமாஞ்சை நூலாலும் நன்கு விளங்கும்; இம் மீமாஞ்சைநூல் முழுமுதற்கடவுள் என ஒன்று இல்லை என்று மறுப்பதோடு, பன்னூறு வகையவான இத்தகைய வெறியாட்டு வேள்விச் சடங்குகளை வாளா விரித்தோது தலும் யாம் கூறுவதன் உண்மையை நிலைநாட்டும். மேலும், ஆரியர் தாம் இயற்றும் இவ் வெறியாட்டு வேள்விச் சடங்கு களுக்குத் தமிழ்வேளாளர் இசையாமையை அவ்வாரியர் தாமே,

"இந்திரனே, நீ நின் துணைவருடன் சென்று நின்கையி லேந்திய குலிசப்படையாற் செல்வம்மிக்க தாசியரைத் தனியே கொல்கின்றாய்! சடங்குகள் புரியாமல், எமக்கு

1. இருக்குவேதம், க, நூந.

முன்னமே பழையராய் உள்ள அவர்கள் வான் நிலத்தினின் றும் பலமுகமாய்ச் சிதறியோடி அழிந்தார்கள்"[1] என்று இருக்குவேதத்திற் கூறுமாற்றால் அறிந்து கொள்க.

## கo வேளாளர் ஆரியரை அருவருத்து ஆரியத்தில் அறிவுநூல்கள் இயற்றினமை

கொலை புலை தவிர்ந்த அருளொழுக்கத்தில் நிலைபெற்று நிற்கும் வேளாளர், கொலை புலை கட்குடி முதலிய தீவினைகளைப் பெருக்கி ஆரியர் கொண்டாடிய வெறியாட்டு வேள்விகளில் மிக வெறுப்புக்கொண்டு அவ் வேள்விகளை அழித்தற்கும், அவை செய்வதில் உறைத்து நின்ற ஆரியரோடு போர்புரிந்து அவரை அடக்குதற்கும் முன்நின்றமை ஒரு வியப்பன்று. இங்ஙனந் தாஞ்செய்த வெறியாட்டு வேள்விகளை அழித்தமைபற்றியே அவ்வாரியர் பெரிதுஞ் சினங்கொண்டு அவ் வேளாளரையும் அவருள் அரசரான வேளிரையுந் தாசியர், இராக்கதர், அசுரர் என்று இகழ்ந்துகூறி, அவரைத் தாழ்த்துதற்பொருட்டுப் பொய்யான பல புராண கதைகளையும் எழுதிவைப்பாராயினர். ஆரியர் இங்ஙனமெல்லாம் நூல்வழியாலும் பல கொடுமைகளைச் செய்து வரவே, அவர் எழுதிய அந் நூல்களின் பொய்ம்மையும் அவர்தம் பொருந்தாச் செயலும் எல்லார்க்கும் விளக்கல் வேண்டி, அவர்க்குரிய ஆரிய மொழியைத் தமிழ்வேளாளராகிய தாமுங் கற்றுக் கொலை புலை கட்குடி மறுத்த தமதுயர்வுந், தாம் வழிபடும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரான் அருட்சிறப்பும், அவனை யடைதற்குரிய மெய்

1. சதபதபிராமணம், ரு, உ, க, கூசு.

யுணர்வின் மாட்சியுந் தெளித்து இருக்கு எசுர் சாம அதர்
வண வேதப்பாட்டுகள் சிலவும், உபநிடதங்கள் சிலவும்,
சாங்கியம், நையாயிகம், வைசேடிகம், யோகம், வேதாந்தம்
முதலிய ஐந்து மெய்யுணர்வு ஆராய்ச்சி நூல்களும், இதிகா
சங்கள் புராணங்கள் சிலவும் இயற்றியிட்டார்கள். ஆரிய
மொழியில் தமிழர் இயற்றிய இந் நூல்களிலும் பாட்டு
களிலும், உயிர்களைக் கொன்று செய்யும் வேள்விச்சடங்கு
களின் இழிபும், அவர் வணங்கிய இந்திரன் வருணன்
மித்திரன் மருத்துக்கள் முதலான சிறுதெய்வங்களின்
சிறுமையும், அவர் தம்மைத் தேவரெனச் சொல்லிக்
கொள்ளும் 'அகம்பிரமச்' செருக்குரையின் இழுக்குந்
தெரித்துக் கூறப்பட்டிருப்பதுடன், கொல்லாமை புலா
லுண்ணாமை களியாமை என்னும் அறவேள்விகளின் உயர்
வும், பிறப்பு இறப்பு இல்லாத் தனிமுதற்கடவுளான
சிவத்தின் முழுமுதற்றன்மையும், பிறந்து நோயாலுங் கவலை
யாலும் இடையிடையே மாய்ந்துபோகும் மக்கள் பிரமம்
ஆதல் செல்லாமையும், அன்பும் அருளும் மெய்யுணர்வின்
முற்றுப் பேறும் உடையராய்ச் சிவபிரான் திருவடித்
தொண்டில் இடையறாது நிற்பாரே மீண்டு வாரா வீட்டு
நெறி தலைக்கூடிச் சிவத்தோடு இரண்டறக் கலக்குமாறும்
வற்புறுத்துச் சொல்லப்படுதல் பகுத்தாராய்ந்து கொள்க.
இவ்வாறு ஆரியமொழியில் அதற்குரிய ஆரியரும் அதற்கு
வேறான தமிழறிஞரும் இயற்றிய செய்யுட்களும் நூல்களும்
ஒன்றோடொன்று விரவித் தலைமயங்கிக் கிடப்பினும்,
அவற்றுள் இவை ஆரியர் செய்தன, இவை தமிழர் செய்தன
வென்று மேற்காட்டியவாற்றாற் பகுத்துணர்ந்து கோடல்
எளிதேயாம். ஆரியர் செய்தவைகளில் ஆரியராகிய
தம்மைப் பற்றிய உயர்வும், விலங்குகளைக் கொன்று
வேட்கும் வெறியாட்டு வேள்விகளின் சிறப்பும், மயக்கந்

தரூஉஞ் சோமச்சாற்றின் பெருமையும், இந்திரன் வருணன் முதலான சிறுதெய்வ வணக்கமும், தமக்குந் தம் இழி செயல்களுக்கும் உடம்படாத தமிழர்களை இகழும் இகழுரைகளும் முழுமுதற் கடவுளாகிய சிவபிரானைப் பழிக்கும் பழிப்புரைகளும், இன்னும் இவை போன்றவை களும் மலிந்துகிடக்கும். தமிழறிஞர் செய்தவைகளில் அன்பு அருள் என்னும் உயர்ந்த நெறிகளின் மாட்சியும், வெறியாட்டு வேள்விச்சடங்குகள் பயனிலவாதல் காட்டும் அறிவுரைகளும், உலகு உயிர் இறை என்னும் இவற்றின் உண்மைத் தன்மையை ஆராயும் ஆராய்ச்சிகளும், எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் சிவம் ஒன்றே என்னும் மெய் யுரையும், பிறப்பு இறப்புக் கவலைநோய் முதலியவற்றிற் கிடந்துழலும் புல்முதல் மக்கள் தேவர் ஈறான எல்லா உயிர் களும் மாசு பொதிந்தனவாயிருத்தலின் அவை முதன்மை யிலவாதல் தெரிக்கும் உண்மையுரைகளும், அவை மலமாசு தீர்ந்து இறைவனைத் தலைக்கூடிநிற்கும் வகையாகிய தவநிலை களும், இன்னும் இவைபோல்வனவும் நிரம்பிக்கிடக்கும். இவ்விருவேறு அடையாளங்கள் கொண்டு ஆரிய மொழியில் ஆரியர் தமிழர் என்னும் இவ்விரு வேறு வகுப்பாரும் இயற்றிய செய்யுட்களையும் நூல்களையும் பிரித்து அறிந்து கொள்க.

இனி, மண் நீர் நெருப்புக் காற்று வான் என்னும் ஐம்பெரும் பொருள்களின் கலப்பாற் றோன்றிய இவ்வுலகங் களின் உள்ளும் புறம்புமாகிய எவ்விடங்களினும் இறைவன் எள்ளில் நெய்போற் கலந்து நிற்பனுயினும், மக்கள் தன்னை எளிதிற் கண்டு வழிபடுதற் பொருட்டு அவன் அனற் பிழம்பின் கண்ணே முனைத்துத் தோன்றுவன். அது

ப 'ய,

"சுடர்கின்ற கோலந், தீயே யெனமன்னு சிற்றம் பலவர்."

என்று மாணிக்கவாசகப் பெருமானும்,

"பொங்கு அழல் உருவன் பூத நாயகனால்."

என்று திருஞானசம்பந்தப் பெருமானும்,

"எரி பெருக்குவர் அவ்வெரி ஈசனது
உருவருக்கமது ஆவது உணர்கிலார்."

என்று திருநாவுக்கரசு நாயனாரும்,

"அணுவாகி ஓர் தீயுருக்கொண்டு."

என்று (திருநனிபள்ளித் தேவாரம்) சுந்தரமூர்த்தி நாயனாரும் அருளிச்செய் திருக்கின்றனர். அனற்பிழம்பு இறைவனுக்குத் திருமேனியாய் நிற்றலின் உண்மையைச் 'சிவஞானபோத ஆராய்ச்சி'யில் விரித்து விளக்கியிருக்கின்றேமாகலின் அதனை அங்கே கண்டுகொள்க. இங்ஙனந் தீப்பிழம்பும், அத் தீப்பிழம்பின் வடிவாய் வானத்தின்கட் டிகழும் ஞாயிற்றுமண்டிலமும் இறைவற்குச் சிறந்த திருமேனியாதல் கண்டு, தீயினையும் ஞாயிற்றினையும் பண்டைக் காலந்தொட்டே தமிழ்முதுமக்கள் வழிபட்டு வருகின்றனர். ஆரியரும் அங்ஙனமே அவ் விரண்டனையும் வழிபட்டு வருவரெனின்; அவர் அவற்றையே தெய்வங்களாகக் கருதி வணங்குவரல்லது, அவற்றுக்கும் மேற்பட்ட முழுமுதற்கடவுள் ஒன்று உண்டென்றும், அவ்வொன்றே அவ் விரண்டிலும் ஏனை ஒளியுடைப் பொருள்களிலும் பிறவற்றிலும் ஊடுருவி விளங்குவதென்றும் ஒருசிறிதும் உணரார்; 'தீயை வளர்ப்பர், ஆனால் அது சிவபெருமான்றன் உருவ வகைகளில் ஒன்றாதலை அவர் உணர்ந்திலர்' என மேலெடுத்துக் காட்டிய திருநாவுக்கரசு நாயனார் அருளிச்செய்த திருப்பாடலும் அறிவுறுத்துதல் காண்க. இங்ஙனமே,

"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரன்உரு அல்லனோ."

என்று அந் நாயனார் மீண்டும் அருளிச் செய்யுமாற்றால், ஞாயிற்றினை வணங்கும் ஆரியர் அஃது இறைவற்கோர் உடம்பாதலைச் சிறிதும் உணர்ந்திலரெனத் தெளிவித்தல் காண்க. ஆரியர் தீயினையும் ஞாயிற்றினையுந் தனித் தனித் தெய்வங்களாகக்கொண்டு வணங்காநிற்கத், தமிழரோ அவற்றை எல்லாம் வல்ல ஒரு முழுமுதற் கடவுளுக்குச் சிறந்த வடிவங்களாக மட்டும் வைத்து வழிபடாநிற்பர். ஆகவே, இருக்கு முதலான வேதங்களில் தீயையும் ஞாயிற்றையுந் தனித்தனித் தெய்வங்களாக வைத்து வணக்கவுரை கூறும் பாட்டுக்களெல்லாம் ஆரியராற் செய்யப்பட்டனவாகு மென்றும், அவை தம்மை இறைவன்றன் ஒளி வடிவங்களாக வைத்து வழிபடும் பாட்டுக்க ளெல்லாந் தமிழ்ச் சான்றோராற் செய்யப்பட்டனவாகு மென்றும் பகுத்துணர்ந்துகொள்க. விசுவாமித்திரர் என்னுந் தமிழரச முனிவராற் செய்து சேர்க்கப்பட்ட இருக்குவேத மூன்றும் மண்டிலத்தில் உள்ள காயத்திரி மந்திரமானது, ஞாயிற்று மண்டிலத்தின்கண் முனைத்து விளங்கும் பர்க்கன் என்னும் பெயருடைய சிவபிரான்மேற்றாய் விளங்குதலே யாம் கூறும் உண்மைக்குச் சான்றாம் என்க.

இவ்வாறாக, ஆரியரைத் திருத்தும் பொருட்டுத், தமிழ்ச்சான்றோர் அவரோ டுடன்பழகி அவர்தம் ஆரிய மொழியையுங் கற்று, அவர் வணங்கிய தீயும் ஞாயிறும் என்னும் இரண்டின் வழியே சிவபிரானை வழிபடும் உயர்ந்த நெறியை அவர்க்கு உய்த்துணரவைத்துக் காட்டியும், அவ்வாரியர் அதிற் கருத்தில்லாதவராய், விலங்கினங்களைக் கொன்று அவற்றின் ஊனைத் தின்னும் வெறியாட்டு வேள்விகள் புரிவதிலேயே முயற்சியுங் கருத்தும் உடையராய் நின்றனர் உயர்ந்த நுண்பொருள் உணர்ச்சியில் அவர்க்கு உள்ளஞ் செல்லாமையைக் கண்ட தமிழ்ச்சான்றோர்

எப்படியாவது அவரை உய்விக்கவேண்டுமென எண்ணி, அவர்தங் கொடுந்தன்மைக் கேற்றதாக ஓர் உயர்ந்த கடவுள் வணக்கத்தை நிலைபெறுத்துவான் வேண்டிச் 'சீகண்ட உருத்திரர்' மேற் சில பதிகங்களுஞ் சில வழுத்துரைகளும் இயற்றி அவற்றையுஞ் சேர்த்து இருக்குவேதத்தை ஒழுங்கு படுத்தினர். 'சீகண்டஉருத்திரர்' நான்முகன் திருமால் காலருத்திரர் என்னும் மூவர்க்கும், இந்திரன் வருணன் மித்திரன் முதலான ஏனைத் தேவர்கட்கும் மேற்பட்டவ ராய்ச், சைவசமயத்தவரால் வணங்கப்படும் முதற்பெருந் தெய்வமாய் இருத்தலின், அவரை வணங்குதற்குப் புகுந்த [illegible]யர் [illegible] [illegible] [illegible]தெய்வவழிபாட்டையும உயிர்க்கொலையையும் விட்டுப் பையப் பையத் தமது தமிழ்க் கொள்கையைத் தழுவுவரெனத் தமிழ்ச் சான்றோர் எண்ணி னார். எண்ணியும், இவையெல்லாஞ் செய்துவைத்தும் என்! ஆரியர் இன்றுவரையிற் றமது சிறுதெய்வ வழிபாட்டை விட்டவர் அல்லர். இன்னும் உற்றுநோக்கின், அவர் அச் சிறுதெய்வ வழிபாட்டினுந் தாழ்ந்த மக்கள் வழிபாட்டிலே இப்போதும் மிகுதியாய் இறங்கிவிட்டனர்; இராமன், கண்ணன் முதலான அரசர்களையே மிக வணங்குவதோடு, "தம்மின்வேறாகக் கடவுள் ஒன்றில்லை, தாமே கடவுள்," என்னும் ஒரு பொல்லாத கொள்கையையும் விடாப்பிடி யாய்க் கைக்கொண்டு ஒழுகி வருகின்றார்கள். அதுமட்டுமோ, சீகண்ட உருத்திரரையுஞ் சூத்திரர்க்குரிய சூத்திரதெய்வ மென ஒதுக்கிவைத்துவிட்டார்கள்!

## ௧௧. மாயாவாதி ஒருவர் உருத்திரவழிபாடு தமிழரதன்று என்றது பொருந்தாமை

உண்மை யிவ்வாறிருக்க, 'எல்லாம் பொய் நானே கடவுள்' என்னும் மாயாவாதக் கொள்கையுடைய தமிழர் ஒருவர், உருத்திர வழிபாடு ஆரியர்க்கே உரியதெனவும், அதனை ஆரியரே தமிழர்க்குக் கற்பித்தாரெனவும், இந்திர வருண வழிபாடுகளையே ஆரியர் தமிழரிடமிருந்து பழகிக் கொண்டாரெனவுஞ் சான்றுகள் காட்டாது தமக்குத் தோன்றியவாறே கூறினர். உருத்திரவழிபாடு ஆரியர்க்கே உரியதாயின், இருக்குவேதத்திலுள்ள முழுத்தொகைப் பதிகங்கள் ஆயிரத்து இருபத்தெட்டில் இருநூற்றைம்பது பதிகங்கள் இந்திரன்மேலும், இருநூறு பதிகங்கள் அக்கினி மேலும், நூறு பதிகங்கள் சோமப்பூண்டு சோமபானத்தின் மேலும், ஏனைய ஏனைத்தேவர்கள் மேலுமாக, அவற்றுள் மூன்று நான்கு பதிகங்களே 'உருத்திரர்' மேலனவாய் இருத்தல் என்னை? உருத்திரர்மேல் மூன்று நான்கு பதிகங்கள் அல்ல, எத்தனையோ பல இருக்கு வேதத்தில் உள்ளனவென்று கூறும் அவர் அப் பதிகங்கள் இவ்விவை யென எடுத்துக்காட்டாமையே அவரது கூற்று உண்மை யன்றென்பதனை நன்கு புலப்படுத்தும். ஏனைத் தேவர்கள் மேல், முதன்மையாய் அக்கினிமேற், பாடப்படும் பதிகங்களில் இடையிடையே சிற்சில இடங்களில் உருத்திரப் பெயர் வருமாயினும், ஆண்டது அக்கினியையும் உருத்திரகணங் களையும், ஒரோவழிச் சிகண்டருத்திரரையுங் குறியாநிற்கும். அவையெல்லாந் தமிழ்ச் சான்றோராற் சேர்க்கப்பட்டனவே யாம்.

இன்னும், உருத்திரவழிபாடு ஆரியர்க்கே உரியதாயின் வடநாடு தென்னாடுகளில் அவ் வேதங்களை நன்கு கற்

றுணர்ந்த ஆரியப் பார்ப்பனர் அனைவரும்.
ரூத்திர தெய்வமென வழிபடாமல் ஒதுக்கி, இராமன் கண்ணன் நாராயணன் முதலான ஏனையோரையே வழிபடு தல் என்னை? தென்னாட்டில் உள்ள தமிழர் அவ் வழிபாட் டிற்கு உரியரல்லராயின், அவர் தென்னாடெங்கணும் பல்லா யிரந் திருக்கோயில்கள் பண்டுதொட்டு அமைத்து அவற்றின் கண் அவ்வுருத்திரனை வழிபட்டுவருத லென்னை? இந்திரன் வருணன் முதலான சிறு தெய்வ வணக்கமே தமிழர்க்கு உரியதாயின், தமிழ்நாட்டில் ஓரிடத்தேனும் அத் தெய்வங் களுக்குத் தனிக்கோயில்கள் இல்லாமையும், அவற்றை அவர் வணங்காமையும் என்னை? பண்டைநாட் டொட்டுத் தமிழ் மேன்மக்கள் சிவபிரானையே வழிபட்டு வந்தனர் என் பதற்குக், குமரிநாடு கடல் கொள்ளப்படுமுன் பாடப்பட்ட தாகிய தமிழ்ச் செய்யுள் ஒன்றில்,

"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே."[1]

எனப் போந்த குறிப்பும், அந்நாள் முதல் இந்நாள் காறும் ஒரு தொடர்பாகப் போதருகின்ற சிவ வணக்கச் செய்யுட் களுஞ், சிவபிரான் திருக்கோயில்கள் திருவிழாக்கள் முதலி யவற்றின் மாட்சியும் நன்கு சான்றுபகர்கின்றனவல்லவோ? சிவபிரானோடு ஒப்பவைத்து ஏனைச் சிறு தெய்வங்களைத் தமிழ் மேன்மக்கள் வழிபட்டு வந்தனர் என்பதற்கு ஒரு தினையளவு சான்றும் இல்லாதிருக்கத், தாம் தமிழரது வழி பாட்டை முற்று முணர்ந்தார்போற் செருக்கிப் பொய்யுரை கூறித் தமிழரை இழித்துரைக்கப் புகுந்தது அறிவுடையா ரால் நகையாடி விடுக்கற் பாலதாமன்றி மற்றென்னை? அற்றேற், காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்கு விழா எடுத்தமையும், நெய்தல்நில மக்கள் வருணனை வழிபடுத

1. புறநானூறு, ௬.

னும் பழைய தமிழ்நூல்களிற் காணப்படுதல் என்னை யெனின்; மழைவேண்டியுங் கடல் நீரால் இடர்நேராமைப் பொருட்டும் இந்திரனையும் வருணனையும் மருதநில நெய்தல் நில மக்கள் வணங்கும் வணக்கம் அவ்வந் நிலத்துக் குடிமக்களாற் செய்யப்படுவ தல்லது, தமிழ் நிலத்துள்ள எல்லா மக்களும் அவருள் உயர்ந்தாருஞ் செய்வதொன்றன்று. இஞ்ஞான்றும் இழிந்தாரான தமிழ்க் குடிமக்கள் செய்யும் மாரி மதுரைவீரன் முதலான சிறுதெய்வ வணக்கத்தை மட்டுங் கண்டு, ஆங்காங்குள்ள சிவபிரான் திருக்கோயில் களையும் அவற்றின்கட் டமிழ் மேன்மக்கள் செய்து போதரும் வழிபாடுகளையுங் காணப்பெறாத வேற்றுநாட்டார் ஒருவர் தமிழர்க்குரியது இழிந்த சிறுதெய்வ வணக்கமே என்று கூறிடுவராயின், தமிழ்மேன்மக்கள் அவரது மடமைக்கிரங்கி அவரை நகையாதொழிவரோ? இங்ஙனமே பண்டைத் தமிழ் மேன்மக்களை இழித்துரைக்கும் இப் போலித்தமிழர் கூற்றும் நகையாடி விடுக்கற் பாலதாம் என்க. பண்டைநாளில் தமிழ்மக்களால் வணங்கப்பட்ட தெய்வங்களுள்ளுஞ், அத தெய்வஙகள் உறையுங் கோயில்க ளுள்ளுஞ் சிவபிரானும் அவனுறையுந் திருக்கோயிலுமே முதன்மையாக வைக்கப்பட்ட உண்மைக்குப்,

> "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
> அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
> வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
> நீலமேனி நெடியோன் கோயிலும்
> மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்."

எனச் சிலப்பதிகாரத்திற்[1] சிவபிரான் கோயில் முதலிலும், இந்திரன் கோயில் கடையிலுங் கூறப்பட்டிருத்தலே சான்றும். இதனோடு ஒப்பவே மணிமேகலையிலும்,

1. ந்திரன காதை, ௧௬௯—௧௭௩.

> "நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
> பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக."[1]

என்று சிவபிரானை முழுமுதற் கடவுளாக முதற்கண் வைத்து ஓதப்பட்டிருத்தல் காண்க.

அஃதொக்கும், இந்திரன் வருணன் முதலான ஆரியர்க்குரிய தெய்வங்களைப் பண்டைக் காலத்திலேயே தமிழ் மக்களும் வணங்கலாயினது என்னையெனின்; ஆரியர் வணங்கிய இந்திரனுந் தமிழர் வணங்கிய இந்திரனும் ஒருவர் அல்லர். ஆரியர்க்குரிய இந்திரன் இடி மழை மின்னல் முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர்தம் பகைவரோடு போராடுங்கால் அவர்க்கு உதவியுந்துணையுமாய் நின்று அவர்க்கு வெற்றியைத் தருபவனாகவும், அவர்தருஞ் சோமச் சாற்றையும் விலங்கி னிறைச்சியையும் நிறைய உட்கொண்டு அவர் வேண்டிய நலங்களையெல்லாம் அவர்க்கு விளைப்பவனாகவுஞ் சொல்லப்படுகின்றான். தமிழர் வணங்கிய இந்திரனோ வயலும் வயல்சார்ந்த இடமுமாகிய மருதநிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டும் வேண்டி வணங்கப்பட்ட மழைக்கடவுள் ஆவன்; மழையின் பொருட்டாகவன்றி வேறெந்த நன்மைப் பேற்றின் பொருட்டாகவேனுந் தமிழர்களால் அவன் வணங்கப்பட்டவன் அல்லன். இருக்கு வேதத்திலுள்ள பாட்டுகளில் மூன்றில் ஒருகூறு இந்திரன்மேற் செய்யப்பட்டிருத்தல் போலத், தமிழ்நூல்களில் எங்கும் ஒரு பாட்டேனும் இந்திரன்மேற் செய்யப்படவில்லை. பழந்தமிழ் நூல்களில் உள்ள வணக்கச் செய்யுட்களெல்லாஞ் சிவபிரான்மேலும் முருகக்கடவுள் திருமால் காடுகிழாள் முதலான ஏனைச் சில தெய்வஙகண ம பாடப படடனவாய ன. அதுவேயுமன்றித், தொல்காப்பியம் முதலான மிகப்பழைய

1. மணிமேகலை, விழாவறை காதை, ௫௪ - ௫௫.

தமிழ்நூல்களில் 'இந்திரன்' என்னுஞ் சொல்லே காணப் படவில்லை. மருதநிலத்து மக்களாற் கொண்டாடப்படுந் தெய்வம் 'வேந்தன்' என்று சொல்லப்படுகின்றது; "வேந் தன்மேய தீம்புனல் உலகமும்"[1] என்று ஆசிரியர் தொல் காப்பியனார் கூறுதல் காண்க. தமிழர் மழை வணங்கிய 'வேந்தனும்' ஆரியர் மழையின் பொருட்டாக வும் வணங்கிய 'இந்திரனும்' மழைக்கடவுளாதல் பற்றிப் பிற்காலத்தவரால் அவ் விருவரும் ஒருவராகக் கொள்ளப் படுவாராயினர்; அவ்வாறு கொள்ளப்படினுந் தமிழர்க்குரிய வேந்தனுக்கும், இருக்குவேத ஆரியர்க்குரிய இந்திரனுக்கும் ஏதோர் இயைபும் இல்லையென்பது அவ் விருவர்தம் பழைய நூல்களையும் நன்காராய்ந்து பார்க்கும் நடுநிலையாளர்க்கும் நன்குவிளங்கும். பிற்காலத்துப் புராண நூல்களிற் சொல் லப்படும் இந்திரனுக்கும் இருக்குவேதத்திற் சொல்லப்படும் இந்திரனுக்குங் கூடச் சிற்சில வகைகளிற் றவிர மற்றப் பல வகைகளில் ஏதோர் ஒற்றுமையும் இல்லை. உற்று ஆராயுங் கால் தமிழர்க்குரிய 'வேந்தன்' என்போன், தமிழர்க்குள் முதன்முதற் றலைவனுய்த் தோன்றி, மழைபெய்யுங் கால மும், அம் மழையினுதவியாற் பயிர் செய்தற்கேற்ற வளவிய நிலமும், அந் நிலத்தைத் திருத்திச் செவ்வனே பயிர் விளைக்கும் வகைகளும் நன்குணர்ந்து உழவுதொழிலைக் கற்பித்துத் தமிழ்மக்களை மேல்நிலைக்குக் கொணர்ந்தவனு தல் வேண்டுமென்பது புலப்படும். நன்றிசெய்த முன் னோரை நினைந்து அவர்களைப் பரவுதல் தமிழர்க்கு இயற்கை யாதலால், அவர் கால்வழியில் வந்த மருதநிலத்து உழவர் முதல்வேந்தனை அவனது ஆவியை வேண்டி வணங்குவா ரானர் என்க. மருத நிலத்தின்கண்ணேதான் அரசனும் அரச வாழ்க்கையும் அவனது அரண்மனை வாய்ந்த நகரமும்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், ரு.

இருந்தமை பண்டைத் தமிழ்நாட்டு வழக்கு என்பதனையும் மேலே காட்டினும். அங்ஙனந் தமிழர் தம் முதல்வேந்தனை வணங்கினும் அவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டிலர் என்பது யாம் மேலே காட்டியவாற்றால் நன்கு புலனும்.

இனி, ஆரியர் வணங்கிய 'வருணனும்' வேறு, தமிழர் வணங்கிய 'வருணனும்' வேறு. ஆரியர்க்குரிய 'வருணன்' வானின் தெய்வமாக இந்திரனோடு ஒப்பவைத்துச் சிறந்தெடுத்து அவரால் வணங்கப்படுவோன் ஆவன்; இருக்கு வேதத்தில் இவன்மேற் பாடப்பட்ட பதிகங்கள் பல. தமிழர்க்குரிய வருணனோ தமிழருட், கடலுங் கடல் சார்ந்த இடமுமாகிய நெய்தல் நிலத்திலுள்ள மக்களால் மட்டுங் கடற்றெய்வமாக வைத்து வணங்கப்படுபவன் ஆவன். இருக்குவேதத்திலுள்ள 'வருணன்' கடற்றெய்வமாக ஒரோவொருகால் அருகிச் சொல்லப்படினும், பிற்காலத்துப் புராணங்களிற் சொல்லப்படும் வருணனுக்கும் இருக்குவேத வருணனுக்கும் ஏதோர் இயைபுங் கண்டிலேம். தமிழ வருணனும், ஆரிய வருணனுஞ் சொல்லால் ஒத்தல்பற்றி அவ் விருவரையும் ஒருவரென்றல் ஆராய்ந்துணராதார் கூற்றும். தமிழரில் நெய்தல்நில மாக்கள் வருணனை வணங்குதல் தமக்கு வலைவளம் வாய்த்தற் பொருட்டுங், கடல் மேற்செல்லுந் தமக்குத் தீங்குநேராமைப் பொருட்டுமே யாம். இத்துணையே யன்றித் தமிழரில் ஏனையோர் வருணனை ஒரு பெருந்தெய்வமாக வைத்து வழிபட்டவர் அல்லர். அவ் வருணனுக்குத் தனிக்கோயில்களாதல், அவனை வழுத்திய பாடல்களாதல் தமிழ்நாட்டினுந் தமிழ் மொழியினும் இல்லை ஆகையால், ஆரியர் தமக்குரிய பெருந்தெய்வங்களாக வைத்துப் பலவாற்றானுங் கொண்டாடிய இந்திர வருண வழிபாடுகளை, அங்ஙனம் அவற்றைக் கொள்ளாத தமிழர்களிடமிருந்து கற்றுக்கொண்டார்க

ளென்பதூஉம், தமிழர்களில் ஒவ்வொரு நிலத்து மக்கள் வணங்கிய வேந்தனும் வருணனும், ஆரியர் எல்லாரும் வணங்கிய இந்திரனும் வருணனுந் தம்மிற் பெரிதும் வேறுபாடுடையராயிருப்ப, அவ் விருவரும் ஒரு திறத்தினரேயா மெனக் கூறுதலும் பகுத்துணர்வில்லாதார் கூறும் போலி யுரையாமென்று தெளிக.

இனி, ஆரியர் தமிழரோடு கலந்தபின் அவர்க்குரிய இந்திர வருண வழிபாடுகளைத் தாம் கற்றுந், தமக்குரிய உருத்திர வழிபாட்டை அவர்க்குக் கற்றுக்கொடுத்தும் வந்தது உண்மையாயின், தமிழர் இருந்த இவ் விந்தியநாட்டுக்குள் வராமல், அதற்குப் புறம்பே தம்மினத்தவரான பாரசிகர் கிரேக்கர் முதலியோருடன் ஆரியர் அயல் நாடுகளிற் குடியிருந்த அக் காலத்தில் அவரெல்லாருமாய்ச் செய்தது உருத்திரவழிபாடா யிருத்தல் வேண்டும்; தமிழர்க்குரியதாயின் இந்திரவருண வழிபாட்டைப், புறம்பேயிருந்த அவ்வாரிய வகுப்பினர் அந் நாளிற் சிறிதும் அறியாராயிருத்தலும் வேண்டும். மற்று, அவ்வாரிய வகுப்பினரான பண்டைப் பாரசீகரின் அவஸ்தா என்னும் நூலையுங், கிரேக்கருடைய பழைய நூல்களையும் ஆராய்ந்து பார்ப்பின் அவற்றின்கண் உருத்திர வழிபாடு ஒருசிறிதுங் காணப்படாமையின், அவ் வழிபாடு பண்டை யாரியர்க்கே உரியதென்பார் உரை பெரும் பிழைபாட்டுரையேயாம். இன்னும், இந்திரனுக்கும் வருணனுக்கும் உரிய பெயர்களாக இருக்குவேதத்தில் வழங்கும் 'விருத்திரகன்,' 'அசுரன்' என்னுஞ் சொற்கள், பாரசிகர்க்குரிய பழைய வேதமாகிய அவஸ்தா என்னும் நூலிற் காணப்படுவதோடு, 'வருணன்' என்னுஞ் சொல்லுஞ் சிறிது திரிபோடு கிரேக்கருடைய பழைய நூல்களிலும் வழங்குகின்றது. இங்ஙனமே ஆரியரெல்லார்க்கும் பொதுவாக உரிய தெய்வங்கள், பழக்க

வழக்கங்கள் முதலியவற்றின் பெயர்கள் இருக்குவேத ஆரியர்க்கும் பாரசிகர் முதலான பழைய ஆரியவகுப்பினர்க்கும் பொதுவாயிருத்தல் கண்டுகொள்க. அவையெல்லாம் ஈண்டெடுத்துரைப்பின் இது மிக விரியும். இங்கே காட்டினவை கொண்டு இருக்குவேதத்திற் சொல்லப்பட்ட இந்திர வருண வழிபாடுகள் ஆரியர்க்கே உரியனவாமென்றும், அதில் இடையிடையே புகுத்தப்பட்ட உருத்திரவழிபாடு தொன்றுதொட்டுத் தமிழ் நன்மக்கட்கே உரியதாமென்றும் பகுத்துணர்ந்துகொள்க.

## கஉ. நடுநிலையுடைய ஐரோப்பிய ஆசிரியர் உருத்திரவழிபாடு தமிழரதென்றமை

இக் கோட்பாடு யாம் மட்டும் புதிதாகக் கூறுவதன்று, வடமொழி நூல்களை நடுநிலைமையோடு எழுத்தெண்ணிக் கற்று அவற்றின்கண் நிகரற்ற புலமையுடையராய் விளங்கும் ஐரோப்பிய அறிஞரும், ஆரிய வேதங்களின் இடையிடையே காணப்படும் உருத்திர வழிபாடு சிவவழிபாடுகள் பண்டு தொட்டு ஆரியர்க்கு உரியன அல்லவென்றும், அவை தமிழர்பால் நின்றும் ஆரியர் கைக்கொண்டனவா மென்றும், இந்திரவருண வழிபாடுகளே ஆரியர்க்கு உண்மையில் உரியனவாமென்றும் நடுநிலைபிறழாமல் உண்மையை உள்ளவாறே ஆராய்ந்து காட்டி விளக்கியிருக்கின்றார்கள். அவையெல்லாம் ஈண்டு எடுத்துக் காட்டலுறின் இது மிகவிரியும். [1]மாக்ஸ்மூலர், மியூர், டெய்லர், வீபர், ராகொசின், கிரிபித் மாக்டனல் முதலான மிகச் சிறந்த வடநூற் புலவர்கள்

1. Max Muller, Muir, Taylor, Weber, Ragozin, Griffith, Macdonell,

எழுதியிருக்கும் அரும்பெரு நூல்களில் பரப்பைக் கண்டுகொள்க.

இவ்வைரோப்பிய அறிஞர்க்குள்ள ஆராய்ச்சித்திறத்தி லும் வடமொழிப் புலமையிலும் நூறுயிரத்து ஒருசிறு கூறேனும் வாய்ப்பப் பெறுதார் தாமுந் தமது அறியா மையையே அறிவாகப் பிழைபடக் கருதி அவ் வைரோப்பியர் செய்த ஆராய்ச்சிகளையெல்லாம் பிழையென எளிதாகச் சொல்லிவிடுவர். இவ் இந்தியநாட்டிற் பிறந்து, ஒவ்வொரு கோட்பாட்டிற் குரியராய், ஏனைக் கோட்பாடுகளை முற்றும் இகழ்ந்து, ஏனையோர் கூறுவனவற்றை நடுவுநின்று ஆராய்ந்து உண்மை கண்டறியும் வேட்கையிலராய்த், தாந் தாம் பிடித்ததனையே நிலைநாட்டும் பொய்ப்பற்று உடைய நம் இந்தியநாட்டுப் புலவர்களிற் பெரும்பாலார் ஆரிய வேதங்கள் உபநிடதங்கள் முதலியவற்றின் பொருள்களை நடுநின்று கண்டு உண்மையை உள்ளவாறு உரைக்கும் நீரர் அல்லர். ஆரிய வேதங்களுக்குச் சொற்பொருள்களும் உரைகளும் எழுதிய யாஸ்கர், சாயனர், மகீதரர், அங்வுதர் முதலியோரும், உடநிடதஙகள் வேதாந்த சூத்திரங்கள் முதலியவற்றிற்கு உரைகள் எழுதிய நீலகண்டர், சங்கரர், இராமாநுஜர், மத்வர் முதலியோரும், பிற்காலத்தில் இவை தமக்கு உரைகளும் விளக்கங்களும் வரைந்த தயாநந்த சரசுவதி, ராசாராம் மோகன்ராய் முதலியோருந் தாந் தாம் உரைவகுத்தற் கெடுத்த நூற்பொருள்களை நடுநின்று ஆராய்ந்துகண்டு கூறுமல், தாந்தாம் வேண்டிய பொருள் களை நுழைத்து, ஒருவரோடொருவர் பெரிதும் மாறு கொண்டு உரையுரைத்தலைச் சிறிது ஆராய்ச்சியுடையாரும் நன்கு உணர்ந்துகொள்வர்.

நிலன்நூல், வான்நூல், மொழிநூல், உயிர்களின் தோற்றவளர்ச்சிநூல், மக்கட்டோற்றநூல், மனநூல் முத

லான பல்வகை நூலுணர்ச்சியினும் ஒப்புயர்வில்லாப் புலமையுடையராய் விளங்கும் ஐரோப்பிய அமெரிக்க அறிஞர்களில் வடமொழியையும் ஆராய்ந்து உண்மை காணப் புகுந்த புலவர்களே, நம் இந்திய உரைகாரரைவிட அம் மொழி நூற் பொருள்களின் உண்மையை உள்ளவா றறிந்து உரைக்கும் நீரராவர். இவ் விருதிறத்தார் உரை களையும் ஒத்துநோக்கிப் பயில்வார்க்கே யாம் கூறுவதன் உண்மை விளங்கும். 'யாமே பிரமமாதலால் எம்மிடத்தே எல்லா நூலுணர்ச்சியும் உள்ளன; யாம் பிறர் நூல்களை உணர்தல் வேண்டாம்' என்று கூறித் தமதறியாமையையே அறிவெனக் கருதி இறுமாந்திருப்பார்க்கு எத்துணை உயர்ந்த அறிவுநூலும் வேண்டப்படுவதில்லை. அத்தன்மையி னார்க்கு யாம் கூறும் உண்மையுரைகள் ஏறுவாதலால், அவரைவிடுத்து ஏனை அறிவுவேட்கையுடையார் பொருட்டே யாம் இஃது எழுதவேண்டிற் றென்க. இங்ஙனம் யாம் எழுதியது கொண்டு ஐரோப்பிய அமெரிக்க அறிஞரே இத் தகைய ஆராய்ச்சியிற் சிறிதும் பிழைபடுதல் இல்லாதவர் என்று கொள்ளற்க. அவர் வடமொழியையும் வடமொழி நூல்களையும் ஆராய்ந்த அளவுக்குப் பழைய செந்தமிழ் மொழியையும் அதில் எழுதப்பட்ட நூல்களையும் நன்கா ராய்ந்து பாராமையால், தமிழரின் பண்டை வழக்க வொழுக்கங்களையுங் கடவுள்வழிபாட்டினையும் ஒரோ விடத்து இகழ்ந்து கூறியும் பிழைபடுவர். ஆயினும், அது பற்றி அவர் இகழப்படார். ஏனெனின், நம் இந்தியநாட்டுப் புலவர்போற், செருக்கும் பொய்ப்பற்றும் உடையராய் நூற்பொருள்களைத் தத்தமக்கு வேண்டியவாறே திரித்து உரையாமல், அவ் அறிஞர் தாம் செய்யும் நடுநிலை ஆராய்ச்சி யில் தாம் அறிந்தவற்றை அறிந்தவாறே திறப்பாக வெளி யிட்டு உண்மைவளர்ச்சிக்கு இடஞ்செய்தலான் என்க.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப் பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்று தெய்வத் திருக்குறள் கட்டளையிடுமாறே, வெள்ளைக்காரரேனும் இந்தியரேனுங் கூறுவனவற்றை நடுநின்று ஆராய்ந்து எவர் கூற்றில் எஃது உண்மையோ அதனைக் கைக்கொள்ள வேண்டு வதாயிருக்கப், பல்வகை நுண்ணிய ஆராய்ச்சியிலுஞ் சிறந்து விளங்கிவரும் வெள்ளைக்காரர் கூறும் உறுதிப்பொருள்களை இகழ்ந்து, அவருடைய ஆராய்ச்சியிலும் அறிவிலும் ஒரு தினையளவுகூட இல்லாத நம் இந்திய மக்களிற் பெரும் பாலார் தம்மைத் தாம் உயர்த்துரைத்தல், "கூவல் ஆமை குரைகடல் ஆமையைக், கூவலோடு ஒக்குமோ கடல்" என்று கூறுதற்கே ஒப்பாம்.

இந்தியர் கல்லை வணங்குகின்றார்களென்று வெள்ளைக் காரர் அவரது கடவுள்வழிபாட்டை இழித்துரைப்பதாக மாயாவாதியார் கூறினார்; வெள்ளைக்காரர் எல்லாரும் அங்ஙனம் இகழ்ந்து கூறுபவர் அல்லர். மாக்ஸ்மூலர் பல இடங்களில் இந்தியர் கல்முதலிய திருவுருவங்களிற் செய்யும் வழிபாட்டின் கருத்தையும் மேன்மையையும் நன்கு விளக்கியிருக்கின்றனர்.[1] அமெரிக்காவிற் பேரறிஞராய் விளங்கிய உவில்லியம் ஜேம்ஸ் என்பவர் திருக்கோயில் வழி பாட்டின் இன்றியமையாமையை வற்புறுத்திப் பேசி இருக் கின்றார்.[2] ஆதலால், இம் மாயாவாதியார் கூற்று வெறும் பொய்யேயாம். இம் மாயாவாதியாராற் கொண்டாடப்படுந் தயாநந்த சரசுவதி சுவாமிகள் நம்மனோர் பண்டுதொட்டுச் செய்துபோதருந் திருவுருவ வழிபாட்டைப் பெரிதும்

1. Prof. Max Muller's 'Six Systems of Indian Philosophy,' p. 216.

2. Prof. W. James' 'The Varieties of Religious Experience,' Lecture XIX.

இகழ்ந்து ஒதுக்கவில்லையா? தயாநந்த சரசுவதி வட மொழியில் வல்லரேனுந், தமிழ்நூல் உணர்ச்சி யில்லாதவ ராகலின், தம்முடைய கோட்பாட்டுக்கு இணங்க இருக்கு வேதப் பாட்டுகள் பலவற்றின் உண்மைக் கருத்தைத் திரித்துத் தாம் வேண்டியவாறே அவற்றிற்கு உரைகள் எழுதினர்; அவர் தமிழராற் செய்யப்பட்ட வடமொழிச் சாங்கியநூல் உணர்ச்சிகொண்டு சைவசித்தாந்தத்தோடு ஒத்த கோட்பாடுகளைக் கண்டறிந்து, சங்கராசிரியர் கட்டிய 'மாயாவாத வேதாந்தத்தைத்' தகர்த்தெறிந்த பேரறிஞரே யாயினுந், தமிழ் நூலுணர்ச்சியுந் தமிழரின் நுண்ணறிவு விழுப்பமும் அறியாதவராகலின் ஒரோ விடங்களிற் சைவ சித்தாந்தத்திற்கு ஒவ்வாதவற்றையுங் கூறி இழுக்குவர். ஆதலால், தயாநந்த சரசுவதிசுவாமிகள் கூறுவனவெல் லாம் ஆராயாமற் கைக்கொள்ளற்பாலன அல்ல.

இனிப், 'பிரம சமாசத்தைத்' தோற்றுவித்த ராசாராம் மோகன்ராய் என்பவர் வடமொழிநூல்களில் மிக வல்லுநரா யிருந்துந், தமிழ் நூலறிவு பெறாதவராகலின், அவரும் நம்ம னோர் செய்யுந் திருவுருவ வழிபாட்டை இகழ்ந்தொதுக்க வில்லையா? நம் இந்திய நாட்டவரிலேயே இங்ஙனம் நாம் செய்யுந் திருவுருவ வழிபாட்டை இகழ்பவர் பலராயிருக்க, வெள்ளைக்கார அறிஞரே அதனை யிகழ்பவர் என்று அவர் மேற் பழிசுமத்துவது பெரிதும் ஏதமாமென்க. எனவே, பல்வகை நூல் உணர்ச்சியிலும் மிக்காராய், அவ் வுணர்ச்சி வலியால் உலகத்திற்குப் பல அரும்பெரு நன்மைகளை விளைத்துவரும் வெள்ளைக்கார அறிஞரின் நடுநிலையாராய்ச்சி யுரைகள் நம்மனோராற் பெரிதுங் கைக்கொள்ளத் தகுவ னவே யல்லாமல் இகழ்ந் தொதுக்கற்பாலனவல்ல வென்று கடைப்பிடிக்க.

---

## ௧௩. உருத்திரனிலுஞ் சிறந்த சிவத்தைத் தமிழர் மறைத்து வைத்தமை

இனி, உருத்திர வழிபாட்டினுஞ் சிறந்த சிவ வழிபாட்டைத் தமிழ்நன்மக்கள் இருக்குவேதத்தின்கட் புகுத்துச் சொல்லாமை என்னையெனின்; உயிர்க்கொலையாகிய கொடுஞ் செயலைப் புரிந்து, அதற்கேற்ற இந்திரன் வருணன் மருத்துக்கள் முதலான கொடிய சிறு தெய்வங்களை வணங்கி வெறியாட்டு வேள்விகள் புரிந்துவருவாரான ஆரியர்க்கு, அன்பும் அருளும் இன்பமுமே உருவான சிவத்தின் வழிபாட்டைக் கற்பித்தால் அதில் அவர்க்குக் கருத்துச் செல்லாது. அதுபற்றியே அம் முழுமுதற் கடவுள் வணக்கத்தை ஆண்டுச் சொல்லாமல், அக் கடவுள் அருள்வழி நின்று அழித்தற்றொழிலைச் செய்வாரான சீகண்ட உருத்திரரின் வணக்கத்தை மட்டும் ஆண்டுச் சேர்த்தார்கள். அவரவர்தம் மனநிலையும் அறிவுநிலையும் அறிந்து அவ்வவற்றிற்குத் தக்கதாக மெய்ப்பொருள்களைப் படிப்படியாக அறிவுறுத்தி, அவரவரை அவ்வாற்றான் மேனிலைக்குக் கொண்டு வருதலே மெய்யுணர்வுடைய தமிழ்ச்சான்றோர் கோட்பாடு. இம் முறையால், இந்திரன் வருணன் முதலிய ஏனைக் கடவுளர் எல்லாரினும் உயர்ந்த சீகண்ட உருத்திரரை வணங்குவார் அதனால் மெய்யுணர்வு பிறந்து, அவர்க்குமேற்பட்ட மகேசுவரர் சதாசிவரை வழிபட்டு, அதன்பின் மலமாசு தீர்ந்து, அவர்க்கு மேற்பட்ட முழுமுதற் கடவுளாகிய சிவத்தினைத் தலைக்கூடி அழியாப் பேரின்பத்தில் வைகுவர். இப் படிவழிமுறைதான் சைவசித்தாந்தத்தால் உணர்த்தப்பட்டதாகும். சீகண்ட உருத்திரர் சைவசமயத்தவரால் வணங்கப் படுபவரேனும், அவர் சைவசித்தாந்த முடிபொருளாய் உள்ள முழுமுதற் கடவுளாகிய சிவம்

அல்லர். இவ்வுண்மை சிவஞானமாபாடியத்திலுங் காண்க. இருக்குவேதப் பாட்டுகளில் மிகப் பழையனவற்றிற்குரிய பழைய ஆரியர்க்குக் கற்பிக்கப்பட்ட உருத்திரர் சீகண்ட உருத்திரரே யல்லாமற் சிவபெருமான் அல்லர் என்பதற்கு, அவர்மேற் பாடப்பட்ட பழைய இருக்குவேதப் பாட்டுகளில் எங்கும் அவர்க்குச் சிவன் என்னும் பெயர் சொல்லப்படா மையே சான்றும். அப் பழைய ஆரியர் தாழ்ந்த மனநிலை யுடையரா யிருந்தமையின், அவர்க்கு அறிவுறுத்தப் புகுந்த தமிழ்ச்சான்றோர் சீகண்டருத்திரர்க்கு மேற்பட்ட கடவுள் நிலையை உணர்த்துதற்கு ஒருப்பட்டிலர். சீகண்டருத்தி ரர்க்கு மேற்பட்ட 'மகேசுவரர்' 'சதாசிவர்' முதலிய தலைமைக் கடவுளரை யாதல், அவர்க்கும் மேற்பட்டு எப் பொருளுங்கடந்து நிற்குஞ் சிவத்தையாதல் இருக்குவேதப் பழம்பாட்டுகள் சிறிதும் உரையாமையே இதற்குச் சான்றும் எனக.

அற்றன்று, இருக்குவேத காலத்திருந்த தமிழர் உருத் திரர்க்கு மேற்பட்டுச் சிவம் என்பதொன்று உண்டென்ப தனை அறியார் எனக் கொள்ளாமோ வெனின்; இருக்கு வேத ஏழாம் மண்டிலத்தின்கண் உள்ள இருபத்தோராவது பதிகத்திலும், பத்தாம் மண்டிலத்தின்கண் உள்ள தொண்ணூற் றொன்பதாவது பதிகத்திலும் அந்நாளில் தமிழ்நன்மக்கள் செய்து போந்த சிவலிங்க வழிபாடு குறிப்பிடப்பட்டிருத்தலின், அவர் சிவத்தை யறியார் என்பது பொருந்தாது. அந்நாளில் தமிழ வேளாளர் செய்து போந்த சிவலிங்கவழிபாட்டின் பெருமையை ஆரியர் அறிந்துகொள்ளத்தக்க நுண்ணறிவு இலராய் இருந் தனர் என்பதே தேற்றமாம். அவ் வாரியர் அவ்விரண்டு பதிகங்களிலும் 'ஆண்குறித்தெய்வம்' என்று பொருள் படுஞ் 'சிசிநதேவர்' என்னுஞ் சொல்லால் அச் சிவலிங்

கத்தை இழித்துரைத்ததோடு, அதனை வழிபடுந் தமிழ் நன்மக்களையுந் 'தாசர்கள்' என வைதமையும் யாங்கூறும் இவ் வுண்மைக்குச் சான்றும் என்க. எனவே, சைவ சித்தாந்த முடிபொருளாயுள்ள சிவத்தை உணர்த்தாத இருக்குவேதமும் அதன் வழிவந்த ஏனை ஆரியவேதங் களுஞ் சைவசித்தாந்தத்திற்கு மேற்கோள்களாகாவென்று உணர்ந்து கொள்க.

அற்றேல், இருக்குவேதத்தினின்றும் பிரித்தெடுத்துச் செய்யப்பட்டதாகிய எசுர்வேதத்திற் போந்த 'சதருத்ரியத்' திற் 'சிவன்' என்னும் பெயர் காணப்படுதல் என்னை யெனின்; எசுர்வேதம் ஒழுங்குபடுத்திய பிற்காலத்தில் ஆரியர் தாம் செய்துபோந்த சிறுதெய்வ வணக்கத்தை மெல்ல மெல்லக் கைந்நெகிழவிட்டுத், தமிழ்ச்சான்றோர் அறிவுரைகளை ஏற்று உருத்திர வழிபாட்டைக் கைக் கொள்ளப் புகுந்தமையின், அவரை அவ் வுருத்திர வழி பாட்டினின்றும் மேலுயர்த்திச் சிவவழிபாட்டிற் கொண்டு செல்லும்பொருட்டே, எப்பொருளுங் கடந்த சிவத்தின் பெயரை அவ் வுருத்திரர்மேல் வைத்து, அச் சதருத்ரியத் தினை இயற்றி அவ் வெசுர்வேதத்தில் முதன்மைபெற வைத்த தல்லது, ஆண்டும் முழுமுதற் கடவுளான சிவத்தை அவர்க்கு உணர்த்தியபடி யன்றும். இஃது எற்றாற் பெறுது மெனின்; அப்பகுதிக்குச் 'சதருத்ரியம்' என உருத்திரச் சொல்வழியே பெயரமைத்தமையானும், அவ் வுருத்திரர்க் குரிய 'நீலமிடறும்,' 'சிகண்டர்' எனும்பெயரும் அதன்கட் சொல்லப்படுதலானும் பெறுதும் என்பது. அவ் வுருத்தி ரரின் கொடிய திருவுருவத்திற்கு மிக அஞ்சியிருந்த ஆரியர், இப்போதுதான் அஃது அன்புருவாதலுந் தீது செய்யாதது ஆதலுந் தெளிந்து,

"மலைகளில் எழுந்தருளுவோய், கொடியதல்லாத ஒன்பவுருவினதுந், தீங்கு குறியாததும்ஆன நின் ... வத்தோடும் எங்கள்மேல் துலங்கியருள்க" என்று பொருள்படும் "யாதே ருத்ர சிவா தநூர் அகோர பாபகாசிநீ | தயா நஸ்தந்வா சந்தமயா கிரிசந்தாபிசாக சிஹி" என்னும் வணக்கவுரையால் அச்சதருத்ரியத்தின் முதலிலேயே வழிபாடு செய்தல் காண்க; அவ் வுருத்திரர்க்கு அவ்வாரியர் மிக நடுங்கிய நடுக்கம் இன்னும் அவரது நினைவைவிட்டுத் தீர்ந்திலாமை இதிற் கண்டுகொள்க. இங்ஙனமே பின்னாளில் வரவர ஒழுங்குபடுத்து வேதங்களாகச் சேர்க்கப்பட்ட 'அதர்வவேதப்' பாட்டுகளிற் சீகண்டருத்திரர் வழிபாடு மிகுந்து வரலானமை, வரவரத் தமிழ்வேளாளர் செய்து போந்த முதற்கடவுள் வழிபாட்டின் மேன்மையை ஆரியர் உணர்ந்து கொண்டதனாலேயாம். சீகண்டருத்திர வழிபாட்டில் தொன்று தொட்டுத் தலைநின்றவர்கள் வேளாளரும், அவருள் அரசராகிய வேளிருமே யாவர் என்பது பண்டைத்தமிழ் ஆரிய நூல்களால் மேற் காட்டியவாறு விளங்குவதோடு, பின்றைக் காலத்தில் இவை தம்மையெல்லாம் ஒருங்காராய்ந்துணர்ந்த ஆசிரியர் சேக்கிழார்,

> "நஞ்சையமுது செய்தவருக்,
> கிம்பர்த்தலத்தில் வழியடிமை
> என்றுங் குன்றுஇயல்பில் வருந்
> தம்பற்றுடைய நிலைவேளாண்
> குலத்தில்."[1]

என்று அருளிச் செய்யுமாற்றானும் நன்கு புலனாதல் காண்க. இருக்கு முதலிய நான்கு வேதங்களும் மாபாரதப் போர்க்குப் பின் ஒழுங்கு படுத்தப் பட்டமையினைப் பின்னே காட்டுதும்.

---

1. திருத்தொண்டர் புராணம், மூர்க்க நாயனார்.

அங்ஙனமாயின், பின்றைக காலத்துஞ் சைவசமய உண்மையை நிலைநாட்டிய மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர் முதலான ஆசிரியன்மாருஞ் சிவ வழிபாட்டினை ஓதாது, சீகண்ட உருத்திரரையே வழிபட்டுப் பதிகங்கள் அருளிச் செய்தல் என்னையெனின்; மலம் மாயை வினை என்னும் மும்மலவயத்தராய் நின்று பிறப்பு இறப்புக்களிற் பட்டுழலும் நான்முகன் மால் இந்திரன் முதலிய ஏனைச் சிறுதேவர்கள் போலாது, இயற்கையே மலமாசு பெரிதுந் தேய்ந்து, சிவத்தின் தலைமைத்தன்மை (அதிகாரம்) தங்கட் பதியப்பெற்று அதன் அருட்பேற்றிற்கு முற்றும் உரியராய் நிற்குஞ் சீகண்டருத்திரர், சிவபெருமானுக்குரிய எல்லா அடையாளங்களும் உடையரெனவும், மனமொழிகளுக்கு எட்டா இயல்பினதாகிய சிவத்தை நினைத்தலும் வழுத்தலும் இந் நிலவுலகத் துள்ளார்க்கு ஏலாமையின் அவர் சீகண்ட ருத்திரர்பாற் செய்யும் வழிபாடுகளெல்லாம் முழுமுதற் சிவத்தையே சென்று சேருமெனவுஞ் சிவஞானபோதம் முதலிய சித்தாந்த நூல்கள் வலியுறுத்துக் கூறுதலிற், சைவசமயாசிரியர் சீகண்டருத்திரர்மேல் வைத்துக் கூறிய வழிபாடுகள் சிவத்தையே சாருமென்று ஓர்ந்துகொள்க. இஃது எதுபோலவெனின், நம்மையாளும் அரசர்க்கு நாம் நேரே செய்தற்கு இயலாமல், அவ்வரசர்க்கு ஈடாக நம் மெதிரே நமக்கு அணுக்கராய் நிற்கும் ஆட்சித்தலைவர் பால்[1] நாம்செய்யும் வழிபாடுகள் அவ்வரசரைச் சென்று சார்தல்போல வென்க. அங்ஙனம், ஆட்சித்தலைவர்பால் நமது வணக்கத்தைச் செலுத்துகின்ற விடத்தும், அஃது அவர்க்கு முதல்வரான அரசரையே நினைந்து செய்யப் படுதல் போலச் சீகண்டருத்திரர்பாற் செய்யப்படும் வழிபாடுகளுஞ் சிவத்தை நினைந்தே செய்யப்படுவனவாம்.

---

1. Governor-general.

முழுமுதற்சிவம், மூவர்க்கும் ஏனைத் தேவர்க்கும் மேற் பட்டதென்பது,

"மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்."

என்று மாணிக்கவாசகப் பெருமானும்,

"எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ."

என்று திருஞானசம்பந்தப் பெருமானும்,

"அவனருளே கண்ணாகக் காணி னல்லால்,
இப்படியன் இவ்வுருவன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே."

என்று திருநாவுக்கரசு அடிகளும் அருளிச் செய்தவாற்றால் நன்கு உணரப்படும். ஈண்டுக் கூறியவாற்றால், முழுமுதற் சிவத்தை நினைந்து செய்யப் படுகின்றது அன்புருவாகவுந் தான் செய்யும் அழித்தற்றொழிலை நினைந்து செய்யப்படு கின்றதிக் கொடிய வடிவாகவும் வைத்து வழுத்தப்படுஞ் சீகண்டருத்திர வழிபாட்டின் இருதிறமுஞ் சைவசித்தாந்த வழிநின்ற பண்டைத் தமிழ் வேளாளர்க்கு உரியவேனும் ஆரியர்க்கு அவர் செய்துவந்த வெறியாட்டு வேள்விக்கேற்ற அச்சவடிவே உணர்த்தப்பட்டமை தெள்ளிதிற் புலனும்.

## ௧௭. தமிழர்கள் 'உபநிடதம்,' 'சாங்கியம்' முதலிய அறிவுரை நூல்கள் வகுத்தமை

இனி, வேதங்களை ஒழுங்குபடுத்தி உருத்திர வழிபாட்டைக் கற்பித்த பின்னும், வெறியாட்டு வேள்விகள் புரிதலையுஞ், சிறு தெய்வ வணக்கத்தையும் ஆரியர் விட்டு நீங்காமையின், அவ் வேள்விகளையும் அவ் வணக்கத்தையும் அறவே தொலைத்தற் பொருட்டாகவே, தமிழ்ச் சான்றோர்கள் ஈச கேந கடப் பிரசின முண்டக மாண்டூக்ய தைத்திரீய பிருகதாரணியக சாந்தோக்கிய முதலான மிகப் பழைய அறிவு நூல்களாகிய உபநிடதங்களையுஞ், சாங்கியம் நையாயிகம் வைசேடிகம் யோகம் வேதாந்தம் முதலான மெய்ப்பொருளாராய்ச்சி நூல்களையும் இயற்றினார்கள். வெறியாட்டு வேள்விச் சடங்குகளையுஞ் சிறு தெய்வ வணக்கத்தையுங் கூறும் இருக்கு முதலிய வேதங்கள் பயனிலவாதலும், உலகு உயிர் கடவுள் என்னும் முப்பொருட் டன்மைகளை உள்ளவாறு ஆராய்ந்து மெய்யுணர்வு தலைக்கூடி இன்ப வுருவினதாகிய சிவத்தை எய்துதலே மக்கட் பிறப்பெடுத்ததன் பயனாதலும் இந் நூல்களில் நன்கு விளக்கி அறிவுறுத்தப் படுதல் காண்க. இந் நூல்கள் எழுந்த பிறகுதான் கன்மகாண்டத்தின் இழிவும், ஞானகாண்டத்தின் உயர்வும் பிரிந்து விளங்கலாயின. வேதத்தினும் வேதாந்தமாகிய உபநிடதங்களே சிறந்தனவெனவும், வேதாந்த உணர்ச்சியே பெரும்பயனை யளிப்பதெனவும் எல்லாரும் விளங்க அறிவாராயினர். முழுமுதற் கடவுளாகிய சிவ பிரான்முன், இந்திரன் அக்கி வருணன் மாதரிஸ்வான் முதலாக வேதங்களிற் சொல்லப்பட்ட கடவுளர் ஒரு சிறு துரும்பையும் அசைக்க வலியிலராதலும், அவனது அருட் சத்தியாகிய உமைப் பிராட்டியாரா லன்றி அவன் அறியப் படாமையுங் கேநோபநிடதத்தில் நன்கு வலியுறுத்தப் பட்டன.

---

## ௧௫. இந்திரன் முதலிய பெயர்கள் சிவத்தைக் குறியாமை

இனி, இவ் வுண்மைகளைப் பகுத்துணர மாட்டாத மாயாவாதியார் இந்திரன் வருணன் முதலான பெயர்கள் பற்பல தெய்வங்களைக் குறிப்பன அல்ல, அவையெல்லாம் ஒரு முழுமுதற் கடவுளையே குறிப்பனவாம் என்று கூறினார். இந்திரன் முதலிய பெயர்கள் முழுமுதற் கடவுளையே குறிப்பது உண்மையாயின், அப் பெயர்களால் உணர்த்தப் படும் அத் தெய்வங்கள் முழுமுதற் கடவுட்குரிய இலக்கணங்கள் உடையனவாய் இருத்தல்வேண்டு மல்லவோ? அக்நி இந்திரன் சோமன் என்போர் பிரசாபதியாற் படைக்கப்பட்டவர் எனச் சதபதபிராமணங் கூறுதலானும்,[1] மித்திரன் வருணன் தாத்ரி அர்யமான் அம்சன் பகன் விவஸ்வதன் ஆதித்யன் என்னும் எண்மரும் அதிதியின் புதல்வர் என அஃது அங்ஙனமே எடுத்துச் சொல்லுதலானுங், கட்குடியும் விலங்குகளின் கொலையால் வரும் ஊன் உணவும் அவர் கைக்கொண்டமை மேலே காட்டப் பட்டமையானுந், தந்தையைக் கொல்லல் மகளைப் புணர்தல் முதலான மக்களினும் இழிந்த பல செயல்களை அத் தெய்வங்கள் புரிந்தமை அங்ஙனமே அந் நூல்களிற் காணப்படுதலானும், அவர் பகைவரால் தோல்வியடைந்தமையுந் தாம் இறவாதிருத்தற் பொருட்டுச் சாவாமருந்து வேண்டினமையும் அவற்றின் கண் வெளிப்படையாகக் காட்டப்பட் டிருத்தலானும் அவரெல்லாருஞ் சிற்றுயிர்களேயாவரல்லது, இக் குற்றங்கள் ஒரு சிறிதுந் தீண்டப் பெறாத முழுமுதற் சிவம் ஆகார் என்பது சிறிதுணர்வுடையார்க்குந் தெற்றெனை விளங்கும்.

1. சதபதபிராமணம், ௧௧, ௧, ௬.

சொற்களும், அச் சொற்களால் உணர்த்தப்படும் பொருள்களும், அப் பொருள்களின் இலக்கணங்களும் ஒன்றோடொன்று மாறுபட்டு வெள்ளிடை மலைபோல் விளங்கிக் கிடப்பவும், அவற்றையெல்லாம் ஒன்றெனல் உண்மையாராயுந் தருக்கத்திற்குக் கட்டுப்படாமல் தமக்குத் தோன்றியவாறே பேசும் மாயாவாதியார் ஒருவர்க்கேயன்றி ஏனை மெய்யுணர்வுடையார்க்கு அடாது நல்ல தண்ணீரும் உப்புத் தண்ணீருந் தம்மில் வேறுபட்டனவாய் இருப்பவும், அவையிரண்டனையும் ஒன்றெனக் கூறி உப்புத் தண்ணீரைக் கொடுத்தால் எவரேனும் பருகுவரா? சோறும் புழுவும் வேறாயிருக்க அவைதம்மை யொன்றென வற்புறுத்திச், சோற்றுக்கு மாறாகப் புழுக்களை வட்டித்தால் அவற்றை எவரேனும் உண்பரா? இரும்பும் பொன்னும் வேறாயிருப்ப அவையிரண்டும் ஒன்றெனவே வாயாடிப், பொன்னுக்கு மாறாக இரும்பை எடுத்துக் கொடுத்தால் மாயாவாதியார் அதனை ஏற்றுக் கொள்வரா? ஆதலால், அறிவாராய்ச்சிக்கும் உலக வழக்கிற்கும் இசையாதபடி வைத்து, எல்லாச் சிறு தெய்வப் பெயர்களும் ஒரு முழுமுதற் கடவுளையே குறிக்கு மென்றல் அறிவுடையார் கழகத்தில் நகையாடி விடுக்கப்படும் என்க

அற்றேல், இருக்கு வேத முதன் மண்டிலம் நூற்றறுபத்து நான்காம் பதிகத்தில் "சத்துப் பொருள் ஒன்றேயுளது, கற்றவர் அதனைப் பல பெயர்களால் வழங்குகின்றார்கள்" என்று காணப்படுதல் என்னையெனின்; இக் கொள்கை இருக்கு வேதத்தில் இவ் வோரிடத்தில் தவிர வேறெங்குங் காணப்படாமையானும், ஓரிடத்தில் மட்டும் புதிதாகக் காணப்படும் இக் கொள்கை ஆரியர்க்கு உரியதாயின் மேற்காட்டியவாறு முதற்கடவுள் இலக்கணத்திற்குப் பொருந்தாமல் மக்களினுந் தாழ்ந்த பழிச் செயல்களைப்

புரிவாரான அச் சிறு தெய்வங்களை அவர் வணங்குதல் செல்லாமையானும், இச் சிறு தெய்வப் பெயர்களெல்லாம் முழுமுதற் சிவத்தையே குறிப்பனவாயின், வேதங்களினுஞ் சிறந்த வேதாந்தமாகிய கேநோபநிடதத்தில் இத் தெய்வங் களெல்லாம் இயக்க வடிவத்திற் றோன்றிய சிவத்தின்முன் வலியிலராய் ஒழிந்தமை தெளிவுறுத்தப் பட்டதற்கு வேறு வழி காட்டுதல் இயலாமையானும் அக் கொள்கை ஆரி யர்க்கு உரியதன்றென்பதே முடிபாம். பண்டைக்காலத் திருந்த தமிழ்ச்சான்றோர்கள், பல சிறு தெய்வங்களை வணங்கும் ஆரியரது சிறுமையை ஒழித்தல் வேண்டியே, ஆரிய வேதங்களை ஒழுங்கு படுத்திய ஞான்று தமக்குரிய அக் கொள்கையை அவ் வாரியநூலின் இடையே புகுத்தி வைத்தனர். ஆரியர் பல பெயர்களான் வணங்குஞ் சிறு தெய்வங்கள் முதற்கடவுள் ஆகார், எவர் எவ்வகைப் பெய ரில் எத்தெய்வத்தை வணங்கினும், அத் தெய்வங்கள் பிறந் திருந்து மாய்வனவாதலால் அவை அவர் வழிபாட்டை ஏன்று கொண்டு அவர்க்கு அருள்புரியமாட்டா; எல்லாம் வல்ல முழுமுதற் சிவம் ஒன்றே அவரவர் அவ் வத்தெய்வத் திற் செய்யும் வழிபாட்டை ஏன்று கொண்டு அவரவர்க் கேற்ற பரிசாகத் தனது அருளை வழங்கி அவரைமேன்மேல் உயர்த்தும் என்பதே தமிழ்ச்சான்றோர் கொள்கையாம். இது,

> "விரிவிலா அறிவி னூர்கள் வேறொரு சமயஞ் செய்தே
> எரிவினாற் சொன்ன ரேனும் எம்பிராற் கேற்ற தாமே."

எனத் திருநாவுக்கரசு நாயனாரும்,

> "அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய்
> வேறாங் குறியது வுடைத்தாய்."

எனவும்,

"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனர்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படும் இறக்கும் பிறக்கும் மேல் வினையுஞ் செய்யும்
ஆதலால் இவைஇ லாதான் அறிந்தருள் செய்வ னன்றே."

எனவும் அருணந்தி சிவாசிரியரும் ஓதுமாற்றால் நன்கு தெளியப்படும். இவ் வுண்மையையே இக் காலத்திருந்த இராமலிங்க அடிகளும்,

"அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயர் என்பெயரும் அவர் பெயரே எவ்வுயிரின் பெயரும் அவர் பெயரே" என்று ஓதுதல் காண்க. எல்லா உயிர்களும் அவனை இன்றி இயங்காமையானும், அவன் எல்லா உயிர்களிலும் பிரிவின்றிக் கலந்து நிற்றலானும் அம் முறைபற்றி எல்லா உயிர்ப்பெயரும் இறைவற்கு உரியனவாகக் கூறப்பட்டனவே யல்லாமல், அங்ஙனங் கூறப்பட்ட அப் பெயர்கட்குரிய சிற்றுயிர்கள் அதனால் அம் முதல்வனாவான் செல்லுதல் ஒரு சிறிதுமில்லை யென்க. இஃது என்போலவெனின்; அரசன் ஆணைவழி நின்று அரசு செலுத்தும் அமைச்சர் தண்டத்தலைவர் ஊர்காவலர் முதற் பலருந் தத்தம் அளவிற் கேற்ற தலைமைப்பாடும் பெருமையும் உடையரேனும், அது பற்றி அவரெல்லாம் அவ் வரசனேயாதல் செல்லாமை போலவும், அவர்மாட் டெல்லாம் ஊடுருவி நின்று அவர்க்கு அச் சிறப்பினை நல்குந் தனது ஆணையை அவர் மாட்டு நின்றும் அரசன் வாங்கிக் கொண்டவழி அவர் அப் பெருமையையும் பெயரையும் ஒருங்கிழத்தல் போலவும் என்க. இங்ஙனமாகவே, ஆரியர் வணங்கிய சிறுதெய்வப் பெயர்களும், அத் தெய்வங்கள் முதலான எல்லாச் சிற்றுயிர்களிலும் நிறைந்து நிற்குஞ் சிவத்திற்கும் பெயர்களாக முகமனாய்த் தமிழ்ச் சான்றோரால் உரைக்கப்பட்டனவே யல்லாமல், அப் பெயர்க்குரிய சிறு தெய்வங்கள் அச் சிவ

மாதல் ஒருவாற்றானும் இல்லையென்றொழிக. இதுவே, "ஏகம்சத் விப்ரா பகுதாவதந்தி" என்னும் அவ் விருக்கு வேதத் தொடர்மொழிக்குப் பொருளா மென்று கடைப் பிடிக்க இன்னும் இதன்விரிவை எமது சைவ சித்தாந்த ஞானபோதத்திலும், சிவஞானபோத ஆராய்ச்சியிலுங் கண்டு கொள்க. இக் கூறியவாற்றால், உருத்திரசிவ முழுமுதற் கடவுள் வழிபா டொன்றுமே தொன்று தொட்டுச் சைவ வேளாளர்க்கு உரித்தாமெனவும், இந்திரன் வருணன் முதலான ஏனைச் சிறு தெய்வவழிபாடுமட்டுமே ஆரியர்க்கு உரித்தா மெனவும் பகுத்தறிந்து கொள்க.

## கசு. ஓம் என்னும் பிரணவம் தமிழுக்கே யுரித்தாதல்

அஃதொக்குமாயினும், எல்லா ஒலிவடிவு வரிவடிவு கட்கும் முதலாவது ஓங்காரமாகிய பிரணவமே என்பது பெறப்படுதலானும், அப் பிரணவம் வடமொழிக்கே உரித் தாகலானும், அப் பிரணவவடிவாய் விளங்கும் எல்லா வட மொழிக்கலைகளும் இறைவன் வாய்மொழியேயாம் என்று மாயாவாதியார் கூறுமாறென்னையெனின்; அவர் ஆராயாது கூறினமையின் அது பொருந்தாக் கூற்றேயாம். பிரணவம் என்பது ஓ என்னும் ஒலியேயாம். ஓ என்பது நெட் டெழுத்து. நெட்டெழுத்துக்க ளெல்லாங் குற்றெழுத் துக்களின் நீட்டமேயாதலால் முதலில் குற்றெழுத்தொலி களும் அவற்றின்பின் அவற்றோடொத்த நெட்டெழுத் தொலிகளுந் தோன்றுநிற்கும். அகரந் தோன்றிய பிறகே ஆகாரந் தோன்றும். ஒகரந்தோன்றிய பிறகே ஓகாரந் தோன்றும்; ஒகரம் இன்றி ஓகாரந் தோன்றுது. இனித்

தமிழ்மொழியில் மட்டும் ஒகரமாகிய குற்றொலியும் அதன் நீட்டமாகிய ஓகார ஒலியும் இருப்பக் காண்டுமன்றி, வடமொழியில் ஓகாரத்திற்கு முதலாகிய ஒகரஒலி வழங்கக் காண்கிலேம். குற்றொலி இன்றி அதன் நெட்டொலி வழங்குதல் ஏலாமையால் ஒகரம் இல்லாத ஓகாரம் வட மொழிக்கு உரியதாதல் யாங்ஙனம்? தமிழில் ஒகர ஓகாரம் இரண்டும் இருத்தலால், அவ் விரண்டுந் தமிழுக்கே உரிய வாதல் நன்கு துணியப்படும். மேலும், ஓசையைக் குறிக் கும் ஒலி ஓசை ஓதை ஒலம் முதலிய தமிழ்ச் சொற்கள் ஒகர ஓகார ஒலிகளை உடையதாதல்போல, வடமொழிக் கண் உள்ள சப்தம் த்வநி முதலிய சொற்களில் அப் பிரணவ ஓசை காணப்படாமையானும் பிரணவமாகிய ஓங்காரந் தமிழ்மொழிக்கே உரித்தாதல் தெளிந்துகொள்க. அது வேயுமன்றித், தமிழல்லாத வேறுமொழிகளிலும் பிரணவ மானது வரிவடிவில் எழுதப்படுங்கால் தமிழுக்குரிய ஓ எழுத்தால் எழுதப்படுவதல்லது வேறுவடி வின்மையானும், பிரணவத்தின் ஒலிவடிவு வரிவடிவு இரண்டுந் தமிழ் மொழிக்குந் தமிழர்க்குமே உரியவாதல் தெற்றென விளங் கற்பாலதாம். இவையெல்லாம் எமது 'சைவசித்தாந்த ஞான போதத்'தில் 'தமிழ்நான்மறை' என்ற தலைப்பின்கீழ்ப் பதினைந்து ஆண்டுகட்கு முன்னமே யாம் விரித்து விளக்கி யிருக்கின்றேம். இந் நுட்பங்களை ஆய்ந்துணராது மாயா வாதியார் பிரணவம் வடமொழிக்கே உரியதெனக் கூறியது போலியுரையேயாம் என்க. ஓங்காரந் தமிழிற்குரியதாகவே, அதன் விரிவாய்த் தோன்றிய தமிழ்மொழியுந் தமிழ்மறை களும் மட்டுமே இறைவன் வாய்மொழியாமென்று தெளிந்துகொள்க. இன்னும் இம் மாயாவாதியார் தமிழ் மொழிக்குத் தாய் பாகதமொழியா மென்னுந் தமது கூற்றிற்குச் சான்று ஏதுங் காட்டாமையின், அவர் கூற்றுக்

சிறு மகார் கூறும் பொருள் இல் கூற்றேயாமென்க. இனிச், சைவசமயாசிரியர் வேதங்களெனத் தாந்தழுவிக் கூறுபவை, பெரும்பாலுஞ் சிறுதெய்வ வெறியாட்டு வேள்விகளைக் கூறும் ஆரியவேதங்கள் அல்லவென்பதூஉம், அவை அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் வேள்விகளைக் கூறுந் தமிழ்மறைகளே யாமென்பதூஉம் எமது திருவாசகவிரிவுரையில் விரித்து விளக்கியிருக்கின்றேமாதலின், அதனை ஆண்டுக் கண்டுகொள்க; ஈண்டு விரிப்பிற் பெருகும்.

## ௧௭. வேளாளர் உபநிடதங்கள் இயற்றினமைக்குச் சான்று

இவையெல்லாம் ஒக்குமேனும், ஆரியமொழியிலுள்ள உபநிடதங்களைத் தமிழர் எழுதினரெனக் கூறல் யாங்ஙனம் பொருந்துமெனிற்; கடவுள் உயிர் உலகு முதலான மெய்ப் பொருள்களைப் பற்றிய நுண்ணிய ஆராய்ச்சிகளை ஆரியப் பார்ப்பனர் அறியாது மயங்கினமையும், அவற்றை அவர்க்கு அஞ்ஞான்றிருந்த தமிழஅரசர் அறிவுறுத்தினமையும் பழைய உபநிடதங்களிலேயே நன்கு எடுத்துச் சொல்லப் படுதலின் அவை தமிழ்ச்சான்றோரால் இயற்றப் பட்டனவாதல் தெளியப்படும். கற்றறிவுடைய ஆரியப்பார்ப்பனர் ஐவர், வைஸ்வாநர ஆத்மாவைப் பற்றித் தமக்கு அறிவுறுத்தும்படி உத்தாலக ஆருணி என்பவரை அடைய, அவர் அதனை அறிவுறுத்தும் ஆற்றல் தமக்கில்லாமையைத் தெரிவிக்க, அவரோடு அறுவரும் அஸ்வபதிகைகேயன் என்னும் அரசன்பாற் சென்று தமது விருப்பத்தைத் யுணர்த்த, அவ்வரசன் அவர்க்குள்ள அறியாமையை

முதலில் எடுத்துக் காட்டி, அதன்பின்னர் அவ் வாத்மா வைப் பற்றிய உண்மையை அவர்க்குத் தெருட்டினனென்று பழைய சாந்தோக்கிய உபநிடதங் கூறுகின்றது.[1] இன்னும் ஆரியவேதநூல் உணர்ச்சியிற் பெரிதும் புகழ்பெற்று விளங்கிய கார்க்கியபாலாகி என்னும் பார்ப்பன ஆசிரியன், காசி மன்னனாகிய அஜாதசத்துரு என்பவன்பாற் பிரமத்தைப் பற்றிப் பிழைபாடான பன்னிரண்டு உரைகளைக் கூறித், தான் கூறியவற்றிலுள்ள அப் பிழைகளை அம் மன்னவன் எடுத்துக் காட்டியபின், அப் பார்ப்பனன் தன் அறியாமை யுணர்ந்து அவனுக்கு மாணாக்கனாகி, அவனாற் பிரமத்தின் உண்மைத் தன்மை தெளியப்பெற்றன னென்று பிருக தாரணியகோபநிடதமுங் கௌஷீதகி உபநிடதமுங் கூறுதல் காண்க.[2] இவ்வாத்ம ஞானமானது அரசரைத் தவிர, ஆரியப் பார்ப்பனர் எவரும் அறியாரென்பதும் அவ் வுப நிடதங்களில் நன்கு வலியுறுத்தப்படுதல் காண்க. பிரவாகன ஜைவலி என்னும் அரசன், ஆருணி என்னும் ஆரியப் பார்ப்பன ஆசிரியனுக்கு ஞானோபதேசஞ் செய்தபின், "ஓ கௌதமனே! நீ சொல்லியபடியே, இந்தக் கொள்கை யானது இதுகாறும் பார்ப்பனர்க்குள் வழங்காமையால், அரசவாழ்க்கையானது எல்லா உலகங்களிலும் அரச வகுப் பினர் கையிலேயே தங்கியிருக்கின்றது"[3] என்று, பழைய வேளிர் அரசர்க்கே மெய்யுணர்வும் அரசுரிமையுந் தொன்று தொட்டு உளவாதல் காட்டினமை சாந்தோக்கியத்தில் தெளி வுறுத்தப் படுகின்றது. இவ் விந்தியநாட்டுள் வந்தேறுங்குடிக ளாய் ஆரியர் பிழைக்கவந்த ஞான்று, அரசராய் அவர்க்கு முன்னே தொட்டு இமயம்முதல் குமரிவரையில் இதன்

---

1. சாந்தோக்கியம், ஙி, கக-உச.
2. பிருகதாரணியகம், உ, க. கௌஷீதகி, ச.
3. சாந்தோக்கியம், ஙி, ௩, எ.

கண் அரசாண்டவர்கள் தமிழ வேளாள அரசரே என்பது மேலே காட்டப் பட்டமையானும், ஆரியப்பார்ப்பனர்க்கு அறிவுறுத்தும் அவ் வரசர்கள் தம்மை அவரோடு ஓர் இனப் படுத்திக் கொள்ளாமல் தம்மையுந் தமது மெய்யுணர்வினை யும் அவரினின்றும் வேறுபிரித்தே கூறுதல் மேற்குறிப் பிட்ட உபநிடதங்களில் நன்கு தெளியக் கிடத்தலானும் அவற்றிற் சொல்லப்பட்ட அவ் வரசர்கள் தமிழரேயாதல் ஐயுறவின்றித் துணியப்படுமென்க.

## கஅ. புராண இதிகாசக் கருத்து

இனி, ஆரியவேதங்களின் புன்மையும், அவற்றின்கட் சொல்லப்பட்ட இந்திரன் முதலான சிறுதெய்வ வழி பாட்டின் சிறுமையும், அவரைக் கொண்டாடும் வெறி யாட்டு வேள்விகளின் தீவினையும் எடுத்துக்காட்டி, முழு முதற் கடவுள் சிவம் ஒன்றேயாதலும் அதனை உள்ளவாறு உணரும் மெய்யுணர்வின் மாட்சியும் அதனை எய்துதற் குரிய மெய்யறிவின் சிறப்புந் தேற்றித் தமிழ்ச்சான்றோர்கள் ஈச கேனம் முதலான பழைய உபநிடதங்களையுஞ் சாங்கியம் முதலான தரிசனங்களையும் இயற்றியும், ஆரியர் அவற் றானும் அறிவுதிருந்தாராய்த் தமக்குரிய வெறியாட்டு வேள்விகளைப் பெருக்கிச் செய்தற்குந், தமிழர் அறி வுறுத்திய முதற் கடவுள் வழிபாட்டை மறுத்தற்குமாக 'மீமாஞ்சை' நூல் இயற்றிவிட்டார். அவர் செய்த அம் மீமாஞ்சைநூல் உணர்ச்சியும், அதன்வழியே வெறியாட்டு வேள்விகளும் பின்னும் பெருகவே, ஆரியர்க்குந் தமிழர்க் கும் பெரும் போர் மூண்டது. இங்ஙனம் மூண்ட பெரும் போரின் வரலாறுகளே பின்னர்ப் புராணங்களினும் இதி காசங்களினும் எழுதிவைக்கப் பட்டன. இவற்றின்கட்

சொல்லப்பட்ட தாருகாவனத்து இருடிகளின் வேள்வி களுந், தக்கன் முதலாயினோர் சிவபிரானை இகழ்ந்து செய்த வேள்விகளும் எல்லாம் ஆரியராற் செய்யப்பட்ட வெறி யாட்டு நாத்திக வேள்விகளேயாம்; அவ் வேள்விகளை அழித்து அவற்றைப் புரிந்த ஆரியரை ஒறுத்து அவர்தஞ் செருக்கை அடக்கின பிட்சாடனருத்திரர் வீரபத்திரருத் திரர் முதலியோரின் செயல்களெல்லாந் தமிழ்மக்களின் செயற்கருஞ் செயல்களேயாம். ஆரியரின் இத்தகைய வெறியாட்டு வேள்விகளை அழித்துவந்த சூரன் இராவணன் முதலான நிகரற்ற தமிழ்வேந்தர்களே, ஆரியர்களால் அரக்கரென்று இகழ்ந்து பேசப்படுவாராயினர். இத் திறங்க ளெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும். இனி யாம் எழுதுந் 'தமிழர் ஆரியர் வரலாறு' என்னும் நூலில் அவையெல்லாம் விரித்துக் காட்டுதும்.

இவ்வாறாக, ஆரியர் உலகத்திற்குப் பெரிது பயன் படும் ஆ, ஆன்கன்றுகள், எருதுகள், எருமைகள், குதிரை கள், யாடுகள், சிற்சில அமயங்களில் உயர்பிறப்பினரான மக்கள் முதலான எத்தகைய உயிர்களையுங் கொன்று கட்குடித்து வெறியாட்டு வேள்விகள் புரிந்து, முழுமுதற் கடவுளை வணங்காத நாத்திகராய் உழன்றமையினாலே தான், அன்பு அருள் அறம் கல்வி முதற்கடவுள் வழிபாடு நாகரிகம் முதலியவற்றிற் றலைசிறந்து விளங்கிய பண்டைத் தமிழ் நன்மக்களான வேளாளரும் அவர்க்கு அரசரா யிருந்த வேளிரும் இயற்கையிலேயே விருந்தோம்பும் வாழ்க் கையிற் சிறந்தவராயிருந்துந், தமது நாகரிக முறையில் திருத்தப்படுதற்கு இசைந்துவராத ஆரியர்மேல் வெறுப் புற்று அவர் தம்மை ஒறுத்துவரலாயின ரென்க.

---

## ௧௧௯. ஆரியர் தம்மை உயர்த்தச் செய்த சூழ்ச்சி

இதன்பின், எல்லாவாற்றானுந் தமிழ்மக்களுந் தமிழரசருஞ் சிறந்தாராயும் நிகரற்ற வலிமையுடையாராயும் இருத்தல் கண்டு, ஆரியர் அவரை நேரே எதிர்த்தலும் இகழ்தலுஞ் செய்தலைவிட்டு, அவரோடு அளவளாவி அவர்தம் வழக்க வொழுக்கங்களைக் கைப்பற்றுவார்போற் புறத்தே காட்டி, அகத்தே அவரைத் தாழ்த்தித் தம்மை உயர்த்துதற்கு வேண்டுஞ் சூழ்ச்சிகளெல்லாம் மிகவுங் கருத்தாய்ச் செய்து வருவதில் முயற்சியுடையரானார். அக் கருத்து நிரம்புதற்கு முதலில் ஊன் உணவையும் வெறியாட்டு வேள்விகளையும அறவே ஒழித்தனர். அதன்பின், தம்மை எல்லாரினும் உயர்ந்த பிராமணர் எனவும், ஆரியரல்லாத தமிழரை சத்திரியர், வைசியர், சூத்திரர் எனவும் பிரித்து, இவ் வேற்பாடு கடவுளால் வகுக்கப் பட்டதென எழுதி, மெல்ல மெல்ல வேதங்கள், பிராமணங்கள், உபநிடதங்கள் முதலியவற்றின்கண் அவ் வெழுத்தை நுழைத்துவிடுவாராயினர். களங்கமில்லா உள்ளத்தினரான தமிழர் அவ்வாறு அவர் நுழைத்த அவ் ஏற்பாட்டினை உண்மையென நம்பத் தலைப்பட்டபின், அதனை மேலும் மேலும் வலியுறுத்தி விரித்து மநுமுதலான மிருதிநூல்களை எழுதி வைக்க லாயினர். இம் மிருதிநூல்கள் வழங்கத் துவங்கித், தமது கருத்து எளிதாய் எங்கும் நிறைவேறுதலைக் கண்டபின், ஆரியர் தம்மைப் பிராமணர் எனவும், ஆரியரல்லாத தமிழரை சத்திரிய வைசிய சூத்திரரெனவும் வகுத்த நால்வேறு வகுப்பையுங்கூட ஒழித்துத், தமிழர் எல்லாரையும் ஒருங்கு சேர்த்துச் சூத்திரரென முற்றும் இகழ்வாகவே வழங்குதற்குந் துணிந்து, 'கலிகாலத்தில் சத்திரிய வைசிய வகுப்பில்லை, பிராமணர் அல்லாத அனைவருஞ்

ஆவா' என ஒருகதை
தாம் இயற்றிய சில நூல்களினிடையே நுழைத்துவிட்டு, அதனையுந் தமிழர் எல்லாரும் எளிதிலே நம்பும்படி செய்து தமது கருத்தை நிறைவேற்றிக் கொண்டார்கள். இங்ஙனம், இவர்கள் கருத்து நிறைவேறிய பிற்காலத்திற் றோன்றிய உரையாசிரியர்களான இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலியோர், ஆரியப் பார்ப்பனர் வழக்கத்திற் கொணர்ந்த இவ்விகழ்ச்சிப் பொய்யுரையை மெய்யென நம்பித், தாம் உரை எழுதுதற்கு எடுத்துக் கொண்ட 'தொல்காப்பியம்' முதலான பழைய செந்தமிழ்த் தனி நூல்களில் வேளாளரைப் பற்றிக் கூறுமிடங்களிலெல்லாம் பிழையான உரைகளை எழுதிவிட்டனர்கள். இவ் விந்திய நாட்டிற் சரித்திர நூல்களும், அவற்றின் வழியே மெய் இது, பொய் இதுவெனப் பகுத்துக் காணுஞ் சரித்திரவுணர்வும் இல்லாமையால், ஆரியப் பார்ப்பனர் தமிழ் நன்மக்களைத் தாழ்த்துதற்குச் செய்த இச் சூழ்ச்சிகளை அறியாமல், அவையெல்லாங் கடவுள் வகுத்த ஏற்பாடெனவே நம்பி, அவற்றுக்கு மாறாக ஏதுங் கூறமாட்டாராய், நூலாசிரியர் கருத்துக்கு முரணாக அவர்கள் அங்ஙனம் பிழைபட்ட உரைகள் எழுதியது ஒருவியப்பன் றென்க.

## உ0. சேக்கிழாரும் வேளாளரும்

இனித், திருத்தொண்டர் புராணம் அருளிச்செய்த ஆசிரியர் சேக்கிழார் வேளாளரைச் சூத்திரக் குலத்தவராகக் கூறுதல் என்னை? என்று அறிஞர் சிலர் நிகழ்த்திய தடைக்கு விடைகூறி, அதன்பின் அவர் நிகழ்த்திய ஏனைச் சிலவற்றிற்கும் முடிபு கூறுவாம். அறுபத்துமூன்று நாயன்மார்களுள் வேளாளக் குடியிற் பிறந்தவர்கள் பதின்மூவ

ராவர் என்று உமாபதிவனார் தாம் அருளிச்செய்த சேக்கிழார் புராணத்திற் கூறியிருக்கின்றார். சேக்கிழாரும் இப்பதின்மூவர் வரலாறுகளையும் உரைக்கின்றுழிச் 'சத்தி நாயனார்' புராணத்தில் "விரிஞ்சையூரினில் வாய்மை வேளாண் குலம்" எனவும், 'விறன்மிண்டர்' புராணத்தில் "அப் பொற்பதியினிடை வேளாண் குலத்தை விளக்க அவதரித்தார்" எனவுந், 'திருநாவுக்கரையர்' புராணத்தில் "மேதக்க நிலை வேளாண் குலத்தின்கண்" எனவுஞ், 'சாக்கியர்' புராணத்தில் "தகவுடைய வேளாளர் குலத்துதித்தார்" எனவுங், 'கோட்புலியார்' புராணத்தில் "வேளாண் குலம்பெருக வந்துதித்தார்" எனவும், 'மானக்கஞ்சாறர்' புராணத்தில் "விழுமிய வேளாண் குடிமை" எனவும், 'ஏயர்கோன் கலிக்காமர்' புராணத்தில் "வேளாண்மையில் உயர்ந்த பொற்பினதால்" எனவும், 'மூர்க்கர்' புராணத்தில் "நஞ்சையமுது செய்தவருக்கு, இம்பர்த் தலத்தில் வழியடிமை என்றுங் குன்று இயல்பில் வருந், தம் பற்றுடைய நிலை வேளாண் குலத்தில்" எனவும், 'அரிவாட்டாயர்' புராணத்தில் "தொக்க மாநிதித் தொன்மையில் ஓங்கிய, மிக்க செல்வத்து வேளாண் டலைமையார்" எனவுஞ், 'செருத்துணையார்' புராணத்தில் "திருந்து வேளாண் குடிமுதல்வர்" எனவும், 'முனையடுவார்' புராணத்தில் "வேளாண் தலைமைக் குடிமுதல்வர்" எனவும் பதினொரு நாயன்மார் குலத்தை 'வேளாண்குலம்' என்னும் பெயரினாலேயே விளங்கக் கூறி யிருக்கின்றனர். இவ்வாறு கூறியவிடத்தும் வேளாண் குலம் என வாளா கூறாது, அக் குலத்தவர் மெய்ம்மையே பேசும் இயல்பினர் என்பது புலப்பட 'வாய்மை' 'நம்புவாய்மையின் நீடு' என்னுஞ் சொல்லையுஞ் சொற்றொடரையும், அவர் பொருந்திய தகுதிப்பாடு உடையர் என்பது விளங்க 'மேதக்க'

'தகவுடைய' என்னுஞ் சொற்றொடர்களையும், )க் குலஞ் சிறந்தது என்பது தெரிக்க 'விழுமிய' என்னுட சொல்லை யும், இக் குலத்தவர் ஈகையிற் சிறந்தவர் என்பது புலனாக 'வேளாண்மையில் உயர்ந்த' என்னுஞ் சொற்றொடரையும், இக் குலத்தவர் சிவபிரான் ஒருவற்கே வழிவழி யடிமை செய் தொழுகுங் குறையா இயல்பும் பற்றும் உடையர் என்பது நன்குணர்த்த "நஞ்சை யமுது செய்தவருக்கு, இம்பர்த் தலத்தில் வழியடிமை என்றுங் குன்றா இயல்பில் வருந், தம் பற்றுடைய" என்னுஞ் சொற்றொடரையும், வேளாளர் தொன்றுதொட்டுப் பெரும் பொருட்டிரள் உடைய மிக்க செல்வ வாழ்க்கையினர் என்பது தெளி வுறுத்தத் "தொக்கமாநிதித் தொன்மையில் ஓங்கிய, மிக்க செல்வத்து" என்னுஞ் சொற்றொடரையும், வேளாள குலந் திருத்தமானது என்பது தெருட்டத் "திருந்து" என்னுஞ் சொல்லையும், வேளாள குலம் ஏனை எல்லாக் குலங்கட்குந் தலைமையானது என்பது அறிவுறுத்த "வேளாண் தலைக்குடி" என்னுஞ் சொற்றொடரையும் ஆசிரியர் சேக்கிழார் அடைகளாகப் புணர்த்தி வேளாண் குலத்தின் உயர்வைப் பலவாற்றானும் நன்கு விளக்கியிருக் கின்றனர். இத்துணைச் சிறந்த உயர்வுடையதாகத் தம்மாற் கூறப்பட்ட வேளாள குலத்தை இழிந்த சூத்திர குலமாகக் கூறுவது சேக்கிழார் திருவுள்ளக் கருத்தாகுமா என்பது ஆராயற்பாலதன்றோ? சூத்திரராவார் இன்னர் என்பது மநுவினால் நன்கு காட்டப்பட்டிருக்கின்றது :

"சண்டையில் வென்று சிறையாகப் கொணரப்பட்டவன், அன்புடன் ஊழியஞ் செய்பவன், தன்வேசி மகன், விலைக்குக் கொள்ளப் பட்டவன், ஒருவ னாற் கொடுக்கப் பட்டவன், குலவழியே தொன்றுதொட்டு

ஊழியஞ் செய்பவன், குற்றத்திற்காக வேலை செய்பவன் எனச் சூத்திரர் எழுவகைப்படுவர்" எனவும்,

"பார்ப்பனன் ஐயம் இன்றி மேற்கூறிய எழுவகைச் சூத்திரரிடத்திலிருந்தும் பொருளை வலிந்து எடுத்துக் கொள்ளலாம். தம் தலைவன் எடுத்துக் கொள்ளுதற்குரிய பொருளையுடைய அந்தச் சூத்திரர் தம் பொருளுக்குச் சிறிதும் உரிமையுடையர் அல்லர்"[1] எனவும் மநுகூறுஞ் சூத்திர இலக்கணந் தமிழ் நாட்டிலுள்ள வேளாளர்பாற் காட்டல் கூடுமா? இங்குள்ள வேளாளர் சண்டையிற் சிறையாகப் பிடிக்கப் பட்டவரா? அல்லது எவர்க்கேனும் ஊழியஞ் செய்பவரா? அல்லது பார்ப்பனர் தம் வேசிக் கேனும் மக்களாய்ப் பிறந்தவரா? அல்லது எவரிடத்தேனும் விலைக்கு வாங்கப்பட்டவரா? அல்லது எவராலேனும் விலைக்குக் கொடுக்கப்பட்டவரா? அல்லது கால்வழி கால் வழியாக எவர்க்கேனும் அடிமையூழியஞ் செய்பவரா? அல்லது எந்தக் குற்றத்திற்காகவேனும் வேலை செய்பவரா? எந்த வேளாளராவது தமக்குந் தம் பொருளுக்கும் உரிமை யில்லையென்று அவை தம்மைப் பார்ப்பனர் வலிந்து எடுத் துக்கொள்ள விட்டிருக்கின்றனரா? இங்குள்ள வேளாளர் இச் சூத்திர இலக்கணங்களெல்லாம் உடையர் என்று ஒரு கால் அவ்வறிஞர் தாமாகவே நாட்டத் துணிவராயினும், ஆசிரியர் சேக்கிழார் வேளாளரையும் வேளாண் குலத் தையும் உயர்த்துக் கூறும் உயர்ச்சிகட்கெல்லாம் இவர் என் சொல்லமாட்டுவார்! மநு சூத்திரரைப்பற்றிக் கூறும் இழித் துரை இலக்கணங்களும், சேக்கிழார் வேளாளரைப்பற்றிக் கூறும் உயர்த்துரை இலக்கணங்களும் ஒன்றோடொன்று பெரிதும் மாறுபட்டு நிற்றலின் வேளாளரைச் சூத்திர

1. மநுமிருதிநூல், அ-ஆம் அத்தியாயம், ௪௧௫, ௪௧௭.

ரெனக் கோடல் சேக்கிழார்க்குக் கருத்தன்று என்பது தானே பெறப்படும்.

அற்றன்று, மநு கூறியவாறே வேளாளரைச் சூத்திர ரெனக் கொண்டாராயினுந், தாம் அவ் வேளாண் குலத்திற் பிறந்தமைபற்றி அதனைச் சேக்கிழார் உயர்த்துப்பேசுவா ராயினரெனின்; அங்ஙனம் மநு கூறியதற்கு மாறாக அக் குலத்தைப் பொய்யாக உயர்த்துப் பேசுதல் சேக்கிழார்க்கு ஒரு பெருங் குற்றமாய் முடியுமன்றோ? அதுவேயுமன்றித், தமிழ்நாட்டின்கண் உள்ள வேளாளர் பண்டுதொட்டே உழவு வாணிகம் ஈகை அறம் முதற்கடவுள்வழிபாடு முதலியவற்றிற்கு உரியராய் அந்தணராயும் அரசராயும் அமைச்சராயும் படைத்தலைவராயுங், கொலை புலை தவிர்ந்து நாகரிகத்திற் சிறந்தாராயும் வாழ்ந்து வந்திருத்தல், பண்டைத் தமிழ்நூல் வழக்கானும், இன்றுகாறும் நடை பெற்று வரும் உலகவழக்கானும் நன்கு துணியக்கிடத் தலின், இவற்றிற்கெல்லாம் மாறாகச் சேக்கிழார் இவர்களைச் சூத்திரரெனக் கொண்டாரென்பது, பண்டை நூலாராய்ச்சி யின்மை உலகவழக்கொடு மாறுகொள்ளுதல் என்னும் பெருங்குற்றங்களைச் சேக்கிழார்பால் ஏற்றுவதாய் முடியு மன்றோ? மநுவுக்கு மாறாகச் சேக்கிழார் பொய்கூறி வேளா ளரை உயர்த்தினரென்று ஒரு பக்கத்தும், வேளாளர் உண்மைச்சிறப்பை உள்ளவாறு அறிவிக்கும் பண்டைத் தமிழ்நூல்களையும் அறியாமற் சேக்கிழார் வேளாளரைச் சூத்திரரெனக் கூறினரென்று மற்றொரு பக்கத்துமாகச் சேக்கிழார்மேற் பொய்யும் அறியாமையும் ஆகிய பெருங் குற்றங்களை ஏற்றுதல் நன்றோ, திருத்தொண்டர் புராணத் தில் இரண்டு மூன்று இடங்களில் மட்டும் வேளாளரைச் சூத்திரரெனக் கூறியவை சேக்கிழாரால் செய்யப்படாமல் ஆரியப் பார்ப்பனராற்செய்து சேர்க்கப்பட்டனவாமென்று

கூறுதல் நன்றோ, என்பதை அறிவுடையார் ஆராய்ந்து கைக்கொள்ளக் கடவர். திருத்தொண்டர் புராணத்திற் பதினொரு நாயன்மார் வரலாறுகளைக் கூறுகின்றுழி, அவர்களுடைய குலத்தை வேளாள குலமென அக் குலத்தினர்க்குரிய பல உயர்ந்த தன்மைகளாற் சிறந்தெடுத்துக் கூறிய ஆசிரியர் சேக்கிழார், 'வாயிலார்,' 'இளையான் குடிமாறர்' என்னும் இருவர் புராணங்களில் இரண்டிடத்துமட்டும் இழிந்த சூத்திரப் பெயர்களால் வேளாளரைக் கூறியிருப்பாரா? வாயிலார் புராணத்திற் போந்த "தொன்மை நீடிய சூத்திரத் தொல்குலம்" என்னுஞ் சொற்றொடரிற் 'பழமை' எனப் பொருள்படுந் 'தொன்மை' 'தொல்' என்னுஞ்சொற்கள் ஒரு பயனுமின்றி இருகால்வந்து 'கூறியது கூறல்' என்னுங் குற்றத்திற்கு இடனாய் நிற்றலின் இச்சொற்றொடர் சேக்கிழாராற் செய்யப்பட்டபடியாக வன்றிச், சூத்திரச்சொல்லை நுழைத்தற்பொருட்டு ஆரியப் பார்ப்பனர் எவராலோ திரிபுபடுத்தப்பட்டதொன்றாமென்பது துணியப்படும். இங்ஙனமே, இளையான்குடிமாறர் புராணத்திற் போந்த "நம்புவாய்மையின் நீடு சூத்திர நற்குலம்" என்னுஞ் சொற்றொடரில் இழிவினைக் குறிக்குஞ் சூத்திரச் சொல், 'நற்குலம்' என்னும் உயர்வினைத் தருந் தொடர்மொழியோடு இயைதற்கு உரிமையின்றி மாறுபடுகின்றமையின் அது 'மாறுகொளக் கூறல்' என்னுங் குற்றத்திற்கிடனாய்ச், சேக்கிழாராற் செய்யப்படாமற் பிறரொருவராற் செய்யப்பட்டதேயா மென்பதனை நன்கு புலப்படுத்தும். இங்ஙனமே, சேக்கிழாராற் செய்யப்படாமல் ஆரியப் பார்ப்பனரால் இடையிடையே திரிபுபடுத்தப்பட்டனவுஞ் செருகப்பட்டனவுமாகிய வழுவுடைச் செய்யுட்களை அவரே செய்தனவாக நாட்டுதற்குப் புகுந்து, அறிவின் மிக்க அச் சான்றோர்க்கு இத்தகைய புல்லிய குற்றங்களை ஏற்றுதற்கு

இடந்தருதல் அறிவுடையார்க்கு முறையாகுமா கூறு மின்கள்!

இனித், திருவாக்கூர்த் தேவாரத்தில் "இன்மையாற் சென்றிரந்தார்க்கு இல்லையென்னாது ஈந்துவக்குந் தன்மை யார்" என்று திருஞானசம்பந்தப் பெருமானது அருமைத் திருமொழியால் உயர்த்துக் கூறப்பட்டவர்கள் வேளாளரே என யாம்கூறச், சேக்கிழார் "இன்மையால் இரந்து சென்றார்க்கில்லை யென்னாதே ஈயுந், தன்மையாரென்று நன்மை சார்ந்த வேதியரைச் சண்பை, மன்னனார் அருளிச் செய்த மறைத்திருவாக்கூர் அவ்வூர்" என்று அவரை அந்தணராகக் கொண்டாரென எதிர்ப் பக்கத்தவர் கூறினார். திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச்செய்த திருவாக் கூர்த் தேவாரப் பதிகத்தை முதலிலிருந்து ஒருசிறிது உற்றுநோக்குவார்க்கும், ஆண்டு அப் பெருமானாற் சிறப்பித் துரைக்கப்பட்டவர்கள் வேளாளரேயாதல் தெற்றெனா விளங்காநிற்கும். அப் பதிகத்தின் மூன்றாஞ் செய்யுளில்,

"வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்குந்
தாளாளர் ஆக்கூரிற் றான்றோன்றி மாடமே."

என வேளாளரையே அவர்க்குரிய பெயரால் வெளிப்பட எடுத்தோதி, யார் எவற்றைக் கேட்பினும் அவர்க்கு அவற்றையெல்லாம் வரையாது கொடுத்துதவும் ஈகையிற் சிறந்தார் அவ் வேளாளர்களே யென்பதுந் தெளித்துக்கூறி யிருக்கின்றார். இவ்வாறு திருவாக்கூரில் இருந்த வேளா ளர்கள் வள்ளன்மையால் மிக்கவர்கள் என்பது மூன்றாஞ் செய்யுளிற் கூறப்பட்டிருத்தலால், இதற்குப்பின் ஒன்பதாஞ் செய்யுளில் வரும்,

"இன்மையாற் சென்றிரந்தார்க்கு
இல்லையென்னாது ஈந்துவக்குந்
தன்மையார்."

என்பதும் அவ் வேளாளரையே குறிப்பதாதல் சிறுமகா ராறும் உணரற்பாலதேயாம் அற்றேல், இத்துணை எளிதில் உணரக்கிடப்பதாகிய இத தேவாரப் பதிகப்பொருளை ஆய்ந் துணராமல் ஆசிரியர் சேக்கிழார் அதனை 'வேதியர்' மேல் ஏற்றியது என்னை யெனின்; 'வேதியர்' என்னும் சொல்லைக் கேட்ட அளவானே, இக்காலத்துப் போலிச் சொல்வழக் கைக் கொண்டு அக்காலத்து வழங்கிய அதற்கு ஆரியப் பார்ப்பனர் என்று பொருள் கோடல் சிறிதும் பொருந் தாது; 'வேதங்கள்' என்பன ஆரியவேதங்களே என்று கோடலும் பொருந்தாது.

---

## உக. பழைய வேதங்களென்பன தமிழ்மறைகளேயாம்

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகை யுறுதிப்பொருள்களைக் கூறிய பழைய தமிழ்நூல்களே "நால்வேதம்' எனவும், 'நான்மறை' எனவுந் தமிழ்மொழிக் கண் வழங்கப்பட்டன. பண்டைக்காலத்து வழங்கிய தமிழ் நான்மறைகள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகை யுறுதிப்பொருள்களை உணர்த்துமென்பதும், அவை இறைவனால் ஆலமர நீழலின்கீழ் அருந்தவர் நால் வர்க்கு அறிவுறுத்தப்பட்டன வென்பதும்,

> "ஆல நீழல் அன்றிருந்து அறநெறி
> நால்வர் கேட்க நன்கினிது உரைத்தனை."

எனத் திருவெழுகூற்றிருக்கையில் ஆசிரியர் நக்கீரனும்,

> "அருந்தவருக்கு ஆலின்கீழ் அறம்முதலா நான்கினையும்
> இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ."

எனத்திருச்சாழலில் மாணிக்கவாசகப் பெருமானும்,

"அன்றாலின் கீழிருந்தங்கு அறம்புரிந்த அருளாளர்."

எனத் திருஞானசம்பந்தப் பெருமானும்,

"அன்றாலின் கீழிருந்தங்கு அறஞ் சொன்னானை."

எனத் திருநாவுக்கரசு நாயனாரும்,

"அன்றாலின் நீழற்கீழ் அறம்நால்வர்க் கருள்புரிந்து."

எனச் சுந்தரமூர்த்தி நாயனாரும் அருளிச் செய்யுமாற்றால் நன்கு விளங்கும்.

ஆரிய வேதங்களோ இவ்வாறு அறம் பொருளின்ப வீடுகளை உணர்த்துவன வென்றாதல், அவை சிவபிரானால் அருளிச் செய்யப்பட்டனவென்றாதல் பழைய ஆரியநூல் களுள் யாண்டுஞ் சொல்லப்படவில்லை. ஆரிய வேதங்களின் பிறப்பைப்பற்றிக் கூறும் பழைய ஆரியநூற் கூற்றுகளும் ஒன்றோடொன்று பெரிதும் மாறுபட்டு நிற்கின்றன; அம் மாறுபாடுகளுட் சில எண்டுத்துக் காட்டுதும்: "இருக்கு, சாமம், எசுர் என்பவற்றின் செய்யுட்கள் புருஷனைப் பலியாகவேட்ட வேள்வியினின்று பிறந்தன" என்று இருக்குவேதத்துப் 'புருஷசூக்தம்' (௧0, ௯0) மொழிகின்றது. இனி, "ஸ்கம்பம் என்னும் நிலைக்களப் பொருளி லிருந்து இருக்குமொழிகள் வெட்டியெடுக்கப்பட்டன, எசுர் மொழிகள் பிறாண்டி யெடுக்கப்பட்டன; அப் பொரு ளின் மயிர்களே சாமப் பாட்டுகள்; அதர்வ ஆங்கிரசப் பாக்கள் அதன்வாய்" (௧0, எ, ௨0) என்றும் "இருக்கு மொழி யிந்திரனினின்று பிறந்தது, இந்திரன் இருக்கி னின்றும் பிறந்தனன்" (௧௩, ௪, ௩அ) என்றும், "வேதங் கள் காலத்திலிருந்துண்டாயின" (௧௯, ருச, ௩) என்றும், "வேள்விக்குப்பின் எஞ்சிய எச்சிலிலிருந்து இருக்கு சாமப் பாக்களும், பாவகைகளும், புராணங்களோடு எசுரும், வானில் உறையும் எல்லாத் தேவர்களும் உண்டாயினர்."

(௧௧, ௭, ௨௪) என்றும் அதர்வவேதம் நுவல்கின்றது "வேதங்கள் அக்நி வாயு சூரியன் என்னும் மூன்றிற் றோன்றின." எனச் சாந்தோக்கிய உபநிடதம் புகல்கின்றது.

"ஈரவிறகில் உண்டாக்கின தீயிலிருந்து புகையின் பலவேறு திரிபுகளும் உண்டாதல்போல, இந்தப் பெரிய பொருளின் உயிர்ப்பிலிருந்து இருக்குவேத எசுர்வேத சாமவேதங்களும், அதர்வாங்கிரசுகளும், இதிகாச புராண வித்தைகளும், உபநிடதங்கள் சுலோகங்கள் சூத்திரங்கள் பல்வேறுரைகளும் உண்டாயின." (௧௪, ரு, ௪, ௧0) என்று சதபதபிராமணம் புகல்கின்றது. "வேதங்கள் பிரஜாபதியின் தாடிமயிர்கள்." (௩, ௩௯, ௧) என்று தைத்திரீய பிராமணங் கூறுகின்றது.

இவ்வாறு ஆரியவேதங்களின் பிறப்பைப் பற்றிப் பழைய ஆரிய நூல்கள் ஒன்றொடொன்று மாறுபட மொழிதல்போலவே, பின்றைக் காலத்து வடமொழி நூல்களும் அவற்றின் பிறப்பைப் பலவேறுபடக் கிளந்து மாறுபட்டு நிற்கின்றன. அம் மாறுபாட்டுரைகளுள்ளுஞ் சில இங்கெடுத்துக் காட்டுதும்: "பிரமாவின் வாயிலிருந்து வேதங்கள் பிறந்தன." (௩, ௧௨, ௩௪, ௩௭) எனப் பாகவத புராணமும், "வேதங்கள் காயத்திரியிலிருந்து உண்டாயின." (௧௧ரு௧௯) என அரிவம்சமும், "சரசுவதியே வேதங்களுக்குத் தாய்." (சாந்திபர்வம், ௧௨, ௯௨0) என மகாபாரதமும், "அவன் (விஷ்ணு) இருக்கு சாம எசுர் வேதங்களாய் இருக்கின்றான்." (௩, ௩, ௧௯) என விஷ்ணுபுராணமும் புகல்கின்றன.

இனி, வேதங்களை ஆக்கிய இருடியர்களோ தாந்தாமே அவ் வேதப்பாட்டுக்களைப் பாடியவர்களாக அவற்றின்கண் விளக்கமாய்ச் சொல்லியிருக்கின்றனர்; அவற்றுட் சில

வருமாறு: "கண்ணுவர்கள் நினக்கு ஒரு வேண்டுகோ ளுரையைச் செலுத்துகின்றனர்." (க, சஎ, உ) எனவுங், "குதிரைகளை நுகத்திற் பூட்டும் ஓ இந்திரனே, கோதமர்கள் நினக்குச் செவ்வையான பதிகங்களைப் பாடுமாறுசெய்." (க, கூச, கூக) எனவும், "ஓ அசுவினிகளே, நும்மைப் பெருமைப்படுத்தும் இவ் வேண்டுகோளுரைகளைக் கிரித்சமதர்கள் நினக்காகச் செய்தனர்." (உ, ௩௯, அ) எனவும், "பதிகங்களை ஆக்குவோனான விருகதுக்தன் ஏற்கற்பாலதும் மாட்சிமிக்கதும் ஆன ஒரு பதிகத்தை இந்திரனுக்குப் பாடினான்." (க0, ருச, கூ) எனவும் இருக்கு வேதத்தி னுள்ளேயே அவ்விருடிகள் சொல்லுதல் அறியப்படும். இங்ஙனம் இருடிகள்தாமே அப் பதிகங்களை ஆக்கினா ரென்பது அவ் விருக்குவேதத்தில் இன்னும் பல விடங் களிலுஞ் சொல்லப்பட் டிருக்கின்றது; அவையெல்லாம் ஈண்டெடுத்துக் காட்டப்புகின் இது மிகவிரியும்.

இங்ஙனமாக மேற்காட்டிய ஆரியமொழி நூலுரை களில் ஓரிடத்தாயினுஞ் சிவபிரான் ஆலநீழலிலிருந்து அருந்தவர் நால்வர்க்கு ஆரிய வேதங்களை அறிவுறுத்தின னென்னும் வரலாறு ஒருசிறிதுங் குறிப்பிடப் படாமை யால், தமிழ்நாட்டின்கட் பண்டுதொட்டுப் பழந்தமிழ் நூல் களில் வழங்கிவரும் அவ் வரலாறு, இறைவன் ஆலின் கீழமர்ந்து அருந்தவர்க்கு அறிவுறுத்தின தமிழ்மறை களையே குறிக்கும் அல்லாமல், இந்திரன் வருணன் முத லான சிறு தெய்வங்கள்மேல் ஆரியர் பாடிய பாட்டுக்கள் நிறைந்த இருக்கு எசுர் சாமம் அதர்வம் முதலான ஆரிய நூல்களைக் குறியாதென்று கடைப்பிடிக்க. உண்மை யிவ் வாறிருப்ப, இற்றைக்கு ஐந்நூறாண்டுகட்குமுன் தமிழ் நாட்டின்கண் இயற்றப்பட்ட வடமொழிக் கந்தபுராணத் தும், அதற்குச் சிறிதுகாலம் பிற்பட்டுக் கச்சியப்பசிவா

சாரியாரால் அதன் மொழிபெயர்ப்பாகச் செய்யப்பட்ட தமிழ்க் கந்தபுராணத்தும், இவ் வரலாறு ஆரியவேதங் களையே குறிப்பதொன்றாகப் பார்ப்பனர்களாற் கரவாய் ஒரு புரட்டுரை எழுதிச் சேர்க்கப்பட்டுளது. அவ்வாறு அவர் செய்தது தம் ஆரிய நூல்கட்குப் பெருமை தேடிக் கொள் ளுதற்கேயாம். மெய்யும் பொய்யும் பகுத்துணர மாட் டாமல், ஆரியர்க்கு அடிமைகளாய்த் திரியுந் தமிழ்ப்புலவர் சிலரும் இக் கந்தபுராணப் புளுகை ஒரு மேற்கோளாய் எடுத்துக்கொண்டு, 'ஆரியவேதங்களையே சிவபெருமான் அருந்தவருக்கு ஆலின்கீழ் அறிவுறுத்தினன்' எனக் கரை கின்றனர்; ஆயினும், இது மேற்காட்டிய ஆரியநூன் மேற் கோள்களுக்கெல்லாம் முற்றும் முரணுதல் காண்க. சிவ பெருமான் அருளிச் செய்தவைகள் எல்லாம், அறம் பொருள் இன்ப வீட்டின் இலக்கணங்கள் இன்னனவென்று விளக்கும் விளக்கவுரைகளும், அவற்றை எய்துதற்கு வாயி லாவன இவையாகலின் இவற்றைச் செய்கவென்னும் வியங் கோளுரைகளும், அவற்றைப் பயவாதன இவையாகலின் இவற்றைத் தவிர்கவென்னும் விலக்குரைகளுமாய்த் 'தொல் காப்பியம்,' 'திருக்குறள்' போல் இருக்குமே யல்லாமல், ஒப் புயர்வற்ற முழுமுதற் றெய்வமாகியதன்னின் எத்தனையோ படி கீழ்த்தாழ்ந்து பிறப்பு இறப்புத் துன்பங்களிற் கிடந் துழல்வாரான இந்திரன் வருணன் முதலிய சிறுதெய்வங் களை வேண்டிப்பாடும் வணக்கவுரைகளாய் இருத்தல் ஒரு வாற்றானும் இசையாதாகலின், இவ் வுண்மையினை நடுநிலை பிறழாது ஆராய்ந்தறிந்துகொள்க. எனவே, சிவபிரான் ஆலின்கீழிருந்து அறம் பொருள் இன்ப வீடுகளை அருந் தவருக்கு அறிவுறுத்திய அருமறைகள் தமிழ்நான்மறை களேயாம் என்பதூஉந் தெற்றெனவுணரற்பாற்று. இந் நால் வகை யுறுதிப் பொருள்களைச் சிறக்கக்கூறுந் திருவள்ளுவர்

திருக்குறள் 'மறை' எனவும் 'வேதம்' எனவும் பண்டு தொட்டு இன்றுகாறும் வழங்கப் படுதலுங் காண்க.

அற்றேல், 'வேதம்' என்பது வடசொல்லன்றோ வெனின் ; ஆரிய நூல்களில் மிகப் பழையதாகிய 'இருக்கு வேதத்தில்' வேதம் என்னுஞ் சொல் அறிவுநூல் என்னும் பொருளிற் காணப்படவில்லை. ஆனால், அதன் எட்டாவது மண்டிலம் ௯-ஆம் பதிகம், ௫-வது செய்யுளில் மட்டும் 'வேதேந' என்னும் ஒருசொற் காணப்படுகின்றது ; அங்கு அச் சொல் 'புற்கட்டினால்' என்னும் பொருளில் வழங்கப் பட்டிருக்கின்றது. எசுர்வேதத்திலும் 'வேதம்' என்னுஞ் சொற் புற்கட்டினுக்கே பெயராக வழங்கப்பட்டிருக் கின்றது. சாம வேதத்தில் வேதம் என்னுஞ் சொற் காணப் படவே யில்லை. மற்று இறுதிக் கண்ணதாகிய அதர்வ வேதத்திலேதான் அது முதன்முதற் காணப்படுகின்றது ; இவ் வதர்வவேதம் ஏனை மூன்று வேதங்களுக்கும் பிற்பட்ட காலத்தே தோன்றிய தென்பதற்கு, அவ் வதர்வவேதப் பாட்டொன்று[1] அம் மூன்று வேதப்பெயர்களோடு தன்னை யும் எடுத்தோதுமாற்றால் தெளியப்படும். எனவே, ஏனை மூன்று வேதங்களோடு அதர்வவேதப் பாட்டுக்களையுஞ் சேர்த்து வேதங்களை நான்காக்கிய காலத்திலேதான், ஆரியருந் தமிழரும் ஒருங்குசேர்ந்து தொகுத்து வகைப் படுத்திய அவ் வாரியமொழிப் பாட்டுகளுக்கு 'வேதம்' என்னும் பெயர் சூட்டப்படுவதாயிற்று.

இனி, இவ் வாரியமொழிப்பாட்டுகளை அங்ஙனம் வேதங்களாக்கிய காலந்தான் யாதோவெனின், அது மகா பாரதப் போர் நிகழ்ந்த காலத்திற்கும் பிற்பட்டதேயாம். யாங்ஙனமெனிற், சுக்கில எசுர் வேதத்தைச் சேர்ந்த சதபத

1 அதர்வவேதம், ௧௦, ௭, ௨௦.

பிராமணத்திற் பாண்டவரின் வழித்தோன்றலாகிய ஜந்மே ஜய பரிக்ஷித் என்னும் அரசன்பெயர் கூறப்படுதலானும், பாண்டவர் ஐவரில் ஒருவனுன சகதேவமன்னன் பெயரும், அவன் புதல்வனுகிய சோமகன் பெயரும், பீஷ்மரின் தந்தையாகிய சந்தநுவின் பெயரும், அவனுடன் பிறந்த தேவாபிமுனிவன் பெயரும் இருக்குவேதத்திற் காணப்படுத லானும், இத் தேவாபி முனிவனுற் செய்யப்பட்ட பதிகம் ஒன்றும் அவ் விருக்குவேதத்திற் சேர்ந்திருத்தலானும் இருக்குவேதப் பாட்டுகள் முற்றும் இவ் வரசர்கள் காலத் திற் செய்யப்பட்டனவல்ல வாயினும், அவையெல்லாம் ஒருங்குதொகுத்து வகுக்கப்பட்ட காலம் மேற்குறிப்பிட்ட மன்னர்கள் காலத்திற்கும் பிற்பட்டதேயாமென்பது மட்டுந் தெற்றெனத் துணியப்படும். இதனுற், பாண்டவர் காலத்த வரான வியாசரால் ஆரிய மொழிப் பாட்டுகள் வேதங்க ளாக வகுத்து ஒழுங்கு செய்யப்பட்டனவென்னும் வழக்கும், அதுபற்றியே அவர் 'வேதவியாசர்' எனப் பெயர்பெற்றனர் என்பதும் உண்மையாதல் காண்க இங்ஙனம் பாரதப் போர் நிகழ்ந்த காலத்திற்குப் பின்னே ஆரியமொழிப் பாட்டுகள் இருக்கு எசுர் முதலியனவாகப் பாகுபடுத்தப் பட்டபோதுதான் அவற்றிற்கு 'வேதம்' என்னுஞ் சொல் சூட்டப்படுவ தாயிற்று

இனி, அவ் வேதம் என்னுஞ்சொல் மறைநூல் என்னும் பொருளிற் பாரதப்போர்க்குப் பிற்பட்ட ஆரிய நூல்களிற் காணப்படுதல்போல, அப் போர்நிகழ்ந்த காலத் தும் அதற்கு முன்னுந் தோன்றிய ஆரியநூல்களிற் காணப் படாதாக, அவ் 'வேதம்' என்னுஞ் சொல்லும் அதனே டொத்த 'மறை' என்னுஞ் சொல்லும் அப் பாரதப்போர் நிகழ்ந்த காலத்தும் அதற்கு மிக முற்பட்ட காலத்தும் எழுதப்பட்ட செந்தமிழ்ப் பாட்டுகளிலே காணப்படுமாயின்,

அச் சொற்கள் தமிழர்க்கே உரியனவாமென்பது இனிது துணியப்படுமன்றோ? பாரதப்போர் நிகழ்ந்த காலத்தே முரஞ்சியூர் முடிநாகராயராற் பாடப்பட்ட "மண்டிணிந்த நிலனும்"[1] என்னும் மிகப் பழையசெய்யுளில் "நால் வேத நெறி" என 'வேதம்' என்னுஞ் சொல்லும், அது நால் வகைத்தாதலுங் குறிக்கப்பட்டமை காண்க. பாரதப்போர் நடைபெற்ற காலத்தில் ஆரியமொழிப் பாட்டுகள் நான்கு கூறுகப் பகுக்கப்பட வில்லையென்பதும், அவற்றிற்கு 'வேதம்' என்னும் பெயர் சூட்டப்பட வில்லையென்பதும் மேலே காட்டப்பட்டமையின், அவ் வாரியமொழி வேதங் களுக்கு முன்னே பாடப்பட்டதாகிய இச் செந்தமிழ்ப் பாட்டிற் குறித்துரைக்கப்பட்ட 'நால்வேதங்கள்' தமிழ் மறைகளே யாதலும், 'வேதம்' எனனும் பெயர் தமிழ்ச் சொல்லே யாதலும் நன்கு பெறப்படும்

இனிப், பாரதப்போர் நிகழ்தற்குப் பன்னூற்றாண்டுகள் முன்னிருந்த குமரிநாட்டில் அரசுபுரிந்த, 'பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக்' காரிகிழார் பாடிய "வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்"[2] என்னுஞ் செய்யுளில் "நான்மறை" என்னுஞ் சொற்றொடர் காணப் படுதலின், ஆரியமொழி வேதங்கள் தோன்றுதற்குப் பன் னெடுங்காலம் முன்னரே தமிழில் நான்கு வேதங்கள் உண் மையும், அவை 'மறை' என்னும் பெயரானும் வழங்கப் பட்டமையும் பெற்றும். முதுகுடுமிப் பெருவழுதி என் னும் பாண்டிய மன்னனும், அவனைப் பாடிய புலவர்களான காரிகிழார், நெட்டிமையார், நெடும்பல்லியத்தனார் என்னும் புலவர்களும் இப்போதுள்ள குமரிமுனைக்குத் தெற்கே பண்டைநாளில் நிலவியிருந்த குமரிநாட்டில் இருந்தவர்கள் என்பதற்கு, அக் குமரிநாட்டில் ஓடிய பஃறுளியாற்றை

1. புறநானூறு, ௨. 2. புறநானூறு, ௬.

நெடும்பல்லியத்தனார் என்னும் புலவர் "நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"[1] என எடுத்துக் கூறுமாற்றால் தெளியப்படும். பஃறுளியாறு ஓடிய பண்டைத் தமிழகமாகிய குமரி நாடு பின்னர்க் கடல்கொண்டமை, "பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"[2] எனப் போந்த சிலப்பதிகார அடிகளால் இனிது அறியப்படும்.

எனவே, பண்டைத் தமிழ் அறிவுநூல்கள் 'மறை' எனவும், 'வேதம்' எனவும் பெயர்கொண்டு வழங்கினமை தெள்ளிதிற் புலப்படும். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு கூறாக வகுக்கப்பட்ட பண்டைத் தமிழ் மறைகளின் விழுப்பமும் நுட்பமும் நன்குணர்ந்தே, தமிழரோடு உறவாடிய ஆரியர் பின்னர்த் தாங்கொணர்ந்த பாட்டுக்களையுந் தமிழ்ச்சான்றோர் உதவியால் நான்கு கூறாக வகுத்துக்கொண்டு, அவற்றிற்குத் தமிழர் வழங்கிய 'வேதம்' என்னுஞ்சொல்லையுஞ் சூட்டிவிட்டனர். குமரிநாடு கடல்வாய்ப்பட்ட காலத்திலேதான் தமிழ் வேதங்களும் ஏனைப் பல்லாயிரந் தமிழ்நூல்களும் நீரில் அமிழ்ந்திப் போயின. ஓர் அரக்கன் வேதங்களை யெடுத்துக்கொண்டு கடலில் அமிழ்ந்திப்போயினன் என்னும் பழைய புராண கதையுந் தமிழ்வேதங்கள் கடல்கோட் பட்ட உண்மையினையே தெரிப்பதாகும். முதலிலிருந்த தமிழ்வேதங்கள் இங்ஙனங் கடல்வாய்ப்பட்டனவேனும், அவற்றின்கட் கூறப்பட்ட பொருள்கள் தொன்றுதொட்ட வழக்காய்த் தொடர்ந்து வருதலின், அதன்பிற்றோன்றிய காலத்தில் ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் அவற்றை யெல்லாந் தமது அஃகா அறிவால் முழுதெடுத்துத்

1. புறநானூறு, ௯. 2. சிலப்பதிகாரம், ௧௧, ௧௭—௨0.

தொகுத்து வகுத்துத் திருக்குறள் இயற்றியருளினரென்க. அறம் பொரு ளின்பங்களை இலக்கண வகையால் விளக்கு வது 'தொல்காப்பியம்' என்றும், இலக்கிய வகையால் விளக்குவது 'திருக்குறள்' என்றும் உணர்தல் வேண்டும். இவ்விரண்டு நூல்களிலும் 'வீட்டியல்' சுருக்கமாகக் கூறப் பட்டமையின், அதனை விரித்து விளக்குதற்கே, 'ஆகமங் கள்' எனப் பெயரிய தமிழ்நூல்கள் பின்னர் எழுந்தன. இப்போது வடமொழியில் எழுதப்பட்டுள்ள சிவாகமங்க ளெல்லாம் பழையநாளிலிருந்த தமிழாகமங்களின் மொழி பெயர்ப்பேயாம். இஃது எற்றாற் பெறுதுமெனின்; இவ் வாகமங்களிலுள்ள சரியை கிரியை யோகம் ஞானம் என் னும் நால்வகைப் பொருள்களெல்லாந் தமிழ்நாட்டையுந், தமிழ்நாட்டிலுள்ள சிவபிரான் கோயில்களையுந், தமிழரது மெய்யுணர்வினியல்பையுமே பற்றியனவாய் இருப்பக் காண்டுமல்லது, ஆரியர் பெருந்தொகையினராய் வந்து குடியேறிய வடநாட்டையும் வடநாட்டுக் கோயில்களையும் வடவரது உணர்வினியல்பையும் பற்றியனவாய் இராமையும், வடக்கேயுள்ள மிகச் சிறந்த வடநூற் புலவர்களும் இச் சிவாகமநூற்பொருள்களை ஒருசிறிதும் உணராராயிருத் தலும் ஆகிய ஏதுக்களாற் பெறுதுமென்பது. தமிழ்மறை கள் கடல் கொண்டு மறைந்த பின்னரே, ஆரியமொழிப் பாட்டுகள் வேதங்களெனப் பெயர்பெற்று, ஆரியரது பெரு முயற்சியாற் பெரிது வழங்கலாயின.

அற்றேற், கடல்கோட்பட்டவை தமிழ்வேதங்களே யல்லாமல், ஆரியவேதங்கள் அல்லவென்பதற்குச் சான்று என்னையெனிற்; கூறுதும்: பண்டைநாளிலேயே தமிழ் மொழி எழுத்துவடிவில் எழுதப்பட்டு வந்ததொன்றாகும்; அவ்வுண்மை,

"உட்பெறு புள்ளி யுருவா கும்மே."

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"

"எகர ஒகரத் தியற்கையும் அற்றே."

"புள்ளி இல்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை யுயிரோடு உருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே."[1]

என்றற் றொடக்கத்துத் தொல்காப்பியச் சூத்திரங்களால் ஐயுறவின்றித் துணியப்படும்; இவ்வாற்றால், தொல்காப்பியனார் காலத்துக்கு முற்றொட்டே தமிழ்நூல்கள் வரிவடிவில் எழுதப்பட்டு வந்தமை தேற்றமாம். ஆகவே, ஏட்டுச் சுவடிகளாயிருந்த தமிழ்மறைகளும், ஏனை எண்ணிறந்த தமிழ்நூல்களுங் கடல்வாய்ப் புக்கமையே உண்மை நிகழ்ச்சியாதற்கு ஏற்புடைத்து. மற்று, ஆரியவேத காலத்தில் ஆரியர் தமது மொழியை எழுத்துவடிவில் எழுதத்தெரிந்தார் அல்லர்; அதனால் அவர் வேதப்பாட்டுக்களையும் பிறவற்றையுங் கிடைகூட்டி நெட்டுருப்பண்ணியே பாதுகாத்து வந்தனர். அவர்களுடைய ஆரியநூல்கள் ஏட்டுச் சுவடிகளாயிருந்ததேயில்லை. தம்முடைய நூல்களைக் கிடைகூட்டி நெட்டுருப்பண்ணிச் சொல்லும் ஆரியரது வழக்கம், அவ்வாரியரை முழுதும் பின்பற்றிய பார்ப்பனர்பால் இன்றும் நடைபெறக் காணலாம். இங்ஙனம் ஏட்டுச்சுவடிகளா யில்லாமல், ஆரியர்தம் நினைவளவாய் வழங்கிய ஆரியவேதங்கள் கடல்வாய்ப் புகுதல் ஆகாமையாற், கடல்கொண்டு மறைந்தன தமிழ்மறைகளேயாமென்பதூஉம், அங்ஙனம் மறைந்த தமிழ்மறைகளையே இறைவன் மக்கள் உய்யவேண்டி ஆசிரியர் திருவள்ளுவநாயனார் வாயிலாக வெளிப்படுத்தருளினனென்பதூஉம் அறியப்படும். தமிழ்மறைகள்

---

1. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சூ. கசு, கரு, கசு, கஎ.

வழங்கிய காலத்து உடன் வழங்கி, அவற்றின் பொருள்களை இலக்கண வகையால் விரித்தோதிய தொல்காப்பியம் ஒன்றுமே, அம் மறைகளின் பழைய வழிநூலாய் இப்போ தெஞ்சிநிற்பதாகும். மற்றுத் திருக்குறளோ அம் மறைகளுக்குப் பின் அவற்றின் பொருள்களை ஆண்டுள்ளவாறே பெரும்பாலும் எடுத்து இலக்கியவகையால் விளக்குவதாகும் என்று உணர்ந்துகொள்க.

அற்றேல், தமிழ்நான்மறைகள் வழங்கியகாலத்து உடன் வழங்கிய தொல்காப்பியங் கடல்வாய்ப்படாமல் இன்றுகாறும் வழங்கிவராநிற்ப, அத் தமிழ்மறைகள் மட்டுங் கடல்வாய்ப் புக்கது என்னையெனின்; அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கில் இலக்கண வகையாலும் இலக்கிய வகையாலும் அரிதுணர் பொருளனவாய்க் கிடந்த அரும்பொருள்களை, அவை தம்மை ஆராவேட்கையோடு ஏற்றுப் பயன்படுத்தத் தக்கார்க்குமட்டும் மறைவாய் அறிவுறுத்துவனவே 'மறைகள்' ஆகும்; அத் தகுதிப்பாடு இல்லாதார்க்கு அந் நுண்பொருட் பெற்றிகளை அவை உணர்த்துவன அல்ல. ஆகவே, மறைகள் எல்லார்மாட்டும் பரவி வழங்குவனவும் அல்ல. தகுதியுடையார் சிலர்க்குள் மட்டும் வழங்கி, அவர் இல்லையானவழி அவைதாமும் இல்லையாதலே மரபு. பண்டைத் தமிழகமாகிய குமரிநாட்டில் உயிர்வாழ்ந்த பண்டைத் தமிழ் மக்கள், தமது நாட்டின் நிலவள நீர் வளத்தானுந், தமக்குள்ள அறிவு அன்பு அருள் கடவுள்வழிபாடு முதலான நலங்களானும் நாகரிகத்தில் நாளுக்குநாட் பிறைவளருமாறு போல் வளர்ந்து வந்தனர். அந் நாளிற் கடவுளின் திருவருட் பேரின்பத்தைப் பெறத்தக்க பெரியாரும் அவருட் பலர் மிகுந்திருந்தனர். அதனாற் கடவுளின் பேரருளும் அவர்பாலிருந்து அவர்க்கு இம்மை மறுமைக்குரிய உதவி

களையெல்லாம் ஆற்றிவந்தது. அவ்வாறு இறைவனருளை அவர்க்கு உதவியாய் நின்று, அவரிற் சான்றோராயிருந்தாருள்ளத்தை உந்தி வந்தமையினாலேயே, அச் சான்றோர்பால் நின்றுந் தமிழ்மறைகள் தோன்றித் தக்கார்க்குப் பயன்படலாயின. இங்ஙனமெல்லாம் நாகரிக வாழ்க்கையிற் சிறந்தோங்கி வந்த பண்டைக் குமரிநாட்டுத் தமிழ்மக்களின் கால்வழியில் வந்தோர் காலஞ்செல்லச் செல்லத், தாம் பெற்ற பொருட் செல்வத்திலும் அதன்வாயிலாகவருஞ் சிற்றின்ப விளையாட்டிலும் இறங்கித், தம் முன்னோர்க்குரிய அன்பு அருள் கடவுள்வழிபாடு என்பவைகளில் வழுவித், தீய ஒழுக்கத்தினராய் மாறவே, அவருட் சான்றோராயினர் தொகை சுருங்கிற்று; அவரைத் திருத்துதற்கு வழியாவது அவர் மயங்கிய இம்மைச் செல்வத்தை யழித்தலேயெனத் திருவுளங்கொண்டு இறைவனுக்குஞ் சினம் மூண்டது. உடனே, தமிழ்நாட்டுக்கு வடக்கிலும் மேற்கிலுங் கடல்களாய் இருந்த பகுதிகள் நிலங்களாய் மாற, அக் கடல்கள் வற்றிய நீர் ஆவியாய் மேலெழுந்து, கடவுளின் திருவருளாணையாற் குமரிநாட்டிற் பொழிந்து பெருக்கெடுத்து அதனைக் கடலாக்கி அழித்தது. அக் காலத்து அழிந்துபட்ட அந் நாட்டில் முன்னே அருகி வழங்கிவந்த தமிழ்மறைகளும், பெருகிய வழக்கில் இல்லா ஏனை எண்ணிறந்த தமிழ்நூல்களும் அவ் வெள்ளத்தே புக்குமறைந்தன. மற்றுத், தொல்காப்பியமோ, அறம் பொருள் இன்ப வீடுபேற் றுறுதிப்பொருள் நுட்பங்களைத் தக்கார்க்கு மட்டும் அங்ஙனம் மறைவில் வைத்து விளக்குவதன்றாய், எல்லார்க்கும் புலனுமாறு அவற்றை இலக்கண வகையால் எடுத்து விரித்து விளக்குவதொன்றாய்த், தமிழ் கற்பார் எத்திறத்தவராயினும் அவர் எல்லார்க்கும் இன்றியமையாப் பெருநூலாய் இருந்தமையின், அதனைக் குமரிநாட்டில்

இருந்தார் மட்டுமேயன்றி, அதற்கு வடக்கின் கண்ணதான இத் தமிழ்நாட்டிலிருந்தாரெல்லாருங் கூடப் பயின்று பாதுகாத்துவந்தனர். அதனாற், குமரிநாட்டோடு உடனழியாது எஞ்சி நின்ற இத் தமிழ்நாட்டில் தொல்காப்பியம் இன்றுகாறும் வழங்கப்பெறுவதாயிற் றென்க.

பண்டைக் குமரிநாட்டில் இருந்தாரைப் போலவே, இவ் வுலக வாழ்வில் மயங்கி அருளொழுக்கத்தையுங் கடவுள் வழிபாட்டையுங் கைவிட்ட எகுபதியர், சாலடியர், அசீரியர், எபிரேயர், பெரூவியர், மெக்சிகர், கிரேக்கர், உரோமர் முதலான பழைய நாகரிக மக்களெல்லாருந், தம் நாகரிக வாழ்க்கையின் உச்சியைத் தொட்டுத் தலைதடுமாறிய சில பல நூற்றாண்டுகளுக்குப் பின், கடவுளது சினத்தால் அழிக்கப்பட்டு மறைந்தமை அவர்தம் வரலாறுகளால் நன்கறியப்படும். வடநாட்டிற் குடிபுகுந்த ஆரியரும் இங்ஙனமே தமது நாகரிக வாழ்வில் மயங்கத் தலைப்பட்டதும், அலக்சாந்தர் முதல் அடுத்தடுத்துப் படையெடுத்து வந்த அயல்நாட் டரசரால் அலைக்கப்பட்டுத் தமதுரிமையெல்லாம் இழந்துநிற்றல் காண்க. இத் தமிழ்நாட்டிற் செங்கோல் ஓச்சிய சேர சோழ பாண்டியர்கள் வேற்றரசரால் வெல்லப்படாத அத்துணை வலிமையுடையராய் ஐயாயிர ஆண்டுகளுக்குமேல் அரசு புரிந்தும், பின்னர் ஆரியர் மாயத்துள் அகப்பட்டு உயிர்க்கொலை வேள்விகள் வேட்டுச் சிவத்தை மறந்தமையினாலேதான் அவர்களும் இப்போது இல்லாதே போயினர். மாணிக்கவாசகருந் திருஞானசம்பந்தரும் புத்தர் சமணர்களைவென்று, சைவ சமயத்தை உயிர்பெற்று எழச் செய்தபின், ஆரியப்பார்ப்பனர் அதுவே வாயிலாகத் தமதுயர்வை நாட்டவுஞ் சிவத்தை மறைக்கவும் முயன்ற தீய முயற்சிக்கு ஒத்து நின்றமையினாலேயே சைவ மக்கள் தேவாரப் பதிகங்கள்

எண்ணிறந்தவற்றை இழந்து தமது பெருமையிலுங் குன்றிப் போனார்கள்! இங்ஙனமே தமிழையுஞ் சிவத்தையும் மறந்தமையால் தமிழர்கள் நாளடைவில் இழந்துபோன நூல்களும் எண்ணிறந்தன! நலங்களும் எண்ணிறந்தன! இவ்வளவுக்குந் தப்பிப் பிழைத்துத் தொல்காப்பியமுந் திருக்குறளும் ஏனைத் தமிழ்நூல்கள் சிலவும் இன்னும் யாம் காணக்கிடைத்திருப்பதை நினையுங்கால், இன்னுந் தமிழ் மக்களில் தக்கார் சிலர் உளரென்பதும், அதனால் எல்லாம் வல்ல சிவத்தினருள் தமிழர்க்குந் துணையாய் இன்னும் உதவுகின்றதென்பதும் புலனாம். ஆகவே, தமிழிலக்கண மறையாகிய தொல்காப்பியந், தன்காலத்து உடன் வழங்கிய தமிழ்மறைகள்போல் தக்கார்க்குள் அருகிய வழக்காயின்றி, தமிழ் நாடெங்கணும் பெருகிய வழக்காய் இருந்தமையினாலேதான், அஃது இன்றுகாறும் வழங்குகின்றதெனை ஓர்ந்து கொள்க. அதுகிடக்க.

'மறை' என்பது பருப்பொருளறிவினார்க்கு விளங்காத நுண்ணிய மறைபொருள்களை உணர்த்துதல் பற்றி அறிவு நூல்களுக்குப் பெயராக அமைக்கப் பட்டாற்போல, 'வேதம்' என்னுஞ் சொல்லுந் தமிழ்ச் சொல்லாயின் அதுவும் அத்தகையதொரு பொருளைத் தருதல் வேண்டுமாலெனின்; 'வேய்தல்' என்னுஞ் சொல் 'மூடுதல்' என்னும் பொருளை யுணர்த்துதல் பழைய நூல்களிற் காணப்படுகின்றது[1]; இக் காலத்தும் வீடு கூரைமூடுதலைக் 'கூரை வேய்தல்' என்ப. இவ் வேய்தல் என்னுஞ் சொல்லுக்கு முதனிலை 'வே' என்பதே யாகையால் அதனடியாய்ப் பிறந்த 'வேதம்' என்னுஞ் சொல் 'மூடுபொருள் உடையது' அல்லது 'மறைபொருள் உடையது' என்னும் பொருட்டா

1. புறப்பொருள்வெண்பாமாலை, ௧௦, ௧௧.

வதேயாம்.[1] ஆகவே, 'மறை' 'வேதம்' என்னுந் தமிழ்ச் சொற்க ளிரண்டும் ஒரு பொருள் குறித்த பல சொற்களா மென்க. இவ்வாற்றால், 'வேதம்' என்பது பழைய தமிழ்ச்

1. 'வேதம்' என்பது 'வே' என்னும முதனிலையிற் பிறந்த தமிழ்ச் சொல்லாயின், அதற்குப் பகுபத இலககணம் யாது? என் றொருவர் எம்மை வினுயினுர். 'வே' என்பது பகுதி (முதனிலை), 'அம்' என்பது விகுதி (இறுதிநிலை), த் என்பது இடையே எழுத் துப் பேறு அல்லது விரித்தல். அற்றேல், 'வெய்தல்' என்பதில் முதனிலை 'வேய்' என நின்றற்போல 'வேதம்' என்பதன் கண்ணும் 'வேய்தம்' என நிற்றல்வேண்டுமாலெனின்; அறியாது கூறினுய்: ஒரு முதனிலை ஒரு பொருளை யுணர்த்துங்கால் ஒரு வகையான எழுததுப் பேறு பெற்றும், அதுவே வேறொரு பொருளை யுணர்த் துஙகால் வேறொரு வகையான எழுத்துப் பேறு பெற்றும் பல வகையாற் றிரிபெய்திப் பற்பல சொற்கள் பிறத்தற்கு இடனுய் நிற்கும். அங்ஙனம் ஒரு முதனிலை பலவேறு பொருளுடைய பல சொற்களைப் பிறப்பிககுங்கால், தான் முதன்முதல் உணர்த்தும் பொருளும், பின்னர்ப் பலப்பல சொற்களில் இயைந்து நின்று உணர்த்தும்பொருளும் உவம உருவக வகையால் ஒன்றோடொன்று தொடர்புடையனவாயே யிருக்கும். இவ் இயல்புகளை 'வேதம' என்னுஞ் சொல்லுக்கு முதனிலையான 'வே' என்பதினின்றே காட்டுதும் 'வே' என்னும் முதனிலைக்கு முதன்முதல் உண் டான பொருள் 'தீயிற்பட்டு அல்லது தீயின் சேர்க்கையால் ஒரு பொருள் வேகுதலே' யாகும். இப் பொருளை யுணர்த்துந தமிழ்ச் சொற்களில் 'வேகுதல்' 'வேக்காடு' என்பவற்றின் முதனிலை ககர ஒற்றுப் பெற்று 'வேக்' என நிற்கும்; 'வேடை,' 'வேட்டல்' என்ப வற்றின் முதனிலை டகர ஒற்றுப் பெறறு 'வேட்' என நிற்கும்; 'வேதல்,' 'வேதி' 'வேது' என்பவற்றின் முதனிலை தகர ஒற்றுப் பெற்று 'வேத்' எனநிற்கும்; 'வேவு' என்பதன் முதனிலை வகர ஒற்றுப்பெற்று 'வேவ்' எனநிற்கும்; 'வேள்வி' என்பதன் முதனிலை ளகர ஒற்றுப்பெற்று 'வேள்' எனநிற்கும்; 'வேனல்,' 'வேனில்' என் பவற்றின் முதனிலை னகர ஒற்றுப்பெற்று 'வேன்' என நிற்கும். இனி, 'வே' என்னும் முதனிலை 'வெ' எனக்குறுகி அப் பொருள் படும் பல சொற்களைப் பிறப்பிக்குமிடத்தும் அங்ஙனமே பல்வேறு

சொல்லே யாதலும், அது பின்னர் ஆரியரால் எடுத்துத் தமது பழைய நூலுக்குப் பெயராக வழங்கப்பட்டமையுந் தெளிந்துகொள்க. அஃது யாங்ஙனம்? வடசொற்களே

---

ஒற்றெழுத்துக்களைப் பெற்று நிற்கும்; வெக்கை, வெசகு, வெட்டை, வெண்டல், வெதுப்பு, வெந்திப்பு, வெந்தை, வெப்பம், வெம்பல், வெயில், வெய்து, வெவவிது என்பவற்றின் முதனிலைகள் முறையே வெக், வெச், வெட், வெண், வெத், வெந், வெப், வெம், வெய், வெவ எனப் பலவே றொற்றுக்கள் பெற்று நிற்றல் காண்க.

இனி, இவ 'வே' என்னும் முதனிலை வேறு பொருள்களை யுணர்த்துமாறு காட்டுதும். ஒரு பொருளை வேவுவிக்குங்கால், அதனை ஒரு பாண்டத்தின் உள்ளே நீரிற்பெய்து, அப் பாண்டத்தின் வாயை ஒரு தட்டிட்டு மூடித் தீமேல் வைத்து வேவுவிக்கக் காண்கின்றோம். அவ் வொப்புமை பற்றி 'வே' என்னும் முதனிலை மூடுகின்ற அல்லது மறைக்கின்ற பொருள்களையும் இரண்டாவதாக உணர்த்தும்; இப் பொருளில் 'வேடு' என்பது மூடுசீலையினையும், 'வேதல்' என்பது வீடுகூரை மூடுதலையும், 'வேதம்' என்பது மூடு பொருளையுடைய நூலினையும், 'வேயுள்' என்பது மூடப்பட்ட வீட்டினையும், 'வேய்தல்' என்பது கூரைமேய்தலையும், 'வேலி, என்பது ஓரிடத்தைச் சுற்றிக் காவலாய் மறைப்பதையும், 'வேவு' என்பது மறைந்து நின்று செய்தியறியும் ஒற்றரையும் உணர்த்தாநிற்கும்; இச சொற்களின் முதனிலைகளும் மேற்காட்டியவைகளைப் போலவே 'வேட்,' 'வேத்,' 'வேய்,' 'வேல்,' 'வேவ்' எனப் பலவேறு ஒற்றுக்கள் பெற்று நிற்றல் காண்க; அவ்வாறு பலவேறு ஒற்றுக்கள் பெற்றுநிற்பினும், அம் முதனிலைப் பொருள் அவையெல்லாவற்றி னுள்ளும ஊடுருவி நிற்றல் இனிது விளங்காநிற்கும். இங்ஙனமாக, 'வேதம்' என்னுஞ் சொல்லின் முதனிலை தமிழ்ச்சொற்கள் பல வற்றில் நின்று மூடுபொருளை யுணர்த்திநிற்கக் காண்டலானும், அவ்வாறது வடமொழிக்கண் நிற்பக் காணுமையானும், அச் சொல் தமிழ்ச்சொல்லே யாதல் தெளியப்படும். ஈண்டுக் காட்டிய இச் சொல்லாராய்ச்சியை இன்னும் விரிப்பிற்பெருகும். ஆதலால், யாம் இருபத்தைந் தாண்டுகட்குமுன் ஞானசாகர முதற்பதுமத்தி லெழுதிய 'தமிழ் வடமொழியினின்று பிறந்ததாமா?' என்னுங் கட்டுரையில் இவ் வாராய்சசி முறையைக் கண்டுகொள்க.

தமிழில் வந்து வழங்கக் காண்டுமன்றித், தமிழ்ச் சொற்கள் அவ்வாறு வடமொழிக்கட் சென்று வழங்குதல் கண்டில மாலெனின்; இது மொழியாராய்ச்சி யில்லாதார் கூற்றும். இருக்குவேத காலந் தொட்டே பல்லாயிரந் தமிழ்ச் சொற் கள் வடமொழிக்கட் புகுந்து வழங்கலாயின. அவற்றுட் பலவற்றைத் 'தமிழ் வடமொழியினின்று பிறந்ததாமா?' என்னும் எமது கட்டுரையில் ஞானசாகர முதற்பதுமத்தில் நெடுநாட்கு முன்னரே எடுத்துக் காட்டி விளக்கியிருக் கின்றேம். அதுவேயுமன்றிப், 'பிரயோக விவேக' நூலா சிரியர் வடமொழியில் தமிழ்ச் சொற்கள் உண்டென்பதனை உடன்பட்டு அவற்றுட் சில காட்டுதலானும், இன்னோரன்ன மொழிநூ லாராய்ச்சியில் மிகச் சிறந்த அறிவினராய் விளங்கிய கால்ட்வெல் ஆசிரியர் வடமொழி இலத்தீன் கிரீக் முதலான பல மொழிகளிலும் புகுந்து வழங்கிய பன்னூறு தமிழ்ச்சொற்களை நன்கெடுத்துக் காட்டி விளக்குதலானும் எமதுரை யுண்மையாதல் கண்டுகொள்க. இதுகாறுங் கூறியது கொண்டு, 'வேதம்' என்னுஞ் சொல் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள்களைக் கூறும் நான்கு தமிழ் வேதங்களையே உணர்த்தலும், அதனடியாகப் பிறந்த 'வேதியர்' என்னுந் தமிழ்ச் சொல் லும் அத் தமிழ்நான்மறைகளை யுணர்ந்த வேளாள அந்தண ரையே குறித்தலும் நன்கு பெறப்படுதலால், திருஞானசம் பந்தப் பெருமான் தாம் அருளிச் செய்த திருவாக்கூர்த் தேவாரத் திருப்பதிகத்திற் குறிப்பிட்ட வேளாளரை ஆசிரியர் சேக்கிழார் 'வேதியர்' எனக் கூறியதில் ஏதும் மாறுபா டில்லையென உணர்க; ஆண்டுக் குறிப்பிடப் பட்ட 'வேதியர்' இக் காலத்துப் பொருந்தா வழக்குப் பற்றி 'ஆரியப் பார்ப்பனர்' என்று பொருள் பண்ணிக் கொண்ட எதிர்ப் பக்கத்தவர் கொள்கையே பெரிதும் பிழைபா

நாம் என்க. ஆரியப் பார்ப்பனரை ஈகையிற் சிறந் தாராகக் கூறுந் தமிழ்நூல் வடநூல்கள் யாண்டுங் காணப் படாமையின், ஈகையிற் சிறந்த மாட்சியை வேளாளர்மேல் வைத்துப் பாடிய திருஞானசம்பந்தப் பெருமானது திரு வாக்கூர்ப் பதிகத்தை இரத்தற் றொழிலையே கடனுக் கொண்ட ஆரியப் பார்ப்பனர்மேல் வைத்துரைத்தல் சேக் கிழார் திருவுள்ளக் கருத்தாகாதென் றொழிக.

அற்றேற், பழைய தமிழ்நூலாகிய 'திவாகரம்,' "ஆதி நூலென்பது வேதநூற் பெயரே" என்று ஓதிப், பின்னர் அதனை ஆரியவேதங்களாகிய இருக்கு முதலிய வற்றின்மேல் வைத்துக் கூறுதல் என்னையெனின்; 'திவாகரம்' மிகப் பழமையான தமிழ்நூல் அன்று. அது கடைச்சங்ககாலத்து நூல்கட்கும், மாணிக்கவாசகப் பெருமான் காலத்திற்கும், 'பிருகற்பதி,' 'காத்தியாயநம்,' 'பராசரம்' முதலிய மிருதிநூல்களின் காலத்திற்கும், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் உண்டான 'பிரமம்,' 'நாரதீயம்,' 'வாமநம்,' 'வராகம்,' 'பாகவதம்,' 'வைணவம்' முதலான புராணங்களின் காலத்திற்கும் பிற்பட்டதொன் றென்பதற்கு, அது பிற் சொல்லிய நூல்களை இறுதித் தொகுதியிற் குறிப்பிடுதலே சான்றாம். அஃது அன்ன தாதலை 'மாணிக்கவாசகர்காலம்' என்னும் எமது நூலுள் விரித்து விளக்குதும், ஆண்டுக் கண்டுகொள்க.

இனித், திவாகரமுனிவராற் சிறப்பித்துரைக்கப்பட்ட 'அம்பற்சேந்தன்' என்னும் மன்னன் கடைச்சங்க காலத் தவன் என்றும், அதனால் திவாகரங் கடைச்சங்க காலத்தே இயற்றப்பட்ட தொன்றாம் என்றுங் கூறினாரும் உளர். அவர் கூற்றுப் பொருந்தாது. 'சேந்தன்' என்னும் அரசன் பெயர் கடைச்சங்ககாலத்து நூல்களில் யாண்டுங் காணப்

படவில்லை. 'அம்பர்கிழான் அருவந்தை' என்னும் ஓர் அரசன் பெயரும், அவன்மேற் பாடப்பட்ட செய்யுள் ஒன்றும் மட்டும் புறநானூற்றிற்[1] காணப்படுகின்றன. 'அம்பர்கிழான் அருவந்தை' என்னும் பெயர்க்குமேற் 'சேந்தன்' என்னும் பெயருஞ் சேர்ந்த தொடர்மொழி கடைச்சங்ககாலத்து நூல்களிற் காணப்படாமையின், 'அருவந்தை' என்னும் மன்னனே அச் சங்ககாலத்தவ னென்பது பெறப்படுமல்லது, சேந்தனும் அக் காலத்தவ னென்பது பெறப்படமாட்டாது. அற்றேல், "ஆடவர் திலகன் அம்பன் மன்னன், ஈடிசைத் தலைவன் அருவந்தைச் சேந்தன்" என்று திவாகரங் கூறுதல் என்னையெனின்; அம்பல் நகரை அரசாண்ட அருவந்தை என்னும் அரசன் கால்வழியில் வந்தோன் சேந்தன் என்பதே அதற்குப் பொருளாகலின் 'அருவந்தைச் சேந்தன்' என அஃது அவ் விருவரையும் ஒருங்குசேர்த்து ஓதுவதாயிற் றென்க. எனவே, அம்பல்நகரை ஆண்ட அருவந்தை என்பவன் வேறு, அவன் வழியில் வந்து பின்னர் அதனை ஆண்ட சேந்தன் என்பவன் வேறென்பதே துணியப்படுமாகலிற், சேந்தன் சங்ககாலத்தவன் அல்லனென்பதூஉம், அல்ல னாகவே அவன் காலத்ததாகிய 'திவாகரமும்' சங்ககாலத் ததன் றென்பதூஉம் உடன் துணியப்படு மென்க

அற்றேற், கடைச்சங்க காலத்தவளாகிய ஔவையாற் பாடப்பட்டவன் சேந்தன் எனபது போதர "ஔவை பாடிய அம்பற்கிழவன், தேன்றூர்ச் சேந்தன்" என்று திவாகரங் கூறுதல் என்னையெனின்; ஔவையென்னும் பெயர் கொண்ட பெண்பாற் புலவர் பலர் இருந்தனர். அவருட் சங்ககாலத்திருந்தவர் வேறு, சேரமான் பெருமாள் காலத்திருந்தவர் வேறு. சேரமான் பெருமாள் கைலைக்குச்

1. புறநானூறு, ௩௮௫.

சென்ற காலையில் உடன்சென்ற ஔவையார் பாடிய செய்யு ளொன்று தமிழ்நாவலர் சரிதையிற் காணப்படுதலானும்,

> "தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியுங்—கோவை
> திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
> ஒரு வாசகமென் றுணர்."

என்னும் ஔவையார் செய்யுளிற் சுந்தரமூர்த்திநாயனார் அருளிச்செய்த தேவாரங் குறிப்பிடப்படுதலானுங், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிவரையிற் சுந்தரமூர்த்தி நாயனாரும் அவர் தோழரான சேரமான் பெருமாள் நாயனா ரும் இருந்தமை மேலே காட்டப்பட்டமையின் அவர் அருளிச்செய்த தேவாரத்தைக் குறிப்பிட்ட ஔவையார் அவ்வொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலன்றி அதற்கு முன்னிருந்தவராதல் செல்லாமையானுஞ், சங்ககாலத்து ஔவைப் பாட்டுக்களின் தமிழ்நடையும் ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்த ஔவைப் பாட்டுக்களின் தமிழ்நடை யும பெரிதும் வேறுபட்டு நிற்றலானும், முதல் ஔவையாற் பாடப்பெற்ற அரசர்களின் காலங் கி. பி. முதல் நூற்றாண் டின் கண்ணதாயிருப்ப இரண்டாம் ஔவையாற் பாடப் பெற்றார் காலங் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின்கட் படுத லானும், அம்பர்கிழான் அருவந்தைச் சேந்தனைப் பாடிய ஔவையார் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்த வேறொருவரேயாவரென்று துணிந்துகொள்க. எனவே, அம்பற் சேந்தனைப் பாட்டுடைத் தலைமகனுக் கொண்ட 'திவாகரம்' கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியி லாதல் பத்தாம் நூற்றாண்டின் துவக்கத்திலாதல் இயற்றப் பட்டதாகல் வேண்டுமென்க. ஆகவே, தமிழ் வேதங்கள் மறைந்தபிற் பலநூற்றாண்டுகள் கழிந்து, ஆரியரும் ஆரியப் புரட்டும் மலிந்த பிற்காலத்தே இயற்றப்பட்டதாகிய

'திவாகரம்' ஆரிய வேதங்களை முதல்நூல் என்று உயர்த்துக் கூறுதல் ஒருவியப்பன்று; அதுபற்றி யாம் கூறியது பிழை படுதலும் இல்லையெனத் தெளிக.

ஆகவே, பண்டைக் காலத்திற் றமிழில் வழங்கிய நான் மறைகளே 'நால்வேதங்கள்' எனக் கூறப்பட்டனவென்ப தூஉம், அவ் வேதங்களைப் பயிலுதற்கும் கடவுள் வழிபாடு ஆற்றுதற்குமாக வேளாளரினின்றும் பிரித்து ஒரு தனி வகுப்பினராக வைக்கப்பட்ட தமிழ் அந்தணரே 'வேதியர்' என ஆசிரியர் சேக்கிழாராற் சொல்லப்பட்டனரல்லது அவர் ஆரியப் பார்ப்பனராதல்பற்றி அப் பெயராற் கூறப் பட்டனரென்பது பொருந்தாதாமென்பதூஉம், இங்ஙனங் கொள்ளாக்கால் திருவாக்கூரிலிருந்த அந் நன்மக்களை வேளாளரெனவே வெளிப்படையாகக் கூறிய திருஞான சம்பந்தப்பெருமான் திருமொழியொடு முரணிச் சேக்கிழார் கூற்று வழுவுடைத்தாய் முடியுமென்பதூஉம் நன்கு பெறப் படுதல் காண்க. இவ்வாறெல்லாம் பெறப்பட்டதன் முடிபாய், எவ்வாற்றானும் உயர்ந்த தமிழ் நாகரிக நன்மக்க ளாகிய வேளாளரைச் சூத்திரரென இழித்துக் கூறுதல் வேளாண்டலைவராகிய சேக்கிழார்க்கும் ஆசிரியர் தொல் காப்பியர் முதலான ஏனைத் தொல்லறிவாளர்க்குங் கருத்தன் றென்பதூஉம் இனிது விளங்குமென்க.

## உஉ. மக்கட் பிறவியின் இழிவும் ஒப்பும்

இனி, வேளாளர் அல்லாத ஏனைப் பதினெண் வகுப்பினுள்ள மக்களிற் கொலை புலை தவிர்ந்து கல்வியறிவு ஆற்றல்களினும் நாகரிகத்தினும் உயர்ந்து வருவாரை வேளாள வகுப்பினர் தம்மினத்திற் சேர்த்துக்கொள்ளலாமோ? என்று நிகழும் வினாவினையுஞ் சிறிது ஆராய்வாம். மக்களின் தோற்றத்தையும் அவர்தம் நாகரிக வளர்ச்சியையும் ஆராய்ந்துரைக்கும் உண்மை நூல்களை[1] நாம் பயின்றறியுங்கால், மிகவும் பழையதாகிய காலத்தில் மக்கள் எல்லாரும் விலங்கினத்தோ டொத்த அறிவுஞ் செயலும் உடையராய்த் தினைத்துணையும் நாகரிகம் அற்ற நிலையில் இருந்து, பின்னர் அறிவு வளரவளரச் சிறிது சிறிதாக நாகரிகத்திலும் வளர்ந்து வரலாயினரென்னும் உண்மை நன்கு விளங்கும். இப்போதுங்கூடப் பிள்ளைப்பருவத்தில் இருக்கும் நாட்களில் எல்லா இனத்துப் பிள்ளைகளும் ஏறக்குறைய ஒத்த இயற்கையுடையராகவே காணப்படுகின்றனர்; பின்னர் வளருந்தோறுந் தாந்தாஞ் சார்ந்த முதுமக்களின் பழக்க வழக்கங்கள் பேச்சுகள் முதலியவற்றைத் தழுவி, அவற்றிற்கு ஏற்ற அறிவுஞ் செயலுந் தன்மைகளும் உடையராய்ப் பல்வேறு இனங்களாகப் பிரிபடுகின்றனர். மக்கள் எல்லாரும் புழைகள் ஒன்பதின் வாயிலாக வெளிவரும் மலங்களும் முடைநாற்றங்களும் உடையர்; பசியும் நீர் விடாயும் எல்லாரையும் வருத்துகின்றன; எல்லார்க்கும் நோயுந் துன்பமுங் கவலையும் நரை திரை மூப்புச் சாக்காடுகளும் உள்ளன; சிலநேரங்களில் நல்ல இயல்புகளுஞ் சில நேரங்களில் தீய இயல்புகளும் எல்லாரிடத்தும் நிகழ்கின்

1. See, for instance, Lord Avebury's Pre-historic Times or S. Laing's Human Origins.

றன. காலம் வந்துழி எல்லாரும் இவ்வூனுடம்பைவிட்டுச் செல்பவர்களே யல்லாமல் நிலையாக இங்கிருப்பவர் எவருமே இலர். எல்லாரும் ஒரு முழுமுதற் கடவுளாற் படைக்கப் பட்டு, அவனருளைப் பெறுதற்காக, இந் நிலவுலகமாகிய கல்விக்கழகத்தில் வந்து அதற்குரிய வழிவகைகளை ஆராய் பவர்களாகக் காணப்படுகின்றனரே யல்லாமல், இந்த ஊனுடம்பின் பொருட்டாகவே வாழ்பவராகக் காணப்பட வில்லை. ஆகவே, மக்கள் எல்லாரும் பிறப்பளவில் ஒத்த இயல்பினரே யல்லாமல் வேறெவ்வகையான ஏற்றத் தாழ்வும் உடையரல்லர். இவ்வுண்மை தெருட்டுதற்கே தெய்வப் புலமைத் திருவள்ளுவர்,

> "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யால்."

என்றும், நாலடியார் ஆசிரியர்,

> "நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
> சொல்லள வல்லாற் பொருளில்லை."

என்றுந், திருமூலநாயனுர்,

> "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்."

என்றும் அருளிச் செய்வாராயினர்.

இங்ஙனமாக மக்களெல்லாரும் ஒத்த இயல்பினரா யிருக்க, அவருள் முதன்முதல் அறிவானும் முயற்சியானும் மிகுந்து, கொலை புலை முதலான கொடிய செயல்களை ஒழித்து, உழவுதொழிலால் உலகத்தை வளம்படுத்திய சிலரே முதன்முதல் நாகரிகத்திற் சிறந்த வேளாளராயினர்; அங்ஙனம் அவர்போற் சிறவாமல் அவ் அறிஞரின் ஏவல் வழிநின்ற ஏனையோர் அவரவர் தகுதிக்குந் தொழிலுக்கும் ஏற்பப் பதினெண்மராயினர். இதுவே மக்கள் பல்வேறு வகுப்பாய்ப் பிரிந்ததன் உண்மைவரலாறும்.

## ௨௫. தூயராவார் எல்லாம் வேளாளராதற்கு உரியர்

இனி, வேளாளர் அல்லாத ஏனையோரில் அறிவு ஆற்றல்களானுங் கொலை புலை தவிர்ந்த அருளொழுக்கத்தானுஞ் சிறந்து வருவாரை வேளாளர் தம்மினத்திற் சேர்த்து அவரோடு உண்ணல் கலத்தல்களைச் செய்தல், அவ் வாற்றால் அவர் தம்மினத்தையும் பெருக்கி, அருளறங்

லால், அஃது உலகத்திற்குப் பெருநன்மையைத் தந்து இறைவனது திருவுளக்குறிப்பை ஈடேற்றுஞ் செயற்கரிய செயலாகுமேயல்லால், அது வேறு எத்தகைய தீங்கும் விளைவியாது. ஏனை வகுப்பினரிற் சிறந்தாராய் உள்ளவரை வேளாளர் தம்மினத்திற் சேராமல் தாம் தனிநின்று கொண்டு 'நாங்கள் இருபது வீட்டுக்குள்ளேதான் கொள்வது கொடுப்பது' என்று வெறுஞ் செருக்குரை பகர்வதால் அவர்க்குவரும் ஏற்றஞ் சிறிதுமில்லை ; இங்ஙனந் தனிநின்ற எத்தனையோ வேளாள வகுப்புகள் பிள்ளைகட்குப் பெண்கள் கிடையாமையாலும், பெண்கட்குப் பிள்ளைகள் கிடையாமையாலும், இன்னும் பல பொருந்தாக் கட்டுப்பாடுகளாலும் அகம் புழுங்கி நாளடைவில் மாய்ந்து போயின ; இன்னும் எத்தனையோ மாய்ந்துவருகின்றன ; பின்னும் பல மாயும் நிலைமையிலிருக்கின்றன. இத்தகைய போலிக் கட்டுப்பாடுகள் சிறிதும் இல்லாத கிறித்து சமயத்தவர் தொகை நாளுக்குநாட் பெருகி உலகத்தைக் கவர்ந்துவருகின்றது. இதற்கு ஏற்றபரிசாக வேளாளருந் தாம் வைத்திருக்கும் பொருந்தாக் கட்டுப்பாடுகளை யொழித்து, ஏனை வகுப்பாரிற் புனிதராய் வருவாரைத் தம்முடன் சேர்த்துத் தம்மினத்தைப் பெருக்கி உலகில் அறத்தை வளர்த்தலே

செயற்பாலதாம். புனிதராய் வருவார் எத்தகைய இழி குலத்திற் பிறந்தவராயிருப்பினும், அவரெல்லாருஞ் சைவ சமயத்தவரோடு கலக்கப்பெறுதற்கும், அவரால் வணங்கப் பெறுதற்கும் உரியாரென்பதற்குப் பல்வேறு வகுப்பினராய அறுபத்துமூன்று நாயன்மாரும் அவர்தம் உண்மை வரலாற் றினைக் கூறுந் 'திருத்தொண்டர் புராணமுமே,' உறுபெருஞ் சான்றுமென்று தெளிக. பிறவியெடுத்தது அன்பு அருள் அறங்களில் ஓங்கி ஒருவர்க்கொருவர் உதவியாய் நின்று இறைவன் றிருவடிப் பேரின்பத்தைப் பெறுதற்கேயல் லாமல், நிலையில்லா ஊன் பிறவியின் உயர்வு தாழ்வுகளைச் செருக்குடன் பாராட்டி அறியாமையில் மாய்ந்தொழிதற்கு அன்று என்பதை வேளாளரும் பிறருந் தமது கருத்திற் பதித்து, எல்லாரும் ஒரு முழுமுதற் கடவுளாகிய தந்தைக்குப் புதல்வராதலை யுணர்ந்து, அதற்கேற்றவாறு இனிது ஒழுகி, அத் தந்தையின் வீடுபேற்றின்பப் பெருஞ் செல்வத்தை எய்துதற்கு முயலல்வேண்டும்.

## உச. ஆரியச்சேர்க்கை தமிழர்க்கும் தமிழ்க்கும் ஆகாது

இதனோடு, தமிழ்மக்களின் முன்னேற்றத்திற்குப் பல வகையிலுந் தடையாய் நிற்கும் ஆரியப் பார்ப்பனர் தம்மை யணுகுதற்குந், தாம் அவர் சொல்லைக் கேட்டு நடத்தற்குந் தமிழர் எவருஞ் சிறிதும் இடந் தருதல் ஆகாது. தமிழ் நாட்டுத் திருமடங்களின் ஆசிரியர்களுங் குறுநில மன்னர் களும் (சமீந்தார்கள்), செல்வர்களுங், கற்றவர்களும், பிற ரும் இப்போது தம்முடைய சீருஞ் சிறப்பும் அறிவும் புகழும் இழந்து தமது மேனிலை குலைந்து சிறுமை எய்தி அல்லல் உழப்பதெல்லாம் ஆரியப் பார்ப்பனரைத் தம்

முடன் சேர்த்து அவர் சொல்வழி நடத்தலினாலேயாம். தமிழரிற் செல்வமுஞ் சிறப்பும் உடையார் இவரென்று கண்டால் ஆரியப் பார்ப்பனர் உடனே அவர்பாற் சென்று சூழ்ந்து அவர்க்கு இணங்கிய படியாகவெல்லாம் நடந்து, அவர்பாற் றாம் பெறவேண்டியனவெல்லாம் நயமாகப் பெற்றுக்கொண்டு, அவர் அச் செல்வமுஞ் சிறப்பும் இழத் தற்கு வேண்டும் வழிவகைகளெல்லாந் திறமையாகச் செய்து, முடிவில் அவர் வறியராகித் தாழ்வடைந்தபின் அவரைவிட்டு நீங்குவர்; தம்மாற் சிறுமையடைந்த அவரைப் பின்னர்த் திரும்பியும் பாரார்; அவரைக் காணநேர்ந்தால் அவரை அறியாதார்போல் அகன்று ஒளித்துப் போவர். இங்ஙனம், முன்னமே உயர்ந்து நிற்குந் தமிழ்ப் பெரி யாரையுங் கரவாகக் கெடுத்துத் தாழ்த்திக், தாழ்ந்து கிடக்குந் தமிழரையும் உயரவொட்டாமற் பெருந்தடைகளை விளைத்துத் தமிழ்மக்களெல்லார்க்குந் தொடர்பாகத் தீது புரிந்துவரும் பார்ப்பனரை நஞ்சினுங் கொடியராக நினைந்து, அவர் எவ்வகையிலுந் தம்பால் அணுகுதற்கு இடந்தராது விழிப்பாயிருத்தலே தமிழர் ஒவ்வொருவருங் கருத்தூன்றிக் கைக்கொள்ளற் பாலதாகிய முதற்பெருங் கடமையாம்.

இன்னும், ஆரியப் பார்ப்பனர் தமக்குரியதாகக் கருதிப் பெருமை பாராட்டிக்கொள்ளும் ஆரியமொழி பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னரே உலகவழக்கில் இன்றி இறந்து ஒழிந்தமை கண்டு, அதனைத் திரும்ப உயிர்ப்பிக்க எவ் வளவோ முயன்று பார்த்தும் அதுமுடியாமையின், மெல்ல மெல்லச் சமஸ்கிருதமொழிச் சொற்களைத் தமிழிலுந், தமிழோடு இனமாகிய மலையாளம் தெலுங்கு கன்னடம் முதலாகிய மொழிகளிலும் நுழைத்து, அவ்வாற்றால் அம் மொழிகளின் தனிச் சுவையினையும் ஆற்றலினையுங் கெடுத்து, அவற்றை வடமொழியுருவாக்கப் பெரிது

முயன்று, அம் முயற்சியில் அரைவாசிக்குமேல் தேர்ந்து விட்டார்கள்; தமிழ்மக்களைத் தவிர, மலையாளத்தாருந் தெலுங்கருங் கன்னடரும் எளிதிலே ஏமாறிவிட்டார்களாத லால், ஆரியப் பார்ப்பனர் அம் மொழிகளை முக்கால்வாசி வடமொழியுருவாக்கிவிட்டார்கள். பண்டுதொட்டுத் தமிழ் மக்கள் நாகரிகத்திற் சிறந்தாராய்த் தமது தமிழ்மொழியை நன்கு ஆராய்ந்து அதற்கு இலக்கண இலக்கிய வரம்புகட்டி அதனைப் போற்றித் தனித்து வழங்குதலின், ஆரியப் பார்ப்பனர் அதனை வடமொழியுருவாக்க எவ்வளவோ முயன்றும் அது கைகூடாமல், அதனைக் கெடுக்க இன்னும் எவ்வளவோ சூழ்ச்சிசெய்து வருகின்றார்கள். அவர்களின் கரவையுஞ் சூழ்ச்சியையும் அறியாத தமிழ்ப்புலவர் சிலர் அவர்தம் வலையிற் சிக்கிக்கொண்டு, தமிழைத் தனித்து வழங்கல் இயலாதென்றும், ஏராளமான வடசொற்களை அதன்கட் சேர்த்து வழங்கலே அதனை வளம்படுத்துவ தாகுமென்றும் பொருந்தாவுரை கூறித் தனித் தமிழ் வளத்தைக் கெடுக்கப் பார்க்கின்றார்கள். தண்ணீரை 'ஜலம்' என்றும், தலைமுழுகுதலை 'ஸ்நாநம்' என்றும், உணவை 'ஆகாரம்' 'போஜநம்' என்றும், ஒளியைப் 'பிரகாசம்' என்றுஞ், சோற்றை 'அன்னம்' 'சாதம்' என்றும், பயனைப் 'பிரயோஜனம்' என்றும், வழிபாட்டைப் 'பூஜை' 'அநுஷ்டானம்' என்றும் இன்னும் இங்ஙனமாகப் பலப்பல வட சொற்களை இப்போதே நுழைத்து விட்டமையால் தண்ணீர் முதலான தமிழ்ச்சொல் வழக்கு வரவரக் குறைந்து வரு கின்றது. இவ்வாறே தமிழ்ச்சொல் வழக்கு ஒவ்வொன்றாய் ஒழிந்துபோக, அவற்றிற்கு மாறாக வடசொற்களே வழங்கு மானால் அப்புறந் தனித் தமிழ்மொழி என்பதே ஒன்று இல்லையாய் விடுமன்றோ? தமிழர்க்குள்ள பெருமையெல் லாம் அவர் தொன்றுதொட்டுத் தூய்தாக வழங்கிவருந்

தமிழ்மொழியினையே சார்ந்திருக்கின்றது. ஆனால், இப்போதுள்ள தமிழர்களோ அப் பெருமையினை யறியாராய்த், தண்ணீரைத் 'தண்ணீர்' என்றுஞ் சோற்றைச் 'சோறு' என்றுந் தமிழாற் சொல்வது தாழ்வென நினைந்து, அவற்றை 'ஜலம்,' 'சாதம்,' என்று வடசொல்லாற் கூறுதலே பெருமையெனக் கருதுகின்றார்கள். இங்ஙனங் கருதுவது தம்மைத்தாமே இழிவுபடுத்திக் கொள்வதாய் முடிவதை எண்ணிப் பார்க்கின்றார்களில்லை. தமக்குரிய 'தண்ணீர்,' 'சோறு' எனுந் தூய தமிழ்ச்சொற்கள் இழிந்தவைகளாய் இருப்பினல்லவோ, அவற்றை யொழித்து, வடசொற்களை யெடுத்து வழங்கல் வேண்டும். இளங்குழவிகளாய்ப் பால் பருகிய காலந்தொட்டு நாம் வழங்கிவந்த அத் தனித் தமிழ்ச் சொற்கள் எங்ஙனம் இழிந்தவைகளாகக் கூடும்? அவைகளை வழங்கிய நாம் இழிந்தவர்களாய் இருப்பினல்லவோ அவையும் இழிந்தனவாயிருக்கும். உலகத்திலுள்ள மற்ற மக்களெல்லாம் உண்ணச்சோறும் உடுக்கக்கூறையும் இன்றி, விலங்கினங்களைக் கொன்று உண்டுந், தழைகளை யுடுத்தும், ஊர் ஊராய் அலைந்து திரிந்த அத்துணைப் பழையகாலத்திலும், அறிவு முதிர்ச்சியுந் தாளாண்மையும் உடையராய் நிலத்தைத் திருத்திப் பல்வகை வளவிய உணவுப் பண்டங்களை விளைவித்து, நாடு நகரங்கள் வகுத்து, நாகரிகத்திற் சிறந்து திகழ்ந்த தமிழ்ச்சான்றோர் மரபில் வந்த நாம் இழிந்தோராதலும் நம் தனித்தமிழ்ச் சொற்கள் இழிந்தவையாதலும் யாங்ஙனம்? தாம் ஏதொரு நன் முயற்சியுஞ் செய்யாமலுஞ், செய்து பொருள் ஈட்டிப் பிறரைப் பாதுகாவாமலும், முயற்சி மிக்காரை யேமாற்றி அவர் தரும் பொருளைக் கொண்டு வயிறு கழுவுவாரல்லரோ இழிஞர்; அவர் பேசுஞ் சொற்களல்லவோ இழிந்தனவாகும். மேலும், வடமொழியானது எவராலும் பேசப்

படாமல் எத்தனையோ ஆயிர ஆண்டுகளுக்கு முன்னரே இறந்துபட்டதொன்று. நமது அருமைச் செந்தமிழ் மொழியோ பல்லாயிர ஆண்டுகளாக நடைபெற்றுத், தனது புத்திளமை குன்றாது இன்றும் உலவுவது. இங்ஙனம் வாழ்நாள் வரவரப் பெருகி வழங்குந் தமிழ்மொழி சிறந்ததோ? குறுகிய வாழ்க்கைத்தாய் முன்னரே இறந்தொழிந்த வடமொழி சிறந்ததோ? நடுநிலையுடையீர் ஆராய்ந்துரைமின்! எவ்வாற்றால் நோக்கினும், உயர்ந்ததாய் ஒளிரும் விழுமிய நம் செந்தமிழ்மொழிச் சொற்களை வழங்காமல், இறந்துபட்ட வடமொழிச் சொற்களை உயர்ந்தனவாய்ப் பிழைபடக் கருதி வழங்கும் பேதைமைச் செயலை அறவே ஒழிமின்கள்! உயர்ந்த பல கருத்துக்களையும், புதுபுதுப் பண்டங்களையும் வழங்குதற்கேற்ற தமிழ்ச் சொற்கள் ஏராளமாய் இருப்பவும், அவையில்லையெனக் கரைவாருரை கரவுரையாகல்வேண்டும், அல்லது அது பேதைமையேயாகல் வேண்டும். ஆதலால், தமிழ்மொழி கற்குந் தமிழ இளைஞர் ஒவ்வொருவரும், அவர் தமக்குத் தமிழ் கற்பிக்குந் தமிழாசிரியர் ஒவ்வொருவரும் வடமொழி முதலான பிற மொழிச் சொற்களைத் தமிழின்கண் வந்து நுழையாதபடி அறவே விலக்கி, இப்போது வழங்காமற் பழைய தமிழில் வழங்கிய சொற்களையே மீண்டும் எடுத்து வழங்கித் தமிழை வளம் படுத்துப் பாதுகாக்கக்கடவராக! வடமொழி முதலான பிறமொழிச் சொற்களைக் கலவாமல் எத்தகைய பொருளையுந் தனித்தமிழில் எழுதக்கூடும் என்பதற்கு, யாம் தனித்தமிழ் நடையில் எழுதியிருக்கும் இந் நூலும், 'மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்,' 'முல்லைப்பாட்டாராய்ச்சியுரை,' 'பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை' முதலான ஏனை எம்முடைய நூல்களுமே சான்றாம்.

இனி, மணவினை பிணவினை முதலியன நடாத்துங் காலங்களில் தமிழ்மக்களில் ஒவ்வொரு வகுப்பாருந் தத்தம் இனத்தவரிலிருந்தே அவற்றைச் செய்துவைத்தற்குச் சிலரை ஏற்படுத்தி, அவரைக்கொண்டு அவற்றை நடப் பித்துக் கொள்ளல் வேண்டும். இங்ஙனந் தத்தம் இனத் தவரிலேயே சிலரை ஆசிரியராக அமர்த்தி மேற்கூறிய வினைகளைச் செய்வித்தல் சோழநாடு பாண்டிநாட்டிலுள்ள சைவவேளாளரிற் பண்டுதொட்டு இன்றுகாறும் நடந்து வருகின்றது. தமிழர்கள் தாம் நடத்தும் மணவினை பிணவினைகளுக்கு ஆரியப் பார்ப்பனரை ஆசிரியராக வருவித்துவைத்து நடத்தல் பெருங் குற்றமாமென்று அறிவு நூல்களுங் கூறுகின்றன. ஆதலால், தமிழர் தம் வினைகளுக்கு ஆரியப் பார்ப்பனரை வருவித்தலை அறவே விட்டொழித்தல்வேண்டும்.

இனிப், பெரும்பாலுந் தமிழர்க்குரிய சிவபிரான் கோயில் பெருமாள் கோயில்களில் வழிபாடு ஆற்றுவோர் தொன்றுதொட்டுத் தமிழ் அந்தணர்களாகவே இருக் கின்றனராயினும், அவரும் ஆரியப் பார்ப்பனரோடு தம்மைச் சேர்த்துக் கொள்ளும் பொருட்டு ஆரிய வேதங்களையும் வடமொழியையும் பயன்படுத்துகிறார்கள். சிவபிரானுந் திருமாலும் பண்டுதொட்டுத் தமிழ் முது மக்களால் வணங்கப்பட்டு வந்த தமிழ்த் தெய்வங்க ளாகும். எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளே தந்தை வடிவிற் சிவபிரான் எனவுந், தாய் வடிவில் திருமால் எனவும் வைத்து வணங்கப்பட்டது. இவ்விருவரும் பிறவா தவர், இறவாதவர். இவ் இருதெய்வங்களையும் பழைய ஆரியர் சிறிதும் அறியார். இருக்குவேதத்தில் வணங்கப் பட்ட 'உருத்திரர்' தமக்கு மேற்பட்ட சிவபிரான் றன் திருவருளாணைவழி நின்று படைத்தல் காத்தல் அழித்தல்

என்னும் முத் தொழில்களைப் புரிபவர். இருக்குவேதத்தில் வணங்கப்பட்ட 'விஷ்ணு'வோ பகலவனே யல்லாமல், உலகங்களைப் படைத்துக் காக்கும் எல்லாம்வல்ல உலகன்னை யாகிய திருமால் அன்று. பிற்காலத்திற் றென்னாடு புகுந்த ஆரியப் பார்ப்பனரே ஆண்மைச் செயல்புரிந்த அரசரையும் பிறரையுந் திருமாலின் பல்வகைப் பிறவிகளாகக்கொண்டு பொய்ப் புராணகதைகளை வடமொழியில் வேண்டுமட்டுங் கட்டியெழுதித், திருமாலின் முழுமுதற் றன்மையைக் குறைத்துத், தமிழ் நன்மக்களைச் சைவர் வைணவர் என இருவேறு வகுப்பாக்கி, அவ் விருவருந் தத்தந் தெய்வமே தெய்வமெனக் கரைந்து, ஒருவரையொருவர் கைக்கப் பகைத்துப் போராடுதற்கு இடஞ் செய்தவர்கள். அது மட்டுமோ! தமிழர்கள் அத் தமிழ்த் தெய்வங்களைத் தாம் அமைத்த திருக்கோயில்களில் வைத்துத் தாமே வழிபட்டு வந்த முறைகளையும் அவர்கள் அடியோடு மாற்றிவிட்டார் கள். முற்காலத்தில் தமிழர்கள் திருக்கோயிலில் உள்ள திரு வுருவங்களைத் தாமே தொட்டு நீராட்டிப் பூவிட்டு அகில் புகைத்துச் சுடங்கொளுத்தி வழிபட்டு வந்தார்கள். இஞ் ஞான்றும் வடநாட்டிலுள்ளவர்கள் அங்குள்ள திருக் கோயில்களில் தாமே திருவுருவங்களைத் தொட்டு வழிபாடு ஆற்றுதலை நேரே பார்க்கலாம். இக்காலத்தில் இறைவனைத் தொட்டு வழிபாடு ஆற்றுதற்கு உரியவராக ஏற்படுத்தப் பட்டிருக்குந் தமிழந்தணர்கள் அக்காலத்தில் திருக்கோயில் களை ஒழுங்காக வைத்தற்கும், வணங்க வருவார்க்குக் கூட இருந்து உதவிபுரிதற்கும் நிறுத்தப்பட்டவர்களேயல்லாமல் வேறில்லை. ஆரியப் பார்ப்பனர் வந்தபின், இத் தமிழந்தணர் அவருடன் உறவுகொண்டு, தம்மவர் அல்லாத பிறர் எவரும் இறைவனுருவத்தைத் தொடலாகாதெனக் கட்டுப்பாடு செய்து, இதற்குமுன் தாம் தமிழிலுள்ள அருட்பாக்களைச்

சொல்லி வழிபாடாற்றி வந்த இனிய முறையைக் கைவிட்டு, வடமொழியிலேயே எல்லா வழுத்துரைகளுஞ் சொல்லி ஆரவாரம் புரிவாராயினர். தமிழர்கள் வரவரக் கல்வி கேள்வி களிற் குறைந்து, ஆரியப் பார்ப்பனர் மயக்குரைகளில் வீழ்ந்துவிட்டமையின், தமிழர்களாகிய தமக்குரிய திருக் கோயில்களில் ஆரியரும் அவரோ டுறவுகொண்ட தமிழந்த ணருஞ் செய்த இச் சூழ்ச்சிகளையும் புரட்டுகளையும் ஃ சிறிதும் அறியாமல், அவற்றிற்கெல்லாம் இணங்கி நடப்பா ராயினர்!

ஈதொன்றோ! ஆரியர் தாம் கொணர்ந்த சிறுதெய்வப் பாட்டுகளாகிய ஆரியவேதங்களைத் திருக்கோயில்களில் முதற்கண் ஓதல்வேண்டுமெனவும், அவை ஓதி முடிந்தபின் ஆரியப் பார்ப்பனராகிய தம்மை அனுப்பிவிட்டுப், பின்னர்த் தான் தமிழ்வேதங்கள் ஓதல்வேண்டுமெனவும் ஒரு பொருந்தாக் கட்டுப்பாடும் விரகாகச் செய்துவிட்டார்கள். பிறந்து இறந்து உழலுஞ் சிறு தெய்வங்கண்மேல் ஆரியர் பாடின ஆரியவேதப் பாட்டுகளை, எல்லாம் வல்ல முழு முதற் கடவுளாகிய சிவபிரான் திருமால் முன்னிலையிற் பாடுதலைப்போற் குற்றமாவது பிறிதில்லை. ஊர்காவற் சேவகர்மேற் பாடிய புகழுரைகளை நாடாளும் அரசன் முன்னிலையிற் கொண்டுபோய்ப் பாடினல், அவ் அரசன் அவற்றைக் கேட்டு மகிழ்வனே? அவ் அடாதசெயலைத் தன் முன்னிலையிற் செய்த குறும்பரைச் சினந்து ஒறுத்துச் சிறையிடுவனல்லனே? அங்ஙனமே ஆரியச் சிறுதெய்வப் பாட்டுகளை, உலகங்களுக்கெல்லாந் தலைவராகிய அம்மை யப்பர் முன்னிலையிற் பாடும் ஆரியரையும் அவர்க்கு இணங்கி யொழுகுந் தமிழரையும் இறைவன் ஒறுத்தல் திண்ணமா மென்க.

இப் பரதநாடெங்கணும் உள்ள சிவபிரான் திருமால் திருக்கோயில்களுக்கு வந்திருக்குஞ் சீருஞ் சிறப்பு மெல்லாந், தேவாரந் திருவாசகம் ஆழ்வார் பாடல்கள் என்னுந் தெய்வச் செந்தமிழ் மறைகளில் அவை பாடப்பெற்றிருப்ப தனால் வந்தனவே யாம். இச் செந்தமிழ் மறைகளிற் பாராட்டப்படாத கோயில்களை எவருங் கொண்டாட மாட்டார். இத் திருக்கோயில்களின் சிறப்புக்கு ஏதுவான இத் தமிழ்மறைகளோ சிவபிரான் திருமாலைத் தவிர வேறு தெய்வங்களைப் பாடுவனவும் அல்ல; இத் தமிழ்மறைச் செம்பாடல்களைக் கேட்டலிலேதான் இறைவனுக்குப் பெரு விருப்பு. இந் நறுந்தமிழ்ப்பாடல்களில் தன் திருவுளம் ஈடுபட்டதனாலன்றோ இறைவன் மாணிக்கவாசகர், திரு ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் என்னும் நால்வர்க்கும் எளியனாய்த் தோன்றித், தான் ஒருவன் உளன் என்பதை உலகம் எளிதில் அறிந்து உய்யச் செயற்கருஞ் செயல்க ளெல்லாஞ் செய்தருளினன்?

> "தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
> உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் உருவாக்
> கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததுங் கன்னித்
> தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்."

என்று வினவிய பெரியார், தமிழாலன்றி வடமொழியைக் கொண்டு இறைவன் திருவட்பேற்றிற்கு உரியாரானரும், இறைவனொருவன் உளனென்பதைப் பல புதுமைகளால் நாட்டினாரும் இல்லையென்பதைத் தெளிவாக அறிவுறுத்து கின்றனர் அல்லரோ? தென்னாடு வடநாடுகளில் உள்ள சிவபிரான் திருமால் திருக்கோயில்களில் ஒன்றையேனுங் குறிப்பிடாத வடமொழி வேதங்களை அத் திருக் கோயில் களில் ஓதுவது குற்றமன்றோ? முழுமுதற் கடவுளாகிய அம்மையப்பரை மட்டும் வழுத்தாமல் எண்ணிறந்த சிறு

தெய்வங்களாகிய பேய்களைக் கொண்டாடும் ஆரியவேதங் களை அம் முழுமுதற் கடவுள் முன்னிலையில் ஓதுதலினுங் குற்றமான பேதைமைச் செருக்குச் செயல் பிறிதுண்டோ? இறைவன் திருவருளாணை கடவாத மெய் யன்பரான நம் முதுதமிழ்ச் சான்றோரின் வழித்தோன்றிய தமிழ்மக்காள்! விழித்தெழுமின்கள்! இதுகாறும் ஆரிய மாயத்திற் சிக்குண்டு அறிவு மயங்கித் தூங்கிய பெருந் தூக்கத்தி னின்றும் விழித்தெழுமின்கள்! இனி ஆரியமொழியையும் ஆரிய வேதங்களையும் நம் திருக்கோயில்களில் ஓதுதலை அறவேயொழித்துத், தேவார திருவாசக நாலாயிரப் பாடல் களையே ஓதி, அவற்றிலுள்ள மந்திரங்களாலேயே அம்மை யப்பர்க்கு எல்லா வழிபாடுகளும் ஆற்றி, இறைவன் திருவ ருளால் இம்மை மறுமைப் பயன்களை ஒருங்கெய்துவீர் களாக! ஓம்.

மறைத்திரு. மறைமலையடிகளார்

எ ய

வேளாளர் நாகரிகம்

முற்றும்.

## மறைமலையடிகளாரின்

# தனிச் செந்தமிழ் நூல்கள்

| | ரூ. | காசு |
|---|---|---|
| சாகுந்தல நாடகம் | | |
| விளக்க உரைக் குறிப்புக்களுடன் | 3 | 25 |
| கலிக்காக்கட்டு | 4 | 25 |
| சாகுந்தல நாடக ஆராய்ச்சி | 2 | 50 |
| இளைஞர்க்கான இன்றமிழ் | 2 | 50 |
| கலிக்காக்கட்டு | 3 | 25 |
| மரணத்தின்பின் மனிதர் நிலை | 3 | 25 |
| தமிழர் மதம் | 5 | 00 |
| திருவொற்றிமுருகர் மும்மணிக்கோவையுரை | 5 | 00 |
| சிந்தனைக் கட்டுரைகள் | 2 | 00 |
| முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் | 2 | 50 |
| சைவசித்தாந்த ஞானபோதம் | 4 | 00 |
| குமுதவல்லி நாகநாட்டரசி | 4 | 00 |
| தொலைவிலுணர்தல் | 4 | 00 |
| சோமசுந்தரக் காஞ்சியாக்கம் | 1 | 50 |
| பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| கலிக்காக்கட்டு | 2 | 75 |
| கோகிலாம்பாள் கடிதங்கள் ,, | 6 | 00 |
| சிறுவர்க்கான செந்தமிழ் | 2 | 25 |
| கலிக்காக்கட்டு | 3 | 00 |
| முற்காலபிற்காலத் தமிழ்ப் புலவோர் | 2 | 25 |
| சோமசுந்தர நாயகர் வரலாறு | 1 | 50 |
| வேளாளர் நாகரிகம் | 2 | 00 |

கழக வெளியீடு : ௮௯௭

# பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை



பல்லாவரம்
பொதுநிலைக் கழக ஆசிரியர்
மறைத்திரு. சுவாமி வேதாசலம்
என்னும்
மறைமலையடிகள்
இயற்றியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. சென்னை-1.

First Edition: 1906
Reprints: 1919, 1930; (Kazhakam) July 1957.

# PATTINAPPALAI ARAICHIYURAI



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office*:

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1. C. 1100.

கைம்மாறு சிறிதும் கருதாத

பேரருட் பெருக்கத்தால்

எனக்குத் தமிழ் செவியறிவுறுத்திய

என் இயற்றமிழாசிரியர்

திருவாளர் வெ. நாராயணசாமிப் பிள்ளையவர்களை

நினைந்துருகுதற் பொருட்டாக

இந்நூல் என்னால் வகுக்கப்படுகின்றது.

# பதிப்புரை

தமிழிலக்கியத்தின் பொற்காலமெனக் கருதப்படும் கடைச் சங்க காலத்தில் நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த புலவர்களால் இயற்றப்பட்டவை எட்டுத்தொகை, பத்துப் பாட்டாகும். பட்டினப்பாலை பத்துப் பாட்டுக்களில் ஒன்றாக முற்கால அறிஞர்களால் தொகுக்கப்பட்டுள்ளது. இவ் அருந் தமிழ்ப் பாட்டுக்கு மறைமலையடிகள் எழுதிய ஆராய்ச்சியுரையே இந் நூலாகும்.

பத்துப்பாட்டுக்கு உரை எழுதிய 'உச்சிமேல் புலவர் கொள்' நச்சினார்க்கினியர் செய்யுளில் சொல் கிடந்தவாறே பொருள் கூறாது தாம் எண்ணும் பொருளுக்கேற்பச் சொற்களை வலிந்தும் திருத்தியும் உரை எழுதியுள்ளது அப் பாட்டின் கருத்தை முழுவதும் வெளிப்படுத்தாமையின் மறைமலையடிகள் பட்டினப்பாலைக்குத் தனித் தமிழில் உரையெழுதியுள்ளனர். இப் பாட்டில் காணப்படும் அரும் பெரும் பொருள்களையும் சிறப்புறு வகையில் விளக்கி யுள்ளார். எனவே சங்க இலக்கியத்தை ஆராயும் ஆராய்ச்சி யாளர்க்கும் புத்துரையை அவாவி நிற்கும் மாணவர்கட்கும் இந் நூல் பெரிதும் பயன்படும் என்று நம்புகின்றோம்.

பழைய தனித்தமிழ்ச் செய்யுட்களை அவற்றின் சிறப் புணர்ந்து விரும்பிக் கற்கும் நந் தமிழ்மக்களும் இந்நூலை மனமுவந்து வரவேற்பர் என எண்ணுகின்றோம்.

அடிகளார்தாம் ௧௯௫0 செப்டம்பர்த் திங்கள் ௧௫-ஆம் நாள் இறையடி சேர்வதற்குமுன் எழுதிய விருப்ப ஆவணத்

திற் குறிப்பிட்டபடி அடிகளார் நூல்களை வார முறையில் எங்கள் கழகவழி அச்சிடத் தொடங்கிப் பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை என்னும் இந் நூலினை நான்காம் பதிப்பாக வெளியிடுகின்றோம்.

அடிகளார் எழுதிய முல்லைப்பாட்டாராய்ச்சியுரை யினையும் பட்டினப்பாலையாராய்ச்சியுரையினையும் மாணவர் வாங்கிக் கற்று நூலாராயுந் திறனை அறிந்து அவ் ஆற்றலைப் பெருக்கிக் கொள்வார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# PREFACE TO THE FIRST EDITION

"*And it was through Nature, thus ennobled by a semblance of passion and thought, that he approached the spectacle of human life. Human life, indeed, is for him, at first, only an additional, accidental grace on an expressive landscape.*"—Walter Pater on Wordsworth.

*PATTINAPPALAI* is an old Tamil idyll of 301 lines, on which the following is a critical commentary. It was composed by poet *RUDRANKANNANAR* in the middle of the first century A. D. The poem is full of simple thoughts and choicest expressions that characterise a perfect classic. Further it belongs to the old realistic school of Tamil poetry that prevailed at the time of the Pandian Academy.

It will be seen from the poem that the poet who had had a charming wife whose affections for him were unbounded and whose happiness he sought to maintain by a reflection of the same sentiments on his part, once on account of pecuniary straits, made arrangements to go to *Kavirippumpattinam* a city far from his village and pay a visit to the then prince *Karikalachola*: but when the news of his departure came to the knowledge of his beloved wife, she was pierced with dire affliction at the thought of her dear husband's separation and became inconsolable forthwith. On beholding the troubled condition and the melancholy mood of his loveliest wife, the poet deferred his journey. And in

order to console her it may be imagined that he composed this poem in her presence, addressing to his mind of his unwillingness to part with such a charming and affectionate maiden whose caresses, it is told, were as sweet as the reign of *Karikala*, even if that were to preclude him from the rare opportunity of receiving as a gift the richest city of the great Chola monarch. While speaking of this gift, in the midst of his broodings over the mellow-beauty of his wife, he brings in a vivid picture not only of the natural and artificial beauty presented by the countrysides and the town parts of the Chola kingdom but also the glory and victory of the mighty prince *Karikala*. How artistically the poet links on to the central idea of this poem, the scenic beauty of the vast Chola kingdom and the greatness of its reigning monarch is a matter for deep critical appreciation.

In his conception of this vast universe, nature and mind form an inseparably bound-up whole. All the natural objects constitute, as it were, a permanent habitation for the soul which dwells within. The inner thought-power of the soul vibrates in such a way as to mould the plastic outward matter quite consistently with its own laws. And so, to admire the outward beauty of nature is to appreciate the inward beauty of the intelligent soul that lies within Except through the perception of senses, it is not possible for the individual mind to apprehend the nature of the inmost lying spirit and have intercourse with it. When one

communes with the still life of nature, all his thoughts that were running before in different directions at random become collected up and converge to one definite point in the universal Self which penetrates its whole being and by illuminating its understanding makes it brighter and brighter till the limited area of intelligence is lighted up to an unlimited extent and swallowed up in the effulgence of the Supreme Spirit. Thus a study of nature forms a wholesome element in the old classical poetry of Tamil to which our poet *Rudrankannanar* belongs; as far the study of human mind, it conceives that it can be made effectual only in close connection with that of the former. Bearing in mind this inter-connection of nature and spirit and its being the main theme in the Tamil classical poetry, our old poet devotes the main portion of his idyll to a portrayal of the rural charms and the sea-coast beauties, and then weaves them all into that part in which his ideal love for his wife stands out prominently and colours the whole poem with its soft rose-gleam. From this it will be manifest that the poem at first fascinates the reader's imagination by presenting a true picture of the sensuous beauty of the external world, and then elevates it higher and higher up till it refines it into a purer etherial substance susceptible of reflecting in itself the thoughts and sentiments coming from a transcendental ideal source.

The artistic sequence of poetic thoughts that find their expression in chaste and simple Tamil has been thoroughly studied in the body of this work. And in

tracing up link after link the steady development of the poet's central thought through the whole poem, I have not only criticised the old commentary of *Nachchinarkkiniar* which gives in an unusual and fantastic manner a twisted interpretation of the poem but have also explained its real meaning in a very simple and natural way as is compatible with the poet's conception of the poem.

The first two parts of this critical commentary were, at the request of the President of the *MADURA TAMIL SANGAM*, read before its last annual meeting, and were very much appreciated by the learned Pandit members and others present on the occasion. Having been encouraged at the reception that was accorded to it and to a similar commentary of my own on another classical ode *Mullaippattu* which was published some years ago, I send forth this volume as my humble contribution to the critical literature of my mother tongue which is one of the ancient and highly cultivated languages of the world.

Madras,<br>25th Sept. 1906.

VEDACHALAM

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழாசிரியரா யிருந்து, கலைநூற் புலமைக்குப் பயிலும் மாணுக்கர்க்கு யாம் தமிழ்நூற் கற்பித்துவந்த காலத்தில், கி. பி. ௧௯௦௩ - ஆம் ஆண்டு பழைய பத்துப்பாட்டுக்களில் ஒன்ருன முல்லைப் பாட்டுப் பாடமாக வந்தது. அப்போது நச்சிஞர்க்கினியர் உரையொடு சேர்த்து யாம் மாணுக்கர்க்கு அதனை அறி வுறுத்தி வருகையில், செய்யுள் இயற்றிய ஆசிரியர் கொண்ட முறைக்கு மாருக நச்சிஞர்க்கினியர் தமதுரையிற் செய்யு ளில் உள்ள சொற்களையுஞ் சொற்ருெடர்களையுந் தமக்குத் தோன்றியவாறெல்லாம் முன் பின்னுக மாற்றி உரைகூறிய இடங்களில் முதலில் நச்சிஞர்க்கினியர் உரையினை விளக்கி, அதன்பின்னர் ஆசிரியர் கொண்ட பொருள் முறையே வைத்து யாம் ஒரு புத்துரையுங் கூறுவேமாயினேம். ஆங்கில நூல் உணர்ச்சியால் பகுத்தறாராயும் அறிவு ஆற்றல் வாய்ந்த அம் மாணுக்கர்கள் 'நச்சிஞர்க்கினியருரை செய்யுளுக்கு இசையவில்லை' என்றும், 'தாங்கள் கூறும் புத்துரையே செய்யுளுக்கு மிக இசைந்து ஆக்கியோன் கருத்தை நன்கு விளக்குவதாய் இருத்தலின், தங்களுரையே யாங்கள் பயிலுதற்கு எளியதாய் இருக்கின்றது. ஆதலால், தங்க ளுரையினையே எழுதி அச்சிட்டு எங்கட்கு உதவியருளல் வேண்டும்' என்றும் பகர்ந்து எமதுரையினைப் பதிப்பிடு தற்கு ஆம் செலவினையுந் தாமே ஏற்க இசைந்து தாமெல்லாம் ஒருங்குசேர்ந்து அன்போடு பொருளுதவியுஞ் செய்தார்கள். அவர்கள் செய்த அவ்வுதவி என்றும் மறக்கற்பாலதன்று. உடனே யாம் முல்லைப்பாட்டிற்கு விரிவாக ஆராய்ந்த எமதுரையினைப் புத்தக வடிவில் அச்சிட்டு அம் மாணுக் கர்க்கும் பிறர்க்கும் வழங்கினேம். அப் பாட்டிற்கு யாம்

ரிய அவ்வாராய்ச்சியுரையைப் போன்றது ஏதும் அதற்குமுன் தமிழில் எவரானும் எக்காலத்தும் எழுதப் பட்டதில்லை. தமிழின் அருமையை யுணர்தற்கு வழி அறியாமையால் தமிழைப் புறம்பழித்து வந்த மாணுக்கர் கள் எமது ஆராய்ச்சியுரையினைச் சிறிது பயின்ற அளவானே அதன்கண் அவா மிகுதியும் உடையராய் அதனை விரும்பிக் கற்கலாயினர். தமிழ்ப் புலவர்களிற் பலரும் அவ்வாராய்ச்சி யுரையினைப் பார்த்து வியந்து மகிழ்ந்து அதனைச் சிறந் தெடுத்துப் பாராட்டி எமக்குத் திருமுகங்களும் எழுதி விடுத்தனர்; அதற்காக அவர்கட்கு யாம் நிரம்பக் கடமைப் பட்டிருக்கின்றேம். அது நிற்க.

திரும்பவுங் கி. பி. ககூ0சு-ஆம் ஆண்டு, பத்துப்பாட்டுக் களில் மற்றொரு செய்யுளான பட்டினப்பாலை என்பது கலை நூற் புலமை மாணுக்கர்க்குப் பாடமாய் வந்தது. முன்னரே யாம் முல்லைப்பாட்டிற்கு எழுதிய ஆராய்ச்சி யுரையினைப் பற்றிக் கேள்வியுற்ற அவ்வாண்டின் மாணுக்கர்கள் தமக்குப் பாடமாக வந்துள்ள பட்டினப்பாலைக்கும் அங்ஙனமே ஓர் ஆராய்ச்சியுரை எழுதிப் பதிப்பிட்டுத் தருமாறு வேண்டித் தாமும் ஒருங்கு சேர்ந்து அதற்காம் செலவுக்குப் பொரு ளுதவியுஞ் செய்தார்கள்; அவர்கள் செய்த அவ்வுதவிக்கும் யாம் பெரிதும் நன்றியறியக் கடமைப்பட்டிருக்கின்றேம். அங்ஙனமே அவர்கள் வேண்டுகோட்கிணங்கிப் பட்டினப் பாலைக்கும் ஒரு விரிந்த ஆராய்ச்சியுரை எழுதி, அதன் முதலிரு பகுதிகளையும் அவ்வாண்டிற் கூடிய மதுரைப் புதுத் தமிழ்ச்சங்கக் கூட்டத்தில் அதன் றலைவரது வேண்டு கோட்கிசைந்து படித்துக் காட்டினேம்; அப்போது அவ் அவையிலிருந்த தலைவரும் தமிழ்ப்புலவர்களும் நமதா ராய்ச்சியுரையினைப் புகழ்ந்து பாராட்டிப் பேசினர். அதற் காக அவர்கட்கு நன்றிசெலுத்துங் கடப்பாடு உடையேம்.

பின்னர்ச்சில திங்களில் எமது பட்டினப்பாலை ஆராய்ச்சி யுரை முழுதும் பதிப்பாகி வெளிப் போந்து உலாவலாயிற்று. யாம் எழுதிய முல்லைப்பாட் டாராய்ச்சி யுரையும் பட்டினப் பாலை யாராய்ச்சியுரையும், தமிழ்மாணாக்கர்க்கும் தமிழ்ப் புலவர்க்கும் தமிழறிஞர்க்கும் பழைய அருந்தமிழ்ச் செய்யுட் களிற் பொதிந்து கிடந்த அரும்பெரும் பொருள்களை ஆராய்ந்துணர்தற்குரிய முறைகள் இவையென்று காட்டி அவர்க்குப் பெரு மகிழ்வினை விளைத்து வருவவென்பதற்கு, அவரிற் சிலர் பலர் எமது ஆராய்ச்சி முறையினைப் பின் பற்றிப் புதினங்களிலும் நூல்களிலும் கட்டுரை எழுதி வருதலே சான்றாம்.

ஆனால், ஆங்கிலத்தில் நூல் எழுதும் ஆங்கில அறிஞர் தாம் பிறர் முறைகளைப் பின்பற்றி எழுதினாலும், பிறர் நூல்களில் உள்ள சொற்களையுஞ் சொற்றொடர்களையுந் தாமெடுத்து ஆண்டாலும் தாம் ஏனையாசிரியர்க்குக் கடமைப் பட்டிருக்கும் இடங்களை ஆங்காங்குக் குறித்துப்போவர். அத்தகைய நேர்மை நந் தமிழ்ப் புலவரிடத்துப் பெரும் பாலும் இன்மையின், தாம் எடுத்தாண்டவர்க்குத் தமது கடமையினைப் புலப்படுத்தாது எல்லாந் தாமே கண்டு அறிந்தெழுதினார்போல் வாளாதுபோவர். ‘தமிழ்மொழி வரலாறு’ எழுதினவர் யாம் ஞானசாகர முதற்பதுமத்தும், முதற்குறள்வாத நிராகரணத்தும் எழுதியவற்றை யெடுத்துத் தமது புத்தகத்திற் பாதியை நிரப்பிக் கொண்டும் எமக்குத் தாங் கடமைப்பட் டிருத்தலைச் சிறிதுமே கூறாது போயினர். கரிகாற் சோழனைப் பற்றி எழுதிய மற்றொருவர் எம் முடைய திருக்குறளாராய்ச்சியினின்றும் இப்பட்டினப்பாலை யாராய்ச்சியினின்றும் தாம் பல குறிப்புகள் எடுத்தெழுதிக் கொண்டும் தமது கடமைப்பாட்டினைத் தெரிவியாமலே போயினர். இங்ஙனமே ‘கார் நாற்பதிற்கு’ ஒரு புதிய உரை

வரைந்து சின்னாட்கு முன் வெளியிட்ட வேறொருவர் அதற்கு உரை எம்பால் ஒரு திங்களிருந்து நேரே கேட்டும், எமதாராய்ச்சியுரைகளையே முழுதும் பின்பற்றி எழுதியும் தமது கடமைப் பாட்டினைக் கிளவாது போயினர். இங்ஙனமே, நூலெழுதுவாரும் அவைகளில் விரிவுரை நிகழ்த்துவாரும் எம்முடைய ஞானசாகரத்திலிருந்தும் பிற நூல்களிலிருந்தும் ஏராளமான குறிப்புகளை எடுத்துப் பயன்படுத்திக்கொள்வாராயினும், தாம் எமக்குக் கடமைப்பட்டிருத்தலை மட்டும் தெரிவிப்பாரல்லர். நந் தமிழறிஞர்க்கு இந் நேர்மை இல்லாதொழியினும், யாமெழுதுவன பலர்க்கும் உதவியாய் நின்று மேன்மேல் உண்மை நுண்பொருள் ஆராய்தற்கு வழி திறந்து காட்டிப் பயன்படுதல் பற்றியும், அவற்றால் நம் செந்தமிழ் மொழியின் அருமை பெருமைகள் தமிழ் வழங்கும் நாடெங்கும் பரவுதல் பற்றியும் யாம் பெரிதும் உளம் மகிழ்ந்து எல்லாம் வல்ல இறைவற்கு நன்றி செலுத்துகின்றேம். இன்னும் யாம் எழுதி வைத்திருக்குங் குறிஞ்சிப்பாட்டு ஆராய்ச்சி உரையும், மலைபடுகடாம் ஆராய்ச்சியுரையும், இனி யெழுத நினைந்திருக்கும் ஆராய்ச்சியுரைகளும் விரைவில் வெளிவருதற்குத் திருவருள் உதவிபுரியுமென்று எதிர்பார்த்திருக்கின்றேம். அது கிடக்க.

இனி, இப் பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையின் இரண்டாம் பதிப்பின்கட் சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. முதற் பதிப்பில் பட்டினப்பாலைச் செய்யுள் சேர்க்கப்படவில்லை. இவ்விரண்டாம் பதிப்பில் அது சேர்க்கப்பட்டிருக்கின்றது. ஆகையால், இப்போது இவ்வுரையைக் கற்போர் இதன் செய்யுளுக்காக வேறு அச்சுப் புத்தகத்தை நாடவேண்டுவதில்லை. எமதிடமுள்ள ஓர் ஏட்டுச் சுவடியையும் அச்சுப் புத்தகத்தையும் ஒப்பிட்டுப்

பார்த்துச் செய்யுளிற் சில பாட வேறுபாடுகள் காட்டியிருக்கின்றேம்.

முதற் பதிப்பில் இல்லாத விளக்க உரைக் குறிப்புகள் இன்னும் பல இதன்கட் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவையே யன்றியும், சொற்களுக்குப் பொருள்கள் இவையென்று துணிவு தோன்றுதற்பொருட்டு, இப் பாட்டின்கட் போந்த அருஞ்சொற்கட் கெல்லாம் பொருள்கள் எழுதி அவற்றை அகரவரிசைப் படுத்தியிருக்கின்றேம். இஞ் ஞான்றைப் புலவர் தமக்குத் தோன்றியவாறெல்லாம் தமிழ்ச் சொற்கட்குப் பொருள்கள் சொல்லுவதும் எழுதுவதும் செய்து போதருகின்ருர். தமிழ் தொன்றுதொட்டு வழங்கி வரும் மொழியாகலின் அதன் சொற்களைப் பண்டுள்ளார் எவ்வெப் பொருளில் வழங்கினுரென்பதனை இயன்றவரை யில் நன்காராய்ந்து பார்த்துப் பழைய நூல்கட்கு உரை வகுத்தலே பொருத்தமுடைத்தாம். பண்டையோர் ஒரு சொல்லை ஒரு பொருளில் வழங்கப் பின்றையோர் அதனை வேருெரு பொருளில் வழங்குவராயின், அவர் முன்னையோர் கருத்தை ஒருசிறிதும் உணர்ந்தவராகமாட்டார். ஆனது கொண்டு, இதன்கட் புதுவதாகச் சேர்க்கப்பட்டிருக்கும் அருஞ்சொற்பொருளில் ஒவ்வொரு சொற்பொருட்கும் பண்டை நாலுரைகளிலிருந்தும், திவாகரம் பிங்கலந்தை முதலிய நிகண்டு நூல்களிலிருந்தும் மேற்கோள்கள் காட்டியிருக்கின்றேம்.

இனி, இப் பதிப்பின்கண் மற்ருெரு முதன்மையான மாறுதல் செய்திருக்கின்றேம். பெரும்பாலும் வடமொழி புகுதாமல் தனித்தமிழ் நடையில் நூல்கள் எழுதுவதே எமக்கு இயற்கை என்ருலும், வடசொற்களை அறக்களைய வேண்டுமென்னுங் கடைப்பிடி எமதுளத்தில் முன்னிருந்த

தில்லை. ஆனால், இஞ்ஞான்று பலவகைப்பட்ட நூல்கள் எழுதுவாரும் நூல்கட்கு உரை வகுப்பாரும் வடசொற்களை யும் பிற சொற்களையும் தாம் எழுதுந் தமிழில் ஒரு வரை துறையின்றிப் புகுத்தித் தமிழின் தீஞ்சுவையையும் அழகா வளத்தையும் கலங்காத் தூய்மையையும் பழுதுபடுத்தி அதனை யழித்துவருதல் கண்டும், பொருள்களைத் தெரித் தற்கு வேண்டிய அளவுசொற்கள் இல்லாமற் பலவகைக் குறைபாடுகள் உடையதாயிருக்கும் ஆங்கில மொழியைப் பிறமொழிக் கலப்பில்லாமல் வழங்குவது பெரிதும் வருத் தமே யென்றாலும் அம் மொழிக்குரிய ஆங்கில நன்மக்கள் இயன்றமட்டும் அதனைத் தூய்மையாகவே வழங்கல் வேண்டு மென்று கட்டுரைத்து வருதல் கண்டும் மற்றைமொழியின் உதவியை வேண்டாது தனித்து இயங்கவல்ல சொல்வளமும் பொருட் செழுமையும் உடைய நம் செந்தமிழ் மொழியை அதற்கேயுரிய சொற்களால் வழங்காமல் அயல் மொழிச் சொற்களை இடையிடையே நுழைத்து அதன் அழகையும் வலிமையையுஞ் சிதைத்தல் பெரியதொரு குற்றமாமென உணரலானேம். இன்றியமையாது வேண்டப்பட்டாலன்றித் தமிழிற் பிற சொற்களைப் புகுத்தல் நிரம்பவும் பிழைபாடு உடைத்து. 'தமிழிற் பிறமொழிக் கலப்பு' என்று யாம் எழுதிய பிறிதொரு கட்டுரையில் இதனைப்பற்றி விரித்துப் பேசியிருக்கின்றேம். ஆகவே, இவ்வாராய்ச்சியுரையின் முதற் பதிப்பில் ஆங்காங்கிருந்த சிற்சில வடசொற்களையும் இப் பதிப்பிற் களைந்துவிட்டு, அவற்றிற்கு நேரான தமிழ்ச் சொற்களையே அவ்வவ்விடங்களில் அமைத்திருக்கின்றேம். இங்ஙனமே இனிப் பதிப்பிடும் எம்முடைய நூல்கள் எல்லா வற்றிலும் வடமொழிச் சொற்கள் இல்லாவாறு அவற்றை முற்றுங் களைந்துவிட உறுதி செய்திருக்கின்றேம். ஆனா லும், சிறப்புப் பெயர்களாயுங் குறியீடுகளாயும் வழங்கும்

ஒரு சில வடசொற்களை மட்டும் இன்றியமையாது வேண்டிய இடங்களில் ஏற்றுக் கோடல் இழுக்கு ஆகாதென்பதும் உணரல் வேண்டும். தமிழிற் பயன்படும் நூல்கள் எழுதும் அறிஞர் எல்லாரும் அயல்மொழிச் சொற்களைத் தம்மால் இயன்றமட்டும் விலக்கித் தூய தமிழிலேயே எழுதப் பழகுவராயின் அதனால் நம் செந்தமிழ்மொழி வளம் மிகப் பல்கித் துலங்குவ தோடு, அதனைத் துலக்கும் அவர்க்கும் அழியாப் புகழும் அறமும் உண்டாமென்க.

பல்லாவரம்,
சமரச சன்மார்க்க நிலையம்,
சாலி, கஅசக ௵ சித்திரை ௴

வேதாசலம்.

# மூன்றும் பதிப்பின் முகவுரை

இப் பட்டினப்பாலை ஆராய்ச்சி யுரையின் முதற் பதிப்பு முதன்முதற் கி. பி. 1906-ஆம் ஆண்டு வெளிவந்தது. அப் போது அதில் ௨௫௦-படிகளே பதிப்பிடப்பட்டன. அவ் விருநூற்றைம்பது படிகளுஞ் செலவாகப் பதின்மூன் றாண்டுகள் சென்றன. அவை செலவானபின் அதன் இரண் டாம் பதிப்பு ௫௦௦-படிகளாக 1919-ஆம் ஆண்டு பதிப்பிடப் பட்டது அவ்வைந்நூறும் இப்போது பதினோராண்டுகளிற் செலவழிந் திருத்தலை உற்றுநோக்குங்கால், நம் தமிழ் மக்களின் கல்வியுணர்வு முன்னிருந்ததைவிட இப்போது சிறந்து வருதல் புலனாகின்றது. மிகப் பழைய தனித் தமிழ்ச் செய்யுட் சிறப்புணர்ந்து அதனைப் பயிலும் அவா நம் மக்கட்கு மிகுந்துவருதல், அவர்கள் பலதுறைகளிலும் முன்னேற்றம் அடைந்து வருதற்கு ஓர் அறிகுறியாக அறியற்பாற்று.

ஏனென்றாற், பழைய செந்தமிழ்ப்பாக்கள் எல்லாந் தனித்தமிழ் வளம் நிரம்பி, உள்ளதை உள்ளவாறு விளக் கும் உண்மை மாட்சி யுடையன வாகும். பின்றைக் காலத்து, அஃதாவது, "கம்பராமாயண" காலம் முதற் கொண்டு இன்றைவரையிற் றோன்றிய செய்யுள் நூல் களிற் பெரும்பாலன பொய்யும் புளுகும் நிறைந்து, தம்மைப் பயில்வா ருணர்வினைப் பழுதுபடுத்தி, அவரைப் பொய்யிலும் அறியாமையிலும் படுப்பித்து, அவர்க்குப் பிறவித் துன்பத்தை மேன்மேற் பெருக்குந் தன்மைய வாகும். ஆதலாற், பின்றைக்காலச் செய்யுள்நூற் பயிற்சி எவ்வளவுக்குக் குறைந்து, பண்டைக்காலச் செய்யுள் நூற் பயிற்சி எவ்வளவுக்கு மிகுந்து வருமோ அவ்வளவுக்கும் நந்

தமிழ்மக்கள் மெய்யுணர்வுடையராய்ப், பிறவித் துன்பக் கடலை மீண்டு இன்பக்கரை ஏறுவர்.

இப் 'பட்டினப்பாலை' போன்ற பண்டைத் தனித் தமிழ் மெய்ந்நூற் பயிற்சியில் இஞ்ஞான்றுள்ள நம் மனோர்க்குக் கருத்துச் செல்லுதலைக்கண்டு மிக மகிழ்ந்து இம் மூன்றும் பதிப்பில் ஆயிரம் படிகள் பதிப்பிட லாயினேம்.

இம் மூன்றும் பதிப்பின்கண் இன்னும் பல திருத்தங் கள் செய்யப்பட்டிருப்பதுடன், விளக்கவுரைக் குறிப்பு களில் இன்னும் பலவும் புதியவாய்ச் சேர்க்கப்பட்டிருக் கின்றன.

பல்லாவரம்,<br>
பொதுநிலைக்கழகநிலையம்,<br>
திருவள்ளுவர் ஆண்டு ௧௯௬௬, ஆனி உ௫ } மறைமலையடிகள்.

# உள்ளுறை

# உரைப்பாயிரம்

கொழுஞ்சுவை கெழுமிய செழுந்தமிழ் வழக்கில்
உரையும் பாட்டுமென இருதிறனுளவே, அவற்றுள்
உரையெனப் படுவது வரையறை யின்மையின்
சொற்பல வாகி நற்பொருள் விளக்கி
அறிவுநனி துலக்குங் குறியது வுடைத்தே;
வாட்டமில் சிறப்பிற் பாட்டெனப் படுவது
கரும்புகண் ணுடைத்த விரும்புபிழி யிறுக
முழையிற் றுழைஇத் தாழா தட்டோன்
எரியகைந் தன்ன எழிற்பொற் பாண்டில்
விளிம்புற நிறைத்தாங்கு முதுவாய்ப் புலவோன்
பாவிடைச் சுருங்கிய பயங்கெழு சொல்லிற்
கருதுதொறு மாழ்ந்த காழ்த்தபொருள் பொதிப்ப
என்புநெக் குருகும் இசையுடன் றழீஇ
இயற்கையின் வழாம லறிவொருங் குறுத்தி
இன்புணர் வெடுப்பி யன்பே யுருவாம்
முழுமுதற் பொருளொடுங் கெழுவிடப் பயக்கும்
ஆனுத் தலைமைப் பான்மைய துடைத்தே;
இத்தகு சிறப்பின் நற்றமிழ்ப் பாக்கள்
பின்றைநாட் காண்டல் பெரிதரி தாயினும்
பண்டைக் காலத்துப் பழுத்தறிவு மாண்ட
நல்லிசைப் புலவோர் நயமுறக் கிளந்த
முதிர்கட லெக்கர் மணலினும் பலவே; அவற்றுள்,
ஓம்பா தொழிந்தன போக நாம்பெற
இற்றைநாட் போந்த முற்றுதமிழ்ப் பாவுள்
முருகுமுத னிறுத்த அரியன பத்தும்
வரம்பிட லாகாப் பெருஞ்சிறப் பினவே; அவற்றுட்
பட்டினப் பாலையின் முட்டறு மாட்சி

உரைவிளங்க விரித்தற் கறிவிலெ னாயினு
முருத்திரங் கண்ணனெனுங் காட்சிசால் புலவன்
திருத்தகு சீரடி உள்ளக மலர்தலின்
அதன்வயிற் றுளும்பிய அறிவுநறை பிலிற்றி
விளங்கிய வுணர்வான் ஒருப்பட்டு
வளங்கெழு மற்றதன் மாட்சி தெரிக்குவெனே.

# பட்டினப்பாலை

## ஆராய்ச்சியுரை



### க. பாட்டினியல்பு

வேந்தர் பெருமானான சோழன் கரிகாற் பெருவளத்தான் செங்கோலோச்சிய தலைநகரான காவிரிப்பூம் பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறு முகத்தால், குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் என்னும் அகனைந்திணை யொழுக்கத்தில் இடைநின்ற பாலை யொழுக்கத்தை உணர்த்துதற்குப் புகுந்த நல்லிசைப் புலவரான உருத்திரங் கண்ணனார் இப் பாட்டிற்குப் பட்டினப்பாலை யெனப் பெயர் குறித்தருளினார்.

இனி, இதனாசிரியர் புறத்தே கட்புலனுக்கு உருவாய்த் தோன்றும் பட்டினத்தையும், அகத்தே உயிரினுணர்வுக்குப் புலனாய் அருவாய்த் தோன்றும் பாலை யொழுக்கத்தினையும் பாடுதற்குப் புகுந்த நுணுக்கத்தை உணருங்கால் இப் பாட்டின் உயர்ச்சி தெற்றென விளங்கா நிற்கும். அருவாய் அறிவாய் இன்பமாய் யாண்டும் பரந்து நிற்கும் முழுமுதற் பெரும்பொருளைக் கறை கெழுமிய அறிவும் முறைதழுவாச் செயலுமுடைய உயிர்கள் அறிந்தடைதற்கு இருதிறப்பட்ட நிலைகளிருக்கின்றன. அவை அறிவுநிலை

உணர்வுநிலை என்பனவாம். இவற்றுள் அறிவுநிலை என்பது காணப்பட்ட வுருவான இவ்வுலகியற் பொருள்களின் வியத்தகு அமைதிகளைக் கண்டு இவை தம்மை இங்ஙனம் அமைத்தவனான பேரறிவும் பேராற்றலு முடைய முதற் பொருள் ஒன்றுண்டென்று அதன் இருப்பு மாத்திரம் அறிவிப்பதாம். மற்று அம் முதற்பொருளின் உண்மைத் தன்மையோ அவ் வறிவுக்கு ஒரு சிறிதாயினும் புலப்பட மாட்டாதாம். உயிர்களின் அறிவு, உலகியற் பொருள்களை ஒற்றுமைப்பட்டு நின்று அறிதற்குக் கருவிகளான மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் புறக்கருவிகளைந்தானும், மனஞ் சித்தம் புத்தி யகங்காரம் என்னும் அகக் கருவிகள் நான்கானும் நடைபெறுவ தொன்றாம். அகம் புறம் என்னும் இக் கருவிகளின் றுணைகொண் டன்றி அவ்வறிவு வேறு தனித்து நடைபெறக் காணாமையானும், அங்ஙனம் நடைபெறுமிடத்தும் அவ் வறிவாற் பற்றப்படுவன மண் புனல் அனல் கால் விசும்பு என்றற் றொடக்கத்து ஐம்பூதங் களும் அவ்வைம் பூதங்களின் சேர்க்கையாற் பிறந்த பொருட்டன்மைகளுமே யன்றிப் பிறிதின்மையானும், முழுமுதற் பெரும்பொருளான கடவுள் இவ்வாறு அறியப் பட்ட பொருள்களுள் ஒன்றன்றாய் இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டதாய் விளங்குவ தொன்றாகலானும் அவ் வறிவுக்கு அம் முதற் பொருள் ஒரு சிறிதாயினும் புலப்படற் பாலதன்றாய் நிற்றல் பெரிதும் பொருத்தமாவதேயாம். இது பற்றியே அறிவுநூல்களெல்லாம் இறைவனை இவ் வுலகத்துப் பொருள்களுள் ஒன்றாய் வைத்து உடம்பாட் டால் ஓத ஏலாமை தெளியக்கண்டு, இவற்றுள் இதுவு மன்றாய் அதுவுமன்றாய் மற்றெதுவுமன்றாய் அப்பாற்பட்ட தென்று எதிர்மறைமுகத்தான் வைத்து விளக்குதற்கு மாத்திரம் ஒருப்பட்டு,

" விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனுந்,
திரிதரு வாயுவல்லர் செறுதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியில்."

என்றும்,

" பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமு மாதி யில்லான் அளப்பில னாத லாலே
எந்தைதா னின்ன னென்று மின்னதா மின்ன தாகி,
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே."

என்றும்,

" அல்லையீ தல்லையீதென மறைகளு மன்மைச்
சொல்லினாற் றுதித்திளைக்கு மிச்சுந்தரன்."

என்றும்,

" பூதங்க ளல்ல பொறியல்ல வேறு
புலனல்ல வுள்ளமதியின்,
பேதங்க ளல்ல இவையன்றி நின்ற
பிறிதல்ல வென்று பெருநூல்,
வேதங் கிடந்து தடுமாறு வஞ்ச
வெளியென்ப கூடன் மறுகிற்,
பாதங்க ளோவ வளையிந்த னாதி
பகர்வாரை யாயு மவரே "

என்றும் கூறுவவாயின.

இனி, இப்பெற்றித்தான அறிவுக்குப் புலப்படாமை யால் இறைவன் உண்டென்று மாத்திரங் கூறுதலாற் போந்தபயன் என்னையெனின்; அறிவு நிலைக்கு அவன் புலப்படானாயினும் அதற்கு மேற்பட்ட உணர்வுநிலையில் அடையப்படு பொருளாய் விளங்கித் தோன்றுமாகலின் அது கடா வன்றென மறுக்க. அற்றேல், உணர்வு நிலை நம்மனோர்பா லுண்டென்பது எற்றாற் பெறுதுமெனின் ;

காதற்கிழமையிற் சிறந்தாரிருவர் அவ் வுரிமையினைத் தாங் கருதும்போதெல்லாம் அவரகத்தே ஓரின்பந் தோன்றுதல் அநுபவ மாத்திரையாய் விளங்கக் கிடந்ததொன்றும். அவ் வின்பம் அது தோன்றப்பெற்றார் தமக்கே புலனாயினல்லது அஃதிவ்வாறிருந்ததெனப் பிறர்க்கு அறிவிக்கவும் உரைக் கவும்படாத இயல்பிற்றும். காணவுங் கருதவு முரைக்கவும் படாத முதல்வனோ டொற்றித்து நின்று அவனை யனுபவித் தல், அவன்போற் காணவுங் கருதவும் உரைக்கவும் படாத உணர்வுநிலை யொன்றற்குமாத்திரமே வாய்ப்பதாம். என்னை? அகத்தே தோன்றும் அன்பும் அவ்வன்பே தனக் குண்மையுருவாய்க் கொண்ட முதற்பொருளும் வேறல்லா மையால், அவ்வன்பு வரம்பின்றி இளகி விரிந்த உணர்வு நிலையில் அஃதின்பப்பொருளாய் முறுகித்தோன்றல் இன்றி யமையாததாகலின்; இவ்வுண்மை யுணர்ந்தே திருமூலரும்,

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே"

என்று திருவாய்மலர்ந்தருளினார்.

ஆகவே, முழுமுதற்கடவு ளுண்டென்பதனை விளங்க அறிவித்தற்குரிய அறிவுநிலையும், பின் அதனோடு வேறறக் கலந்துநின் றின்புறுதற்குரிய உணர்வுநிலையு மென்னும் இருதிற நிலையினையும் உயிர்களுக்கு முறுகுவித்துப் பின் அவ் வறிவுநிலையினையுங் கழலச் செய்து தூய அன்புருவாய் விளங்கும் உணர்வுநிலையை நிலைபேறுக்குவித்து உயிர் களுக்கு அளந்தறியப்படாத பெரும் பயனைத் தருதற்கு இன்றியமையாக் கருவியாவதுதான் பாட்டென்பது. அற்றேல், உரையுஞ் செய்யுளு மென்னும் இரண்டனுள் உரையும் அவ்விருதிற நிலையும் முறுகுவித்துப் பயன்றரு

மாகலின் செய்யுள் மாத்திரமே அதனைப் பயக்குமென் றுரை கூறிய தென்னையெனின்; பால் கறந்த மாத்திரையே யுண்பார்க்குச் சுவை பயக்குமாயினும், அதனை வற்றக் காய்ச்சிக் கட்டியாகத் திரட்டிப் பின்னுண்பார்க்குக் கழி பெருஞ் சுவை தருதல்போலவும், முற்றின கருப்பங்கழியை நறுக்கிப் பிழிந்த மாத்திரையே அதன் சாற்றைப் பருகு வார்க்கு அஃதினிமை விளைக்குமாயினும் மேலும் அதனைப் பாகுதிரளக் காய்ச்சிச் சருக்கரைக் கட்டியாக எடுத்துண் பார்க்கு ஆற்றவும் பேரினிமை பயத்தல்போலவும், உரையும் நலம் பயப்பதொன்றேயாயினும் அதனைக் காட்டினுஞ் செய்யுளாற் பெறப்படும் பயன் சாலவும் பெரிதாம். கறந்த பால் நீராளமாய் நெகிழ்ந்திருத்தலின் அதன்கண் ணுள்ள சுவை மிகுந்து தோன்றுது குறைந்தே காணப்படுகின்றது அதுபோல, உரையும் ஒரு வரம்பின்கட்படாது சொற் பெருக்கமுற்று நடைபெறுதலால் அதன்கட் புதைந்த பொருளும் ஆழமாகவின்றி அச்சொற்களோடு ஒத்து ஒழுகி மெல்லிதாய் விடுகின்றது. மற்றுக் காய்ச்சித் திரட்டிய பாற்கட்டியுஞ் சருக்கரைக்கட்டியும் இறுகித் திண்ணென்ற உருவுடையவா யிருத்தலின் அவற்றின்கட் சுவை மிக முதிர்ந்து தோன்று நிற்கின்றது. அதுபோலச், செய்யுளும் எழுத்து அசை சீர் தளை அடி தொடைகளா னமைந்த பாவாய் ஒரு வரம்புட்பட்டுச் சொற் சுருக்க முடைத்தாய் நடத்தலின் அதன்கட் புதைந்த பொருளும் அவற்றோடு ஒப்ப ஒழுகித் திட்பமும் ஆழமும் உடையதாகின்றது. பாட்டெல்லாம் அறிவு நிலையைப் பற்றிக்கொண்டு போய் உயிர்களின் உணர்வுநிலையை எழுப்பி விடுவதாகும். உரை யெல்லாம் அறிவுநிலையைப் பற்றியே நிகழுமல்லது அதன் மேற் சென்று உணர்வுநிலையைத் தொடமாட்டாதாகும். பெரியதோர் மலைமுழைஞ்சினுட் பொன்னும் மணியுஞ்

சிதறிக் கிடத்தல் ஒரு வியப்பன்று; ஒரு சிறு கற்பிளவிலே அரிய பெரிய முழுமணிகள் அடுக்கடுக்காய்க் கிடந்து எடுக்குந்தோறும் குறைபடாதிருத்தலே பெரிதும் வியக்கற்பாலதாகும். சிறிய வான்மீன்கள் அகன்ற அவ் வானத்திற் காணப்படுதல் ஒரு வியப்பன்று; அவ் வகன்ற வானும் வேறு மாடமாளிகை கூடகோபுரங்களும் ஒரு சிறிய கண்ணாடியினுட் காணப் படுதலே மிகவும் வியக்கற்பாலதாம். இதுபோலப் பெரிய ஓர் உரையிலே சிலபொருளேனும் பலபொருளேனுங் காணப்படுதல் வியப்பினை விளைவியாது மற்றுச் சிறியதொரு பாட்டிலே பல திறப்பட்ட ஆழ்ந்த பொருளெல்லாம் காணப்படுதலே வியக்கற்பாலதாகும். உரையில் ஒரு வரையறை யின்மையினாலே பொருட்கு வேண்டுவனவும் வேண்டாதனவுமான பல சொற்கள் நிரம்பி நின்று வியப்பினைத் தாராவாய்த் தாமெடுத்த பொருளை மாத்திரம் எம்மறிவுக்குப் புலங்கொள விளக்கி யொழிகின்றன. மற்றுச் செய்யுளிலோ பொருட்சாரமான சொற்கள்மாத்திரம் ஆய்ந்தமைக்கப் படுகின்றனவாகலின், அச் சொற்கள் கொண்ட பொருட்கருவை அறியப் புகுவானொருவன், தன் அறிவால் அதனைக் கூர்த்தறிய வேண்டுதலின் தன்னறிவு மிக நுணுகப் பெறுதலோடு அச் சிறிய சொல்லிற் பெரிய பொருளடங்கி நிற்றலை அறிந்த மாத்திரையினாலே தன்னை யறியாதொரு வியப்புமுடனெய்தி, அதன்கண் ஓர் இன்பந் தோன்ற அதன் வயப்பட்டுச் சிறக்கின்றான். ஆகவே, பாட்டு ஒன்றுமே உயிர்கட்கு அறிவை விளக்கி அதற்கும் மேற்பட்ட உணர்வை எழச்செய்து இன்பம் பயப்பதொன்றாய் நிலைபெறுகின்றது. உரைப் பயிற்சியில் அறிவு மாத்திரம் விளக்க மெய்துமே யல்லது உணர்வின் வழித்தான இன்பந்தோன்றுதல் இல்லையென்க. அல்லதூஉம், உரையெல்லாம் இயற்கையிலேயே இசைதழுவாது நடப்

பனவாமாகலின் அவை உணர்வை எழுப்புமாறு எவ்வாற்றானு மில்லையென்க. பாட்டுகளோ இயற்கையாகவே இடங்கட்கு ஏற்ற பெற்றி யெல்லாம் பல திறப்பட்ட இசைதழுவி நடக்குமாகலின் அவை உயிருணர்வை எழுப்புதற்கட் பின்னுஞ் சிறப்புடையவாம். என்னை? இசையைக் கேட்டு உருகாத பொருள் உலகத் தில்லையன்றே? உலகியல் சிறிதுமறியாத மகவை அன்னை தொட்டிலிற் கிடத்தித் தாலாட்ட அஃதவ்விசையா லின்புற்று உறங்கல் கண்டாமன்றே? கொடிய விலங்கினங்களும் நச்சுயிர்களும் புல்லாங்குழலோசை கேட்டவளவானே தந்தொழில் மறந்து இன்புற்றுத் தன்வயமழிதல் தெளியப்பட்ட தொன்றன்றோ? இதன்மாட்சி இனிது அறிவுறுத்தற்கன்றே மாணிக்கவாசகப் பெருமான் திருச்சிற்றம்பலக் கோவையாரில்,

> "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்
>     பலத்துமென் சிந்தையுள்ளும்
> உறைவா னுயர்மதிற் கூடலி
>     னாய்ந்தவொண் டீந்தமிழின்
> றுறைவாய் நுழைந்தனை யோவன்றி
>     யேழிசைச் சூழல்புக்கோ
> இறைவா தடவரைத் தோட்கென்கொ
>     லாம்புகுந் தெய்தியதே."

என்று திருவாய்மலர்ந் தருளினர் இப் பெற்றித்தான இசை, தானேயும் இன்புறுத்துகின்ற பாட்டோடுஞ் சேருமாயின் அவையிரண்டின் கலப்பாற் றோன்றும் இன்பம் இவ்வியல்பிற்றென்று குறித்துரைக்கல் ஏலுமோ? எனவே இசையோடு பிணைந்தியங்கும் பாட்டிற்கும் அஃதின்றியியங்கும் உரைக்கும் உள்ள வேறுபாடும், இவ்விரண்டில் முன்னையது பயன் பெரிதுடைத்தாதலும் பின்னையது பயன் சிறிதே யுடைத்தாதலும் தெற்றென விளங்காநிற்கும். அற்றன்று, உரைநூல்களும் ஒரோவழி வியப்புணர்வு

தரக்காண்டுமாகலின் அதனைச் செய்யுளுக்கே வரைந்து கூறியது பொருந்தாதாம் பிறவெனின்; நன்றுகடாயினாய், ஒரோவோருரை நூல்களின் இடையிடையே பாட்டிற்குரிய சொல்நயம் பொருள்நயங்கள் காணப்படுதலால் அங்ஙனம் அவ் வியப்புணர்வு தோன்றிற்றாகலின் அதுபற்றி ஈண்டைக் காவதோர் இழுக்கில்லை யென்பது. இப் பெற்றிப்பட்ட உரைப்பகுதிகள் சில ஆசிரியர் நக்கீரனார் களவியலுரையி னிடையிடையே காணப்படும்; அவை கொண்டு இவ் வுண்மை அறியற்பாற்றும்.

இனிப் பாட்டுச் சொற்சுருக்கமும் பொருட்பெருக்கமு முற்று இசைதழுவி நடப்பதனான் இன்புறுத்துமென்ற அவ் வியல்பை ஒருதாரண முகத்தான் விளக்கவே அஃதினிது விளங்குமாகலின் மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருச்சிற்றம்பலக் கோவையா ரென்னுங் களஞ்சியத்துள்ள ஒரு முழுமணியை ஈண்டெடுத்துக் காட்டுவாம்:

"ஆவா இருவர் அறியா அடிதில்லை யம்பலத்துள்
மூவா யிரவர் வணங்கநின் றோனையுன் னாரின்முன்னித்
தீவா யுழுவை கிழித்ததந் தோசிறி தேபிழைப்பித்
தாவா மணிவேல் பணிகொண்ட வாறின்றொ ராண்டகையே"

என்பது, தன்னுடைய தலைமகள் எவ்வாற்றானுஞ் சிறந்த ஓராண்மகனோடுங் காதல்கொண்டு நேயமானமை சில குறிப் பாலறிந்த தோழி பின்னும அவரிருவர் மாட்டும் நிகழ்ந்த அந் நேய வுரிமையினைத் தெளிந்து கொள்ளும்பொருட்டுத் தன்றலைமகளை நோக்கி அவள் நடுங்குதற்கேதுவாவன சில சொல்லி அதனான் அவ்வுண்மை துணிகின்ற நடுங்கநாட்டம் என்னுந் துறைபற்றிவந்தது இத் திருப்பாட்டு. இதன்கண் முன்னிரண்டடிகளும் கன்னெஞ்சினையும் இளக்கும் அன் பின் சுவைநிரம்பி முழுமுதற் பொருளான சிவத்தின்

பெருமை தெரிவியா நின்றன; பின்னிரண்டடிகளும் தோழி தன் தலைமகளை நோக்கி நடுங்கக் கூறியதைக் காட்டு கின்றன. தலைமகள் 'எட்டியுஞ் சுட்டியுங் காட்டப்படாத' வடுவில்லாச் சிறந்த குலத்திற் பிறந்து நல்லொழுக்கமே அணிகலனுய்க் கொண்டு போதருகின்றுளாகலின் அவளை நோக்கி 'நீ சிறந்த அவ் வாண்மகனேடு காதல்கொண்டமை யான் அறிவேன்' என்று கூறுதற்கு மிக அஞ்சியும், அவ் வாறு கூறல் தன் நிலைக்குத் தகாதெனநினைந்தும், தலை மகடன் வாயானே அதனை யுரைப்பக் கேட்டலே முறை யாமென உறுதிசெய்தும் இச் செய்யுளில் மிகவுந் திறம்பட அதனை ஆராய்ந்தமை பெரிதும் வியக்கற் பாலதாம். அப் பின்னிரண்டடியின் பொருள் வருமாறு: 'கண்மணி யனை யாய்! இன்று யான் இம் மலைச்சாரலின் வழியே வருவே னயினேன், அங்ஙனம் வருவேனுக்குச் சிறிது சேய்மைக் கண்ணே சினத்தாற் றீயை யுமிழும் ஒரு பருத்த வேங்கைப் புலி அந்தோ கிழித்தது! ஆ! அதனை ஒரு நொடிப்பொழு திலே தப்பிப்போய் எவ்வாற்றானுஞ் சிறந்தவனான ஓர் ஆண்டகை தன் வேற்படையைச் சுழற்றிய திறத்தை என் னென்று கூறுவேன்!' என்று தோழி தலைமகளை நோக்கிக் கூறியதாம். இங்ஙனங் கூறியதனைக் கேட்டலுந் தலைமகள் முதலிற் பொறுத்தற்கரிய நடுக்க மெய்திப் பின் சிறிதே அது தணிந்து எண்ணுவாள்: 'என்னை! இம் மலைச்சாரலில் எளியேன்பொருட்டு வந்து இயங்குவான் என் ஆருயிர்க் காதல னொருவனன்றே! அவனை யன்றி ஆடவர் பிறர் இங்கு வரப்பெறுரன்றே! அவன் ஒரு பெரிய வேங்கைப் புலியால் இழுக்க மெய்தினனே!' என்றிங்ஙனமெல்லாம் ஆராய்ந்து வருந்து நிலைமையில் ஈண்டுத் தோழி தன் சொற் களை அவள் ஐயுறுமாறு கூறிய விரகு நனி வியக்கப்படுந் தன்மைத்து. தன்றலைவி கற்பிற்கு அரசியாகலானும் மிக

நுண்ணிய உணர்வுடையளாகலானும் தன் காதற் கொழுநன் புலிக்கோட்பட்டான் என்பது கேட்டனளாயின் அது கேட்ட அந்நொடியே உயிர் துறப்பாள் என மிக அஞ்சித் தான் கூறுஞ் சொற்களில் துணிவுபிறவாது ஐயமே நிகழு மாறு கூறினாள். 'தீவாய் உழுவை கிழித்தது' என்னுஞ் சொற்றொடர் 'தீவாயையுடைய புலி மற்றையொருவிலங்கை நகத்தாற் கிழித்தது' எனவும், 'அவ்வாண்மகனை அல்லது ஒருவிலங்கைக் கௌவுதற் பொருட்டு அப் புலி தன் தீவாயை அகலத் திறந்தது' எனவும், 'வேங்கை தன் வாயாற் கிழித்ததென்றே சொல்லற்கியைந்த அந் நேரத்தே' என வும் பலபொருடந்து 'அங்ஙனம் அவ் வேங்கை நிற்கும் அப்பொழுதே அவ் விலங்கை அது கிழிப்பதனினின்றும் தவறச்செய்து, அல்லது அது தன்வாயை அகலத் திறந்த தற்குத் தப்பி, அல்லது தன்னைப் பற்றுதற்கு அது வந்த தாக அதனைத் தப்பி அவ்வாண்மகன் தன் வேற்படையை விடுத்து அதனைக் கொன்றவாறு பெரியதொரு வியப்பா யிருந்தது' என்னும் பின்றொடரோடு இயைகின்றதாகலின், இச் சொற்றொடரைக் கேட்ட தலைமகள், தன் காதலன் இறந்துபட்டான் என்னும் பொருட்டுணிவு அதனாற் பெறப் படாமையின் தானும் இறந்துபடாளாய்க் கலக்க மாத்திரம் மிகக்கொண்டு அச் சொற்றொடர்ப் பொருடெளியும் நிலையி லிருந்தாள். இங்ஙனம் கலக்கங் கொண்ட அந் நிலையில் தான் அவ்வாண்டகைமேற் கொண்ட காதலை மறைக்கும் நினைவை மறந்து அக் காதலைத் தன்றோழிக்கு முற்றும் புலப்படுத்தினாளாகலின், அச் சொற்பொருடெளிந்த பின் னேரத்தே தன் காதல் தோழிக்குப் புலனாயினமை கண்டு பின் அதனை அவட்கு மறையாளாய் உரைப்பாளாவது. இவ்வாறு தன்றலைவியின் நிலை அவடானே புலப்படுத்தற் கென்று தோழிசெய்த சூழ்ச்சியாக மாணிக்கவாசகப்பெரு.

மான் வைத்துக் கூறிய வியத்தகும் ஆற்றலை நினையுங்கால் மக்கள உள்ளத்தின இயல்புமுற்றும் அவர் இனிது விளங்கவில்லையா? இற்றை ஞான்று ஆங்கில நன் மக்கள் செய்துபோதரும் உளநூல் ஆராய்ச்சிகளெல்லாம்[1] இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முற்பட்ட நம்பெருமான் திருப்பாட்டிலமைந்து கிடத்தல்பற்றி நம் முள்ளம் இறுமாப் பெய்துகின்றது. "ஆவா விருவரறியா" என்னுமிச் செய்யுள் சில்சொல்லிற் பல்பொருடேற்றி அறிவை நுணுகச் செய்து அவ்வாற்றால் உணர்வெழுச்சி பெறச்செய்தல் நன்கு தெளியக்கிடந்தது. இதனோடு இச் செய்யுள் இன்னோசை நலந்தழீஇ வாய்ப்புறச் சென்று கேட்டாரை யெல்லாம் இன்புறுத்துமாறும் குறிக்கொளற் பாற்று. இவ்வாறே திருச்சிற்றம்பலக் கோவையாரிலுள்ள ஒவ்வொரு செய்யுட்களும் சொல்வளம் பொருள்வளந் துறுமி மிளிர்கின்றன; இவ் வருமைத் திருக்கோவையாரை யொக்கும் நூல்கள் தொல்காப்பியம் திருக்குறள் என்னு மிரண்டுமே யன்றிப் பிற எந்நூலும் எக்காப்பியமும் இதற் கொப்பாகா. இம் மூன்று நூல்களும் ஒப்புயர்வில்லா உவரா அமிழ்தங்களாம். இத் திருக்கோவையாரின் சிறப்புணர்ந்தே ஆன்றோர்,

> "ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
> காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலிதென்பர்
> ஏரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
> சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே."

என்று அருளிச் செய்தார்.

என்றிங் கெடுத்து விளக்கியவாற்றாற் செய்யுளென்பது சொற்சுருக்க பொருட்பெருக்கமுற்று இசைதழீஇ நடந்து உயிர்களறிவை விளக்கிப் பின்னதன் மேற்பட்ட உணர்வை

1. Psychological researches.

எழச்செய்யும் பான்மையுடைத்தாதல் இனிது பெறப் பட்டது.

இனி இப் பட்டினப்பாலை என்னும் அரிய பெரிய பாட்டை அருளிச்செய்த உருத்திரங்கண்ணனார் 'வசையில் புகழ் வயங்கு வெண்மீன்' என்னும் முதலடி தொடங்கி 'முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்' என்னும் இருநூற்றுப் பதினெட்டாம் அடிகாறும் காவிரிப்பூம் பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறுமுகத்தாற் பயில்வோர் அறிவை ஓர் ஒழுங்குறச் செய்து விளக்கிக் கொண்டுபோய்ப், பின் அவ்வறிவின் மேற்பட்ட அகவுணர்வை 'வாரிருங்கூந்தல் வயங்கிழை யொழிய, வாரேன் வாழிய நெஞ்சே' என்னும் இருநூற்றுப் பத்தொன்ப திருநூற்றிருபதாம் அடிகளில் எழச்செய்து, அவ்வாறு இடையிற் கருக்கொண்ட அவ் வகப்பொருளை 'வேலினும் வெய்ய கானமவன், கோலினுந் தண்ணிய தடமென் றோளே' என்னும் இப் பாட்டின் இறுதி யடிகளோ டிணைத்து முடித்திட்டார். பாட்டியற்றும் நல்லிசைப் புலவர் நம்மறிவை ஒருமைப் படுத்து விளக்குமாறுபோற் பிறர் அங்ஙனஞ் செய்யமாட்டுவா ரல்லர். நம்மறிவெல்லாம் ஐம்பொறி வழிச்சென்று உலகியற் பொருள்களைப் பற்றிக்கொண்டே நிகழ்கின்றன. அப் பொருள்களை அங்ஙனம் பற்றிக் கொண்டு நிகழ்வுழியும் அப் பொருட்டன்மைகளை நுணுகி யறியமாட்டாவா யொழிகின்றன; இங்ஙனம் ஒரு நேரத் தொருபொருளைப் பற்றியும் பிறிதொரு நேரத்துப் பிறிதொருபொருளைப் பற்றியும் ஓரிடத்தும் நிலைபெறலின்றிக் குரங்குபோல் ஓடுதலாலன்றோ நம்மறிவு விளக்கமடைதலின்றி மழுங்கியே கிடக்கின்றது. அறிவு விளங்காது மழுங்கிக் கிடக்குமாயின் அதன் மேற்பட்ட உணர்வு எழப்பெறுதல் ஒருவாற்றானு மில்லையாம். ஆகவே, கறங்கோலைபோல் ஒருவழி நில்லாது

சுழன்று திரிதரும் நம்மறிவை ஓர் ஒழுங்கு படுத்து ஒருமுகப்படுத்திக்கொண்டு சென்று உணர்வை எழச்செய்தலே நல்லிசைப் புலவோர்க்கு இன்றியமையாத கடமையாம்.

இனி அறிவு அங்ஙனம் நிலையின்றித் திரிதலை மறித்து அடக்குமாறு யாங்ஙனமெனின்; எங்கே உண்மைத் தன்மை விளங்கித் தோன்றுமோ அங்கே நம்மறிவு ஊன்றி நிற்றல் கண்கூடா யறியப்பட்ட தொன்றாம். மானைப்போல் வெண்மைச் சலவைக்கல்லில் ஓர் உருச் செதுக்கலுறுவான் ஒரு கம்மியன் அம் மானின் உறுப்பமைதிகள் தோன்றுமாறு நுணுகியறிந்து அவற்றைச் சிறிதும் பிறழாமல் உண்மையாகச் சமைத்திடுவனாயின் அவ்வுருவைக் காண்பார் அறிவு அதன்கண் ஒருப்பட்டு நின்று வியத்தல் கண்டாமன்றோ? ஓவியமெழுதுதலில் மிகவல்லவராய் விளங்கும் இரவிவன்மர் எழுதிய ஓவியங்கள் எத்துணை நுட்பமாய் உருவவுண்மையியல் வழாமல் விளங்குகின்றன! பார்மின்! கானகத்தே சகுந்தலை துஷியந்த அரசன் மேற்கொண்ட காதல்வெப்பம் பொறுளாய்ப் பிரியம்வதை அனசூயை என்னுந் தன்றோழிமா ரிருவருந் தன்னிருமருங்குமிருப்ப மலர்ப்பாயலிற் படுத்தவண்ணமே தன் காதலை அறிவித்துத் தாமரையிலையில் ஒரு செய்யுள் எழுதுதற்குக் கையில் எழுதுகோல் ஏந்தியபடியே ஒரு புருவம் மேல் நெறியக் கவியை நினைத்தலும், அவள் பக்கலிற் பசுத்து அடர்ந்திருக்கும் புன்மேற் பூக்கள் இறைந்துகிடத்தலும், பின்னே ஒரு மான் இவர்களைத் திரும்பிப் பார்த்தவண்ணமாய் நிற்றலும், பருத்துயர்ந்த மரங்கள் மிகநெருங்கித் தண்ணிழல் பயந்து நிற்றலும், வலப்பக்கத்திருக்கும் தோழி பக்கத்தே தண்ணீர்க்குடம் ஒன்று நிற்கப் பிறிதொன்று சாய்ந்து கிடத்தலும், அத் தோழிமார் எடுத்துவந்த பூங்கூடைகளில் உருகெழு மருமலர் நிரம்பியிருத்தலும் பிறவும்

இயற்கை மாறுபடாமல் எவ்வளவு உண்மையாய் எழுதப் பட்டிருக்கின்றன ! இவ்வா றுண்மைவழுவா தெழுதப்பட்ட அவ்வோவியத்தை நோக்குந்தோறும் நம்மறிவு அதன் வயப்பட்டு நின்று, இன்பம் பயத்தல் காண்டுமன்றே? இது போல நல்லிசைப் புலவரும், ஒருநிலையின்றி யோடும் நம தறிவை ஓர் ஒழுங்கு படுத்தற்பொருட்டு அவ்வறிவு பற்றிச் செல்கின்ற உலகியற் பொருள்களில் அழகு மலிந்து விளங்குவனவற்றை அவை விளங்குமாறே விரித்துக் கூறி அவ்விரிந்த அறிவைச் சிறிது சிறிதே சுருக்கிக் கொண்டு போய் அகமுகப்படுத்தி உணர்வெழச் செய்து இன்பத்தின் கண் இருத்துவர். இங்கே ஆசிரியர் உருத்திரங்கண்ணனார் புறப்பொருளில் வரையறையின்றிச் செல்லும் நம்மறிவை மடக்கி நிறுத்துதற்பொருட்டு அப் புறப்பொருள்களுள் மிக்க அழகும் வளனும் நிரம்பித் தோன்றும் காவிரிப்பூம் பட்டினத்தை முதலிருநூற்றுப் பதினெட்டு அடிகள் காறும் உண்மை வழாது விரித்து அழகுபெறக் கூறுதல் பெரிதும் பாராட்டற் பாலதொன்றும். பாகன்வயப்படாது கலினத்தை அறுத்துக்கொண்டு மிக விரைந்துபோம் புரவியை அப்பொழுதே பிடித்து நிறுத்த முயல்வான் அது கூடாமையின் தானிடர்ப்படுமேயல்லது வேறின்றும்; பின் அது செல்லுமாறெல்லாம் விடுத்து அது வலிகுன்றி அயர்ந்த துணையானே அஃது எளிதிலே பாகன் வயப்படு மாகலின், அப் பிற்பொழுதே அதனை யாளுதற்குரிய கால மாம். அதுபோல் உலகியற்பொருள்களில் வரம்பின்றியே சென்று சென்று பழக்கம் முதிர்ந்த நம்மறிவானது, அவற் றுட் சிறந்தன சிலவற்றைப் பற்றுமாறு செயப்பட்ட மாத்திரையானே அஃது அப் பழக்கந் தவிர்ந்து அகமுகப் பட்டு ஒருங்குங்கால் அதற்கு ஆற்றல் சிறிதேயாகலின், அதனை லப்போது பற்றப்படும் அகப்பொரு ளொழுக்கத்தை

" வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய, வாரேன் வாழிய நெஞ்சே" என இரண்டடியான் மாத்திரம் மிகச் சுருக்கிக் கூறிய இவ்வாசிரியர் நட்ப வறிவின் வன்மையை என்னென்பேம்! இப் பட்டினப்பாலை முழுவதூஉம் முந்நூற்றோரடிகளா னமைக்கப்பட்டிருக்கின்றது. இவற்றுள் இருநூற்றுத் தொண்ணூற்றேழடிகளிற் புறப்பொருள் விரிவும் ஏனை நான்கடிகளில் மாத்திரம் அகப்பொருட் சுருக்கமும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வாறே திருமுருகாற்றுப் படை முதலிய செய்யுட்களினும் புறப்பொருட் சிறப்பே பெரும்பான்மையாற் கூறிவைத்து ஏனை அகவுணர்வின் றிறனெல்லாம் மிகச் சுருங்கவே சொல்லப்பட்டன. புறத்தே விரிந்த அறிவெல்லாம் முறைமுறையே சுருக்கப்பட்டு அகத்தே செல்வுழி அஃதொன்றின் மாத்திரமே உறைத்து நிற்றலிற் புறப்பொருள்வழி வைத்து விளக்கப்படும் அகப்பொருளெல்லாம் மிகச் சுருக்கிக் கூறுதலே மனவியற்கைக்கு இயைந்ததாம். இந் நட்பஞ் செவ்விதி னறிந்த உருத்திரங்கண்ணனாரது அறிவின் மாட்சி அளவிடற்பாற்றன்று.

இனிக், 'கரிகாற் பெருவளத்தான் பகைவர்மேலோச்சிய வேலைக்காட்டினும் யான் செல்ல விரும்பிய கானம் மிகவுங்கொடுமையாய் இராநிற்ப, இவள் அகன்ற மென்றோளோ அவன் செங்கோலினுங் குளிர்ந்திருக்கின்றனவாகலின், ஏ நெஞ்சமே! என் காதலி இங்கே தனியளாயிருப்ப யான் காவிரிப்பூம்பட்டினத்தையே பரிசிலாகப் பெறுவேனாயினும் இவளைப் பிரிந்துவருதற்கு ஒருப்படேன்,' என்று தன் காதலியைப் பிரிந்து போதற் கெழுந்த தலைமகன் பின் அவளைப் பிரியமாட்டானாய்த் தன் நெஞ்சை நோக்கிக் கூறியதாக இச் செய்யுள் உருத்திரங் கண்ணனா ரியற்றப்பட்டது. இதில் 'திருமாவளவன் றெவ்வர்க்

கோக்கிய, வேலினும் வெய்ய கானமவன், கோலினுந் தண்ணிய தடமென் ரோளே' என்பதே இப் பாட்டின் முதற்கண் வரற்பாலதா லெனின்; புறப்பொருளை முற்கூறி அவ்வாற்றால் அறிவை இழுத்துச் சென்றே அகப்பொருட்கட் பதிய வைத்தல் வேண்டுமாகலானும், 'பட்டினப்பாலை' என்னு மிதன் பெயர்க்கேற்ப முதலிற் பட்டினத்தின் சிறப்பைக் கூறிவைத்து அதன்பின்னே பாலை யொழுக்கங் கூறல் வேண்டுமாகலானும் முதலிரு நூற்றுப் பதினெட்டு அடிகள் காறும் காவிரிப்பூம்பட்டினச் சிறப்பையே கூறுவாராயினர். அற்றேல், இடையிற்கூறிய "வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய, வாரேன் வாழிய நெஞ்சே" என்னு மிவ்வகப் பொருளடிக ளிரண்டனையும் இறுதியில் நின்ற 'வேலினும் வெய்ய கானம்' என்பதனோடு சேர்த்துக் கூறுதலே அமையும்; என்னை? முதல் இருநூற்றுத்தொண்ணூற்றேழ் அடிகளும் புறப்பொருளே இடையறாது கூறி மற்றை அகப் பொருளெல்லாம் ஏனை நான்கடியாற் கூறி முடிப்பது பொருந்துமாகலின் எனின்; அற்றன்று, முழுவதூஉம் புறப்பொருளே கூறிச்செல்லிற் பயில்வோருணர்வு சலிப் படையுமாகலானும், இவ்வுடம்பு உளதாங்காறும் புறப் பொருள் வழிச்சென்று மடங்கி அகத்தே குவிந்த அறிவு அவ்வகமுகமாயே யொழியாது திரும்பவும் புறம்படக் காண்டு மாகலானும், புறப்பொருளெல்லாஞ் சொல்லிக் கொண்டுபோய் இறுதியில் மாத்திரம் அகப்பொருட்டுறை யுரைப்பின் புறத்தே சென்றுமடங்கி அகத்தே போய்க் குவிந்த அறிவு மறித்தும் புறம்படாதுபோது மெனப்பட்டு இயற்கையொடு முரணுமாதலானும், காவிரிப்பூம்பட்டினச் சிறப்புக் கூறியபின் அவ்வகப்பொருளைப் பிளவுசெய்து முன்னிரண்டடியை இடையே வைத்தும் பின்னிரண்டடியை இறுதியில் வைத்தும் இவற்றின் நடுவே கரிகாற் பெருவளத்

தான் வெற்றித்திறம் விளம்பியும் சென்றால் முதற்கட் புறத்
தரு வழிச்சென்று அகத்தடங்கிய அறிவு பின்னும் புறம்
பட்டுப்போய்ப் பெயர்த்தும் அகத்தடங்கி இங்ஙனம்
இயங்கப்பெறு மியல்பினதென்னும் மக்கள் மனவுண்மை
நன்கறியக் கிடக்குமாகலானும், அகப்பொருளடி நான்கனை
யும் ஒரு சேர இறுதியில் நிறுத்திக் கூற ஒருப்பட்டிலராய்
இடையிலிரண்டும் இறுதியிலிரண்டுமாக வைத்தருளினா
ரென்க. அற்றேல், 'வேலினும் வெய்ய' என்னும் இறுதி
யிரண்டடியினையும் இடையில் வையாது 'வாரிருங்கூந்தல்'
என்பவற்றை மாத்திரம் இடையில்
றென்னையெனின்; தன் மருங்கிருந்து 'காதற்கொழுநன்
பிரிவனோ' என ஐயுற்று ஆற்றாளாம் தன் மனையாள் ஐயந்
தீர்த்து அவளைத் தேற்றுத லுறுவான் 'வேலினும் வெய்ய
கானம்' என்பதனை முதலிற் சொல்வனாயின் 'என் காதலன்
என்னை இங்கே விடுத்து 'இப்பெற்றித்தாங் கானத்திலே
போயின் எவ்விடர் நேருமோ' என மேலுமேலும் ஆற்றாமை
மிக்கு வருந்துவளாகலின் அதனை முதற்கட் கூறப்பெறான்;
மற்று 'இவளைப் பிரிந்து வாரேன்' என்பதனை முதற்க
ணுரைப்பின் அது கேட்ட துணையானே இவள் ஆற்றாமை
நீங்கி இன்புறுவளாகலின் "வாரிருங் கூந்தல் வயங்கிழை
யொழிய, வாரேன் வாழிய நெஞ்சே" என்பதனையே
ஆண்டிடைக்கட்படுத்துக் கூறினார் ஆசிரியர் என்க. அல்ல
தூஉம் காவிரிப்பூம்பட்டினம் என்னும் புறஇடத்தைக்
கூறியவுடனே அகவிடத்தைக் கூறுதலே பொருத்தமுடைத்
தாகலானும் அவ்வாறதனை முன்வைத்தா ரென்க.

இனிக் காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய
ஆசிரியர் அதன்கட் செங்கோலோச்சும் அரசன் கரிகாற்
பெருவளத்தானையுங் கூறல்வேண்டுவது மரபாகலின்
இடையில் நிறுத்திய அகப்பொருட்டுறைக்கும் அத்துறை

முடிவாய் இறுதியில்நின்ற அடிகட்கும் இடையே யுள்ள சந்துவா யறிந்து அதன்கண் அவ் வரசன் வலத்தைச் சிறந் தெடுத்துக்கூறி இறுதியில்நின்ற அகப்பொருளோடு இயைபு படுத்துவாராயினர். இங்ஙனமெல்லாம் செய்யுளியற்றும் நுட்பம் முற்றுமுணர்ந் திதனை அமைத்த இவ்வாசிரியர் உருத்திரங்கண்ணனார் நுட்பவினைத்திறன் 'முல்லைப்பாட்டு' இயற்றிய ஆசிரியர் நப்பூதனார் நுட்பவினைத்திறத்தோடு ஒப்புமைபெற்று விளங்கித் தோன்றுதல் காண்க.

## உ. பட்டினப்பாலை

வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி
ரு வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
கo [1]தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச்செறுவி னீணெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கட்
காய்ச்செந்நெற் கதிரருந்தி
மோட்டெருமை முழுக்குழவி
கரு கூட்டுநிழற் றுயில்வதியுங்
கோட்டெங்கிற் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ்மஞ்ச
ளினமாவி னிணர்ப்பெண்ணை
முதற்சேம்பின் முளையிஞ்சி
உo யகனகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கி
னேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு
உரு முக்காற் சிறுதேர் முன்வழி விலங்கும்[2]

---

(பாடம்) 1. 'தீத்தெறுதலின்.' 2. 'விலக்கும்.'

விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
௩௰ நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்குங்
கழிசூழ்படப்பைக் கலியாணர்ப்
பொழிற்புறவிற் பூந்தண்டலை
மழைநீங்கிய மாவிசும்பின்
௩௫ மதிசேர்ந்த மகவெண்மீ
னுருகெழுதிற லுயர்கோட்டத்து
முருகமர்பூ முரண்கிடக்கை
வரியணிசுடர் வான்பொய்கை
யிருகாமத் திணையேரிப்
௪௰ புலிப்பொறிப் போர்க்கதவிற்
றிருத்துஞ்சுந் திண்காப்பிற்
புகழ்நிலைஇய மொழிவளர
வறநிலைஇய வகனட்டிற்
சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
௪௫ யாறுபோலப் பரந்தொழுகி
யேறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி
நீறாடிய களிறுபோல
வேறுபட்ட வினையோவத்து
௫௰ வெண்கோயின் மாசூட்டுந்
தண்கேணித் தகைமுற்றத்துப்
பகட்டெருத்தின் பல்சாலைத்
தவப்பள்ளித் தாழ்காவி
னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு

௫௫ மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம்
மாயிரும் பெடையோ டிரியல் போகிப்
பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்
தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கு
முதுமரத்த முரண்களரி
௬௦ வரிமணலகன் றிட்டை
யிருங்கிளை யினனொக்கற்
[1]கருந்தொழிற் கலிமாக்கள்
கடலிறவின் சூடுதின்றும்
வயலாமைப் புழுக்குண்டும்
௬௫ [2]வறளடம்பின் மலர்மலைந்தும்
புனலாம்பற் பூச்சூடியு
நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோண்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்
௭௦ கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ[3]
திருஞ்செருவி னிகன்மொய்ம்பினோர்
கல்லெறியுங் கவண்வெரீஇப்
புள்ளிரியும் புகர்ப்போந்தைப்
௭௫ பறழ்ப்பன்றிப் பல்கோழி
யுறைக்கிணற்றுப் புறச்சேரி
மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்
கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல
௮௦ நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாப்பண்

(பாடம்) 1. 'கருந்தொழுதி.' 2. 'வறளடும்பின்.'
3. 'பிறக்கொடாஅது.'

ணிலவடைந்த விருள்போல
வலையுணங்கு மணன்முன்றில்
வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த
௮௫ வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்
சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்
மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்[1]
௯௦ புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா
துவவுமடிந் துண்டாடியும்
புலவுமணற் பூங்கானன்
௯௫ மாமலை யணைந்த கொண்மூப் போலவுந்
தாய்முலை தழுவிய குழவி போலவுந்
தேறுநீர்ப் புணரியொ டியாறுதலை மணக்கு
மலியோதத் தொலிகூடற்
றீதுநீங்கக் கடலாடியு
௧௦௦ மாசுபோகப் புனல் படிந்து
மலவ னாட்டியு முரவுத்திரை யுழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டு
மகலாக் காதலொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
௧௦௫ பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத்
துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்து
மட்டுநீக்கி மதுமகிழ்ந்து
மைந்தர் கண்ணி மகளிர் சூடவு

(பாடம்) 1. 'மகிழ்ந்தும்.'

௧௧0 மகளிர் கோதை மைந்தர் மலையவு
நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கிக்
கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும்
பாட லோர்த்து நாடக நயந்தும்
வெண்ணிலவின் பயன்றுய்த் துங்
௧௧௫ கண்ணடை இய கடைக்கங்குலான்
மாஅகாவிரி மணங்கூட்டுந்
தூஉவெக்கர்த் துயின்மடிந்து
வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன்றெருவி
௧௨0 னல்லிறைவன் பொருள்காக்குந்
தொல்லிசைத் தொழின்மாக்கள்
[1]காய்சினத்த கதிர்ச்செல்வன்
றேர்பூண்ட மாஅபோல
வைகறொறு மசைவின்றி
௧௨௫ யுல்குசெயக் குறைபடாது
வான்முகந்தநீர் மலைப்பொழியவு
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேற்றவு
௧௩0 நிலத்தினின்று நீர்ப்பரப்பவு
மளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
யருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
௧௩௫ புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம
பொதிமூடைப் போரேறி

(பாடம்) 1. 'காய்சினக் கதிர்ச்செல்வன்.'

மழையாடு சிமய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
௧௪௦ கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
யேழகத் தகரோ டுகளு முன்றிற்
குறுந்தொடை நெடும்படிக்காற்
கொடுந்திண்ணைப் பஃறகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி[1]
௧௪௫ மழைதோயு முயர்மாடத்துச்
சேவடிச் செறிகுறங்கிற்
பாசிழைப் பகட்டல்குற்
றூசுடைத் துகிர்மேனி
மயிலியன் மானோக்கிற்
௧௫௦ கிளிமழலை மென்சாயலோர்
வளிநுழையும் வாய்பொருந்தி
யோங்குவரை மருங்கி னுண்டா துறைக்குங்
காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
௧௫௫ வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவணத்து
மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்திய
௧௬௦ மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்
வருபுன றந்த வெண்மணற் கான்யாற்
றுருகெழு கரும்பி னொண்பூப் போலக்
கூழுடைக் கொழுமஞ்சிகைத்[2]
தாழுடைத் தண்பணியத்து[3]

(பாடம்) 1. 'பேரிடைகழி.' 2. 'மிஞ்சிகை.'
3. 'தண்பண்ணியத்து.'

கசுரு வாலரிசிப் பலிசிதறிப்
பாகுகுத்த பசுமெழுக்கிற்
காழூன்றிய கவிகிடுகின்
மேலூன்றிய துகிற்கொடியும்
பல்கேள்வித் துறைபோகிய
கஎ0 தொல்லாணை நல்லாசிரிய
ருறழ்குறித் தெடுத்த வுருகெழு கொடியும்
வெளிலிளக்குங் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
கஎரு மிசைக்கூம்பி னசைக்கொடியு
மீன்றடிந்து விடக்கறுத்
தூன்பொரிக்கு மொலிமுன்றின்
மணற்குவைஇ மலர்சிதறிப்
பலர்புகுமனைப் பலிப்புதவி
கஅ0 னறவுநொடைக் கொடியோடு
பிறபிறவு நனிவிரைஇப்
பல்வே றுருவிற் பதாகை நீழற்
செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பிற்
செல்லா நல்லிசை யமரர் காப்பி
கஅரு னீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்
குடமலைப் பிறந்த வாரமு மகிலுந்
தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங்
கக0 கங்கை வாரியுங் காவிரிப் பயனு
மீழத் துணவுங் காழகத் தாக்கமு
மரியவும் பெரியவு நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்

நீர்நாப் பண்ணு நிலத்தின் மேனு
கசுரு மேமாப்ப வினிது துஞ்சிக்
கிளைகலித்துப் பகைபேணாது
வலைஞர்முன் றின் மீன்பிறழவும்
விலைஞர்குரம்பை மாவீண்டவுங்
கொலைகடிந்துங் களவுநீக்கியு
உOO மமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு
நல்லாவொடு பகடோம்பியு
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணிய மட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
உOரு கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவு மொப்ப நாடிக்
உகO கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் [குறைபடாது
பல்பண்டம் பகர்ந்துவீசுந்
தொல்கொண்டித் துவன்றிருக்கைப்
பல்லாயமொடு பதிபழகி
வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற்
உகரு சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையு
முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
உஉO வாரேன் வாழிய நெஞ்சே கூருகிர்க்
கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்

பிறர்பிணி யகத்திருந்து பீடுகாழ் முற்றி
யருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிப்புக் காங்கு
உஉரு நுண்ணிதி னுணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்
துருகெழு தாய மூழி னெய்திப்
பெற்றவை மகிழ்தல் செய்யான் செற்றோர்
கடியரண் டொலைத்த கதவுகொன் மருப்பின்
உ௩0 முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றா
ளுகிருடை யடிய வோங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத்
தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு
உ௩ரு வேறுபல் பூளையோ டுழிஞை சூடிப்
பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச
மாக்க ணகலறை யதிர்வன முழங்க
முனைகெடச் சென்று முன்சம முருக்கித்
தலைதவச் சென்று தண்பணையெடுப்பி
உ௪0 வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி
மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக்
கராஅங் கலித்த கண்ணகன் பொய்கைக்
கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச்
செறுவும் வாவியு மயங்கி நீரற்
உ௪ரு றறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவுங்
கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி
யந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியிற்
உ௫0 பருநிலை நெடுந்தூ ணொல்கத் தீண்டிப்

பெருநல் யானையொடு பிடிபுணர்ந் துறையவு
மருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் றீந்தொடை யோர்க்கும்
௨௫௫ பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச்
சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி
யழல்வா யோரி யஞ்சுவரக் கதிர்ப்பவு
மழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவுங்
கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
௨௬௰ பிணந்தின் யாக்கைப் பேய்மக டுவன்றவுங்
கொடுங்கால் மாடத்து நெடுங்கடைத் துவன்றி
விருந்துண் டானாப் பெருஞ்சோற் றட்டி
லொண்சுவர் நல்லி லுயர்திணை யிருந்து
பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்த்
௨௬௫ தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக்
கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட
வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நண்பகற் குழறவு
மருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்
௨௭௰ பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற
மலையகழ்க் குவனே கடறூர்க் குவனே
வான்வீழ்க் குவனே வளிமாற் றுவனெனத்
தான்முன்னிய துறைபோகலிற்
பல்லொளியர் பணிபொடுங்கத்
௨௭௫ தொல்லருவாளர் தொழில்கேட்ப
வடவர் வாடக் குடவர் கூம்பத்
தென்னவன் றிறல்கெடச் சீறி மன்னர்
மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாண்
மாத்தானை மறமொய்ம்பிற்

உஅ0 செங்கண்ணாற் செயிர்த்து நோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
விருங்கோவேண் மருங்குசாயக்
காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கிப்
உஅரு பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயிறொறும் புதைநிறீஇப்
பொருவேமெனப் பெயர்கொடுத்
உகூ0 தொருவேமெனப் புறக்கொடாது
திருநிலைஇய பெருமன்னெயின்
மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி
விசிபிணி முழவின் வேந்தர் சூடிய
பசுமணி பொருத பரேரெறுழ்க் கழற்கால்
உகூரு பொற்றொடிப் புதல்வ ரோடி யாடவு
முற்றிழை மகளிர் முகிழ்முலை திளைப்பவுஞ்
செஞ்சாந்து சிதைந்த மார்பி னொண்பூ
ணரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்
றிருமா வளவன் றெவ்வர்க் கோக்கிய
ஙOO வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் றோளே.

## ௩. பொருட்பாகுபாடு

### (௧ - ௮) காவிரியாற்றின் சிறப்பு

குடகமலையினிடத்தே தோன்றி என்றும் நீர் அறாது ஒழுகும் இயல்பினதாய்ச் சோழநாட்டை வளம்படுத்து வருகின்ற காவிரியாற்றின் சிறப்பு முதற்கட் சொல்லப்படுகின்றது. மழை வறக்குங் காலத்தில் சுக்கிரன் எனப்படும் வான்மீன் கீழ்த்திசையினின்று மேற்றிசையிற் செல்லாமல் தென்றிசைப் பக்கமாய்ச் செல்லுமென்பதும், மழைத்துளியைப் பருகி உயிர்வாழ்கின்ற வானம்பாடிப்புள் அது பெறுமையின் அப்போது மிக வாடுமென்பதும், இத்தன்மையாக மழைபெய்யாது மாறிப்போன அவ் வற்கட காலத்திலும் காவிரியாறு நீர்வற்றாது ஒழுகிப்போய் வயல் நிலங்களை நிறைத்து அங்கே பொற்றுகளையும் திரட்டித் தொகுக்குமென்பதும் சொல்லப்படுகின்றன.

### (௯ - ௧௯) சோழநாட்டு மருதநிலவளம்

வயல்கள் என்றும் மாறாமல் விளைந்துகொண்டிருக்கின்றன. அங்கே கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்ற கொட்டில்கள் பல இருக்கின்றன. அவற்றில் அதனைக் காய்ச்சும்போது உண்டாகும் தீப்புகைபட்டுப் பக்கத்தே வயல்களில் மலர்ந்த நெய்தற்பூக்கள் அழகுகெட்டு வாடுகின்றன. காய்த்த செந்நெற்கதிரை நிரம்ப உண்டு வயிறு பருத்த முற்றின எருமைக்கன்றுகள் ஆங்காங்குள்ள நெற்கூடுகளின் நீழலிலே உறங்கிக் கொண்டிருக்கின்றன. குலை நெருங்கின தென்னை குலைவாழை பாக்குக்காயையுடைய கமுகு மா பனை முதலிய மரங்களும் மஞ்சள் சேம்பு இஞ்சி முதலிய செடிகளும் அடர்ந்து வளர்ந்திருக்கின்றன; என்பது சொல்லப்பட்டது. இதுகாறுங் காவிரியாறுஞ் சோழ

நாட்டின் வளம் பொதுவகையாற் கூறி இனிப் பாக்கம் கழி முதலியவற்றின் சிறப்பை விரித்துக் கூறப்புகுகின்றார்.

(உ௦ - உ௭) பாக்கம்

பாக்கங்களிலே அகன்ற வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. அவ் வீட்டு முற்றங்களிலே உலரவைத்திருக்கும் நெல்லுக்குக் காவலாய் இருக்குஞ் சிறு பெண்கள் ஒளி விளங்கு நெற்றியும் கள்ளம் அறியாத பார்வையும் திருந்திய அணிகலங்களும் உடையர்; இவர்கள் அந் நெல்லைத் தின்ன வருங் கோழிகளை வெருட்டும் பொருட்டு எறிந்த சுறவுக் குழைகள்[1] அம் முற்றத்திற் சிதறிக்கிடந்து, அங்கே சிறு பையன்கள் மூன்று உருள் உடைய சிறிய தேரைக் குதிரையின்றி இழுத்துக்கொண்டு வருகையில், அதன் உருள்களை இடறி அச் சிறுதேர் போகாமல் வழிமுன்னை விலக்குகின்றன.[2] தாம் மனங்கலங்குதற்குக் காரணமான பகை தமக்குச் சிறிதுமில்லாமையால் மனக்கொழுமையினையுடைய பல குடிகள் நிறையப் பெற்றிருக்கின்றன அப் பாக்கங்களெல்லாம்.

(உ௮ - ௩௬) படப்பை முதலியன

இனி ஒன்றற்கொன்று அருகிலுள்ள பல ஊர்களையுடைய நீண்ட சோழநாட்டில் எங்குஞ்சென்று வெள்ளிய உப்பை விலைசெய்து நெல்லை ஏற்றிக் கொண்டுவந்த வலிய படகுகள் பந்தியிலே நிற்குங் குதிரைகளைப்போலத் தறிகதோறுங் கட்டப்பெற்றிருக்கும் உப்பங்கழிகள் சூழ்ந்த

1. இக் காலத்தில் இதனைச் சிமிக்கி என வழங்குவர்.
2. "பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்
நற்சிறு ரூர்தலி னங்கைமார் விரீஇ
உற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை
மற்றத்தே ருருள்கோடா வளமை சான்றவே."

என்றார் சிந்தாமணியினும்.

நெய்தல் நிலத்துத் தோட்டங்களும், மனவெழுச்சி தருதற் கேதுவான புதுவருவாயினையுடைய தோப்புகளும், அத் தோப்புகளுக்குப் புறம்பேயுள்ள பூஞ்சோலைகளும், முகிற் கறை சிறிதுமில்லாது தெளிந்த வானத்தில் திங்களைச் சூழ்ந்து மகம் என்னும் வான்மீன் விளங்கினாற் போன்ற கரையினை அல்லது கோயிலையுடைத்தாய் மணங்கமழும் பல வண்ணப்பூக்கள் நிரம்பியிருத்தலாற் பலநிறமுடைத்தாய்த் தோன்றும் பொய்கைகளும், இம்மையிலும் மறுமையிலும் காமவின்ப நுகர்ச்சியினைப் பயக்கும் இணைந்த ஏரிகளும், அக் காவிரிப்பூம் பட்டினம் எங்கும் இருக்கின்றன.

(௪௦ - ௫௦) சோறிடும் அட்டிற் சாலைகள்

கதவுகளெல்லாம் புலியுருக்கள் செதுக்கப்பட்டன வாய்த் தம்வாய் பொருந்தப் பெற்றிருப்பத், திருமகளை எழுதிய திண்ணிய மதில்கள் அமைந்து இம்மையிற் புகழ் பரம்புதற்குக் காரணமான நற்சொல் வளரவும் மறுமை யினைத் தருதற்குரிய அறவொழுக்கம் நிலைபெறவுஞ் சிறந்த அடுக்களைகளில் மிகுதியாகச் சமைத்த சோற்றை வடித்த லால் ஒழுகுங் கொழுங் கஞ்சியானது யாற்றில் வெள்ளம் வந்தாற்போல எங்கும் பரவி ஓடுவதாயிற்று; அக் கஞ்சி யைக் கண்டு பருகுதற்குச் சென்ற எருத்துமாடுகள் ஒன் றோடொன்று சண்டையிடுதலால் அது மண்ணொடு கலந்து சேறாய்ப் பின் தேர்கள் ஓடுதலாற் புழுதியாய் மேலெழுந்து பல வேறுவகையான சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்த வெள்ளிய அரண்மனையின்மேற் படிந்து வெண்ணீற்றிற் புரண்ட களிற்றியானைபோல் அழுக்கேறப் பண்ணுவ தாயிற்று.

(௫௧ - ௫௩)

இன்னும், குளிர்ந்த கிணறுகள் பொருந்தப் பெற்றன வாய்ப் பெரிய எருத்து மாடுகள் நிற்கும் பலசாலைகளும்,

தவ ஒழுக்கம் நடைபெறும் அமணர் பௌத்தருடைய பள்ளிகளும் ஆங்காங்குள்ளன.

(௫௩ - ௫௮) காளிகோட்டம்

தாம் தங்கும் இளமரக்காவிலே விளங்கிய சடைமுடியுடையரான முனிவர் நெருப்பிலிட்டு வேட்கும் நெய்ப் புகையைக் கண்டு புயலென அஞ்சிய குயிற்சேவல்கள் அச் சோலையிலிருத்தலை வெறுத்துத் தம்பெடைகளோடும் அவ் விடத்தை விட்டுப்போய்ப் பூதங்கள் காவலாயிருத்தலாற் புகுதற்கு அரிய காளிகோட்டத்திற் சென்று தூதுணம் புறாக்களோடும் ஓர் ஒதுக்கிடத்தே தங்கியிருக்கும்.

(௫௯ - ௭௪) செம்படவர் குப்பம்

நெடுநாட்பட்ட மரங்களை யுடையவாய்ச் சண்டையிடுதற்குச் சமைத்த இடங்களும் நீர் அரித்த கரிய மணலும் உள்ள அகன்ற மேட்டுக் குப்பங்களில் குடியிருக்கும் பெரிய சுற்றத்தினையும் இனமான உறவினையுமுடைய வலிய தொழிலாளரான செம்படவர் கடல் இறாமீனின் சுட்ட தசையைத் தின்றும், வயல் ஆமையைப் புழுக்கின இறைச்சியை உண்டும், வயலிற் படர்ந்த அடப்பம்பூவைத் தலையிற் கட்டியும், நீரில் நின்ற ஆம்பல்மலரைப் பறித்துச் சூடியும், நீலநிறத்தினையுடைய வானத்தில் வலப்புறமாய் எழுந்து சுழன்று திரியும் நட்சத்திரங்களோடு கூடிய கிரகங்களைப் போலச் சண்டையிடாநின்ற அவ் வகன்ற மன்றத்திற் பலரும் ஒருங்கு திரண்டு கையொடு கைபிணைந்தும் படைக்கலங்களோடு படைக்கலந் தாக்கியும் உடம்போடு உடம்புபட உரைசியும் மிக்க சினத்தோடும் ஒருவர் ஒருவர்க்குப் பின்னிடையாது பெருஞ்சண்டை செய்து அதனானும் வலியடங்காராய் ஒருவரோடொருவர் மாறுபட்டுக் கல்லெ

வீசுகின்றனர். அங்ஙனம் அவர் எறியுங் கவண்கல்லிற்கு மிக அஞ்சிப் பச்சென்ற பனைமரத்தின்மேலிருந்த பறவைகள் பறந்துபோகின்றன.

(எ௫ - எஎ) புறச்சேரியின் தன்மை

குட்டிகளையுடைய பன்றியும் பல கோழிகளும் உறைவைத்த சிறிய கிணறுகளும் இருக்கின்ற அச் செம்படவர் புறச்சேரியிலே செம்மறிஆட்டுக்கிடாய்களோடு கௌதாரிப் பறவைகள் விளையாடா நிற்கும்.

(எஅ - கo௫) காவிரித்துறைச் சிறப்பு

நட்டகல்லிற் றெய்வமாய் நின்றவனுக்குக் கேடகத்தை வரிசையாவைத்து வேலை நிறுத்தியவாறுபோல நீண்ட தூண்டிற்கோலைச் சார்த்திவைத்திருக்கும் குறுகின கூரையையுடைய குடியிருப்புகளின் நடுவில், நிலவின் இடையிலே சேர்ந்த இருளைப்போல மீன்வலை யுலரும் வெள்ளிய மணல்பரந்த முற்றத்தின்கண், விழுதையுடைய தாழஞ்செடியின் கீழ் வளர்ந்த வெண்கூதாள மலராற் செய்த மாலையை யணிந்தவராய்ச் சினைகொண்ட சுறுமீன் கொம்பை நட்டு அதனையே இருக்குமிடமாக ஏற்றிய வலிய கடற்றெய்வத்தின் பொருட்டாக மடலையுடைய தாழைமலரைச் சூடியும், பொரிந்த மரத்தினையுடைய பனையின் கள்ளைக் குடித்தும், புல்லிய தலையினை யுடைய செம்படவர் பசிய தழையினை யுடுத்த தம் பெண்டிரோடும் பரந்த பனிக்கடலில் மீன் பிடிக்கவுஞ் செல்லாது அத் தொழிலைவிட்டு முழுமதி விளங்கும் உவாநாளிலே தாம் வேண்டுவன உண்டு விளையாடியும், பின் புலால்நாற்றம் வீசுகின்ற மணலையுடைய பூங்கானற்சோலையில் கரியமலையைப் பொருந்திக்கிடந்த செக்கர்மேகம் போலவும் தாயின் கொங்கையைத் தழுவிக் கிடந்த மகவைப்போலவும் தெளிந்த நீரையுடைய கட

லொடு காவிரியாறு சென்று கலக்கும் மிகக் குளிர்ந்து முழங்கா நின்ற புகார்முகத்தில் தீவினைபோகக் கடல்முழுக் காடியும், பின் அவ்வுப்புநீங்க வேறுநீரிலே குளித்தும், நண்டுகளைப் பிடித்து ஆட்டியும், உலவுகின்ற அலையிற்போய் அதனை உழக்கியும், பாவைசெய்தும், ஐம்பொறிகளானும் நுகரப்படுவனவெல்லாம் நுகர்ந்து மயங்கியும், அவர்கள் ஒருவரை யொருவர் நீங்காத காதற்கிழமை யுடையராய், இவ்வாறு பகற்பொழுதெல்லாம் போக்குதற்குக் காரண மாவதாய்ப் பெறுதற்கரிய பழஞ் சிறப்புக்களையுடைய சுவர்க்க நாட்டை ஒப்பதாய் என்றும் பொய்யாமல் நீர் வருதலையுடையதாய்ப் பூக்கள் நிறைந்த காவிரித்துறை விளங்குமென்க.

(௧௦௯ - ௧௧௫) கடையாமச் சிறப்பு

தங்கொழுநரைப் புணர்ந்த அழகிய மங்கையர் பட்டாடைகளைக் களைந்தெறிந்து வெண்டுகில் உடுத்தவராய்த் தேனுண்டலை விடுத்துக் காமவின்பச் சுவைத்தேனை நிறைய உண்ணுநின்று தங்காதலர் சூடிய மாலையைத் தமதென்றெடுத்துச் சூடிக்கொள்ளவும், தங் காதலிமார் மலைந்த கோதையைத் தமதென்று அவர் காதலர் அணிந்துகொள்ளவுமாக அவர் காமவின்பச் சுவை நுகர்கின்ற, உயர்ந்த மாடங்களில் எரியும் விளக்கங்களைப் பார்த்து முன்வளைந்த கட்டுமரத்தைக் கடலிடத்தே கொண்டு சென்ற பரதவர் அவற்றை எண்ணுநிற்பவும், அந் நகரத்தி லுள்ளார் இரவில் முன் யாமத்துப் பாட்டுக் கேட்டும் நாடகம் பார்த்தும் வெண்ணிலவிற் பெறும் பயன்களைத் துய்த்தும் கண்ணுறக்கம் பெற்ற கடையாம மென்க.

(௧௧௬ - ௧௨௫) சுங்கங்கொள்வோர் நிலை

அவ் வியாமத்திலே, பெரிய காவிரியாறு பலவயி னிருந்த பூக்களின் மணமெல்லாம் திரட்டிக்கொண்டு வந்து

சேர்க்கும் தூய எக்கர் மணலில் அயர்ந்து உறங்கிய வண்ண மாய், வெள்ளிய பூங்கொத்தும் மடலும் உள்ள தாழை யினையும் கரையினையுமுடைய அகன்ற பண்டசாலைத் தெரு வில் நல்ல அரசனது பொருளைப் பிறர் கவராமற் காக்கும் அடிப்பட்ட புகழினையுடைய காவற் றொழிலாளர் காயுஞ் சினத்தையுடைய வெங்கதிர்ச் செல்வனுடைய பகலவனது தேரிற் கட்டிய புரவி ஒரு நொடிப்பொழுதாயினும் மடிந் திராது இயங்குதல்போல நாடோறும் இளைப்புறாது சுங்கங் கொள்ளும்படியாக இருப்ப ரென்க.

(௧௨௫ - ௧௩௬) பண்டசாலை முற்றம்

குறைவின்றி முகந்த நீரை முகில் மலையிலே பொழி யவும், மலையிற் பொழிந்த நீர் கடலிற் சென்று பரவவும் மாரிக்காலத்தே பெய்தல் போலப் பிறநாடுகளி லிருந்து கடன்மேல் வந்தன கரையி லேறவும், தமிழ் நாடுகளி லிருந்து வந்து கரையிற் கிடப்பன பிற நாடுகளுக்குப் போகல்வேண்டி நீர்மேல் மரக்கலங்களிற் சேரவுமாக, அறிவான் அளந்தறிதற் கரியவாகவுள்ள பல பண்டங்களும் வரம்பறியப்படாவாறு வந்து தொக, அரிய காவலமைந்த பெரிய சுங்கச்சாவடியிலே காவற்காரன் சோழ மன்னர் அடையாள முத்திரையான புலியை இலச்சினையாக இட்டுப் பின் அவற்றை வெளியே போக்கினமையால், மதித்தறியப்பட்ட அப் பல பண்டங் களும் பொதிந்து வைக்கப்பட்ட மூட்டைப்போர்மேல் ஏறி முகில் உலாவப்பெறுங் குவட்டினையுடைய பெரிய மலைப் பக்கங்களிலே விளையாடும் வருடை மான்களின் றொற்றம் போலக் கூரிய நகங்களையுடைய ஆண் நாய்கள் ஆட்டுக் கிடாய்களோடு குதிக்கும் பண்டசாலை முற்றமென்க.

(௧௩௭—௧௫௮.) அங்காடித் தெரு

அணுக அணுகப் படிகள் தொடுக்கப்பட்டு அமைந்த நீண்ட ஏணிகள் சார்த்தியிருக்கும் சுற்றுத் திண்ணைகளும்,

